# உங்களுக்கு முற்றிலும் புது மாதிரியான இரு பவுடர்கள்









## ஸாண்டால்

சந்தனத்துடன் கூடிய
பால்கம் பவுடர்...

## ஸாண்டல் வுட் டாய்லட் பவுடர்

சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது...

## டி.எஸ்.ஆர். & கோ

கும்பகோணம்

A. K. GOPAL & CO

ஏஜண்டுகள் : மெஸர்ஸ் தாமஸின் டிரேடிங் கார்ப்பொரேஷன், 1, டாக்கர் சத்திரம் லேன், மேற்கு புலிவார் ரோடு, திருச்சி ○ மெஸர்ஸ் கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, சரத்போஸ் ரோடு, கல்கத்தா-26

இன்று
திரைப்படச்
சரித்திரத்திலே
தனிச் சிறப்புடன்
வெளிவருகிறான்



ஜெமினியின்

# வஞ்சிக்கோட்டை வாலிபன்

சென்னை

வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி

மூன்று தியேட்டர்களிலும் மற்றும் தென்னாடெங்கும்

எங்கள் குழலோசை எல்லோர்க்கும் இனிமை தரும்

சென்னை சித்ரா, பிராட்வே, காமதேனு, சயானி

மற்றும் தென்னுடெங்கும்

எப்ரல் 14௳ முதல்

எம்.ஏ.வி பிக்சர்ஸ்

சம்பூர்ண

# ராமாயணம்

டைரக்ஷன் K. சோமு · திரைக்கதை வசனம் A.P. நாகராஜன்

சங்கீதம் K.V. மஹாதேவன் · பாடல்கள் மருதகாசி

தயாரிப்பு M.A. வேணு

BHARAT STUDIO

MAV PICTURES

ஒரு வாரத்திற்கு முன்னதாகவே உங்கள் சீட்டுகளை ரிசர்வு செய்து கொள்ளலாம்




ஒரு காலனைக் கொண்டே அதிகமான இடத்திற்குப் பூசமுடியும்

உட்புறமோ, வெளிப்புறமோ, எந்தப்புறமானாலும் பூசலாம்

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., PRIVATE LTD.**

CALCUTTA • BOMBAY • MADRAS • NEW DELHI • KANPUR

# கல்கி

## புத்தாண்டு மலர் பொருள் அடக்கம்

★★★



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

○★○

மணியம்



மலர் 17 இதழ் 37

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஹேவிளம்பி பங்குனி 31உ.

# விளம்பியே, வருக! வருக!

புதிய தமிழ் ஆண்டு வருகிறது. விளம்பி வருடம் நாளை பிறக்கப் போகிறது. நல்ல சூழ்நிலையில் வரும் இந்தப் புதிய ஆண்டுக்கு நல்வரவு கூறுகிறோம். "விளம்பியே! வருக! வருக!" என்று மனமுவந்து வரவேற்பு கூறுகிறோம்.

விளம்பி ஆண்டு தமிழ் நாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் என்ன கொண்டுவரப் போகிறது என்று நம்மால் சொல்ல முடியாது. ஆனால் அது என்ன கொண்டு வர வேண்டும் என்று நாம் விரும்புகிறோமோ அவற்றைச் சொல்லக் கூடும்.

ஹே விளம்பி ஆண்டில் தமிழ் நாட்டின் ஒரு மூலையில் அரசியல் கலவரம் ஏற்பட்டுப் பல மக்கள் உயிர் இழந்தார்கள். பல குடும்பங்கள் துயரமுற்றன. ஏழை எளிய மக்கள் அநாதரவாக நின்று கண்ணீர் விட்டுக் கலங்கினர். இந்தமாதிரிக் கலவரங்கள் புதிய விளம்பி ஆண்டில் எந்த உருவத்திலும் எந்தச் சமயத்திலும் எந்த இடத்திலும் தலைகாட்டாமல் இருக்க வேண்டும்.

சென்ற ஆண்டில் இயற்கையின் கருணை ஓரளவு தமிழ் நாட்டுக்கு இருந்தது. வேண்டியளவுக்கு இல்லையானாலும் சுமாரான மழை பெய்தது. விளம்பி வருடத்தில் இயற்கையின் கருணை பரிபூரணமாக வேண்டும். மழை தாராளமாய்ப் பொழிந்து நிலங்கள் நன்றாக விளைய வேண்டும். செந்நெல்லும் கன்னலும் கதலியும் தென்னையும் செழிக்க வேண்டும். 'இல்லை' என்ற கொடுமை தமிழ் நாட்டில் இல்லையாக வேண்டும்.

தமிழ் மக்கள் ஒழுக்கத்திலும் பண்பாட்டிலும் சிறப்புடன் உயர வேண்டும்.

அரசியல், சமூகம், தொழில், இலக்கியம், கலை ஆகிய எல்லாத் துறைகளிலும் தமிழ்நாடு முன்னேற வேண்டும். தமிழ் மக்கள் எல்லாரும் சகோதரர்கள் போல மனம் ஒத்து மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும்.

புதிய விளம்பி ஆண்டில் தமிழ் மக்களிடையே தெய்வ நம்பிக்கையும், தெய்வ பக்தியும் ஓங்கி வளர வேண்டும்.

இவை நம்முடைய உளம் நிறைந்த விருப்பம்; மனமார்ந்த கோரிக்கை; இதய பூர்வமான பிரார்த்தனை.

விடைபெற்றுச் செல்லும் ஹேவிளம்பி ஆண்டில் தமிழ் நாட்டின் குரலை ஏற்று ருஷ்ய நாடு மிகப் பெரிய ஒரு சாதனையை நிறைவேற்ற முன் வந்திருக்கிறது. தமிழ் மக்களின் அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள் அணு ஜலஜ குண்டு சோதனைகளை நிறுத்த வேண்டும் என்று சொன்ன யோசனையை ருஷ்யா ஏற்றுக் கொண்டு விட்டது. இதிலிருந்து மகத்தான பல நன்மைகளை இந்தப் புது ஆண்டில் உலகம் அடையப் போகிறது. தமிழ் நாட்டின் பெருமை உலகில் சுடர் விட்டுப் பிரகாசிக்கப் போகிறது.

** ** ** **

தமிழ் மக்களுக்கு அருமையான புத்தாண்டுப் பரிசாக இந்தக் கல்கி இதழ் வெளியாகி இருக்கிறது. புத்தாண்டு மலராகவே மலர்ந்திருக்கிறது.

ஒரு நாட்டின் மக்கள் தம் நாட்டில் பிறந்த பெரியோர்களைப் போற்ற வேண்டும். அப்படிப் போற்றுவதற்கு அறிந்திருப்பார்களானால், அவர்கள் நாளுக்கு நாள் முன்னேற்ற மடைவது நிச்சயம். பெரியோர்களைப் போற்றி வழிபடுவதற்கு அறியாத எந்தச் சமூகமும் நாளுக்கு நாள் நலிந்துவிடும்.

"அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என்பது பொய்யாமொழி புகன்ற திருவள்ளுவரின் தமிழ்மறை.

இதை மனத்தில் கொண்டே நடமாடும் தெய்வமாக நம் முன்னால் இருந்து வரும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரியாரின் தெய்வத் திரு உருவத்தை மலரின் முகப்புப் படமாக வைத்திருக்கிறோம். தமிழ் மக்கள் போற்றிக் கொண்டாட வேண்டிய தவமுனிவர் ஸ்ரீ சங்கராச்சாரியார். கருணை பொழியும் அவருடைய அருள் முகத்தை நேயர்கள் தரிசித்து மகிழ்ந்திருப்பார்கள்.

'கல்கி' நேயர்களுக்கென்று ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அருளியுள்ள ஆசிச்செய்தி மலரின் சிகரமாகத் திகழ்கிறது. சுவாமிகளின் இந்த அருள்வாக்கு விளம்பி ஆண்டு எல்லா விதங்களிலும் மக்களுக்கு நலன் கொடுக்கும் ஆண்டாகத் திகழும் என்னும் பரிபூரண நம்பிக்கையை நமக்கு அளிக்கிறது.

மலரில் சிறப்பாக விளங்குவது ராஜாஜி அவர்கள் தமிழ் மக்களுக்கு அளித்திருக்கும் புத்தாண்டு வாழ்த்து. ராஜாஜி அவர்கள் எதைச் சொன்னாலும், எதை எழுதினாலும் அதில் அரிய கருத்துக்கள் பொதிந்து திகழும். ஆழ்ந்து படிக்கப் படிக்க அக்கருத்துக்கள் புலனாகிக் கொண்டிருக்கும். இந்தப் புதிய ஆண்டின் முன்னேற்றம் வேறு துறைகளில் எப்படி இருந்தாலும் இலக்கியத் துறையில் விளம்பி ஆண்டு தமிழ் மக்களுக்கு அதிர்ஷ்ட வருஷமாகப் போகிறது என்பதற்கு இதை ஓர் அறிகுறியாகக் கருதுகிறோம்.

இந்த மலரின் அட்டை தெய்வத் தமிழ் நாட்டின் பண்பின் சின்னமாகத் திகழும் ஒரு தமிழ் அன்னையைத் தாங்கி இருக்கிறது. தமிழ் மக்களின் வாழ்க்கையும் கலையும் பிரிக்க முடியாதவை என்பதை எடுத்துக்காட்டுகிறது. அந்த அன்னை புதுப்பானைகளுக்குச் சித்திரம் தீட்டும் காட்சி. மங்கலக் கோலமிட்ட புதுப்பானைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைத்துத் திருமணம் நடத்துவது தமிழ் நாட்டின் வழக்கம். இந்த விளம்பி ஆண்டில் வீட்டுக்கு வீடு மங்கலங்கள் பொங்கப் பிரார்த்திக்கிறோம்.

நம்முடைய பிரார்த்தனைகளை யெல்லாம் நிறைவேற்றி வைக்கவரும் விளம்பி தமிழ்ப் புது வருஷத்தை ''வருக! வருக!'' என்று உளம் கனிந்து வரவேற்கிறோம்.

# நடவாதது நடந்து விட்டது!

ருஷ்ய சர்க்கார் உலக மக்கள் அனைவருடைய பாராட்டுதலுக்கும் உரியவர்கள். அவர்களை நாம் மனமாரப் பாராட்டுகிறோம்.

ருஷ்ய சர்க்கார், தாங்களாகவே அணுகுண்டு, ஜலஜன்குண்டு சோதனைகளை நிறுத்தி விட ஒருதலை முடிவுக்கு வந்திருப்பதாகச் சொல்லி உலக மக்களின் பெரும் பாராட்டுதலுக்குரிய நிலையை அடைந்து விட்டார்கள்! ஆயினும் உலகம் அவர்களைத் தக்கபடி பாராட்ட முன்வரவில்லை!

* * *

ருஷ்யத் தலைவர்கள் பாரத நாட்டுக்கு விஜயம் செய்தார்கள். அப்போது சென்னைக்கும் வந்திருந்தார்கள். சென்னைக்கு வந்திருந்த போது, நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்களைச் சந்தித்து நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ராஜாஜியிடம் அவர்கள் பேசிக் கொண்டிருந்த பேச்சு அவர்கள் உள்ளத்தை எவ்வளவு ஆட்கொண்டது என்பது இவ்வருஷப் பொங்கலின் போது வெளியான ராஜாஜி – குருசேவ் கடிதங்களிலிருந்து நன்கு தெரிந்தது.

ஆனால் ராஜாஜியுடன் பேசி முடித்த மாத்திரத்திலேயே, அவர்கள் அணுகுண்டு சோதனைகளையும், உற்பத்தியையும் நிறுத்தி விடத் தயார் என்று உலகறிய அறிவித்தார்கள். அமெரிக்கா, இவ்விஷயத்தில் தங்களுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டால் இரண்டு வல்லரசுகளுமே சேர்ந்து நிறுத்தி விடலாம் என்று சொல்லி வந்தார்கள். ஆனால் அமெரிக்கத் தலைவர்களோ போகாத ஊருக்கு வழி சொல்வது போல், தட்டிக் கழித்து வந்தார்கள்.

இவ்விஷயம் பற்றி ருஷ்யத் தலைவர்கள் உலக வல்லரசுத் தலைவர்களுக்கெல்லாம் ஓயாமல் கடிதங்கள் எழுதி வந்தார்கள். அமெரிக்கா எள்ளி நகையாடிப் பரிகசித்து வந்தது. வல்லரசுப் பெருந் தலைவர்கள் இவ்விஷயமாகக் கூடிப் பேசலாம் என்று ருஷ்யத் தலைவர்கள் சொன்னதற்கும், அமெரிக்கா பிடி கொடுக்காமல் பேசி வந்தது. இப்பொழுது ராஜாஜி சொன்ன யோசனையே சரி என்று கருதி, யார் எப்படியிருந்த போதிலும், நாம் இந்தச் சோதனைகளைச் செய்வதில்லை என்று ''ஒரு தலை முடிவு'' செய்துவிட்டதாக அறிவித்திருக்கிறார்கள்.

இதையும் இப்போது அமெரிக்கர்கள் ''பிரசார தந்திரம்'' என்று சொல்லி ருஷ்யத் தலைவர்களது மகத்தான முடிவைக் குறைத்துப் பேசப் பார்க்கிறார்கள்.

உலக விஞ்ஞானிகளெல்லாம், இந்த அணுகுண்டு சோதனைகளினால் உலகம் தாங்கக் கூடிய அளவுக்குமேல் காற்றும் நீரும் விஷமயமாகி விட்டன என்று சொல்லி விட்டார்கள்.

இந்தச் சமயத்தில் ருஷ்யா செய்துள்ள முடிவை ஆதரித்து, அதையொட்டி அமெரிக்காவும் பிரிட்டனும் அணுசோதனைகளை நிறுத்த முயற்சி எடுக்காமல் பரிகசிப்பது மிகவும் பரிதாபம்.

ருஷ்யா செய்துள்ள முடிவு மிக தீர்க்க தரிசனமான முடிவு. தர்மத்தின் அடிப்படையில் செய்யப்பட்ட முடிவு. உலக மக்களின் நலனில் அக்கறை கொண்டு செய்யப்பட்ட முடிவு. இதை மனப்பூர்வமாக இந்தியா போன்ற நடுநிலைமை வகிக்கும் நாடுகள் வரவேற்று, அமெரிக்காவையும் பிரிட்டனையும் இந்தப் பேய்க் குண்டுகளின் பிடியிலிருந்து விடுபடும்படி செய்ய வேண்டும். இதற்குப் பாரத சர்க்கார் வழிகாட்ட வேண்டும்!

அமெரிக்காவிலிருந்து கடன் உதவி கிடைக்கும் இந்தச் சமயத்தில் அமெரிக்க சர்க்காருக்குப் பிடிக்காத விஷயங்களைச் சொல்வானேன் என்று மௌனமாக இருப்பது சரியல்ல.










ருஷ்யா அணுகுண்டு சோதனைகளை நிறுத்திவிட்டதாக அறிவித்த செய்தி ஸ்புட்னிக் விட்டபோது உண்டாக்கிய அதிர்ச்சியைவிடப் பேரதிர்ச்சியை அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் உண்டாக்கியிருக்கிறது.

ராஜாஜி ஒருதலை முடிவு செய்து குண்டுகளைத் தூர எறியுங்கள் என்று சொன்ன போது, இது நடக்காத காரியம் என்று சொல்லி வந்தார்கள். காந்தி மகானின் சத்தியாக்கிரகத்தினால் இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைக்குமோ என்று கேட்டவர்கள், சுதந்திரம் கிடைத்தவுடன் வாய்மூடி மௌனிகளாகி விட்டனர். அதேபோல் உலக வல்லரசுகளுக்கு இரண்டு ஆண்டுகளாக ராஜாஜி இந்த அணுகுண்டு ஜலஜ குண்டுகளைத் தூர எறிந்து விடுங்கள், ஒரு கட்சிக்காக மற்றொரு கட்சி எதிர்பாராமல் தாங்களாகவே, தூர எறிந்துவிட ஒருதலை முடிவு செய்யுங்கள் என்று கூறி வந்தார். அப்போது இது நடக்காத காரியம் என்று உலக மக்கள் சொல்லி வந்தார்கள். இன்று, அந்த நடக்காத காரியம் நடந்து விட்டது. அன்று 'நடக்காத காரியம்' என்று சொல்லி வந்தவர்களெல்லாம் இன்று வாய்மூடி மௌனிகளாகி விட்டனர்.

ஆனால் வாய் மூடி மௌனம் சாதிக்கும் சமயம் இதுவல்ல. அணுகுண்டு விஷத்தினால் பாதிக்கப்படும் உலக நாடுகளெல்லாம், ருஷ்யாவின் முடிவை ஆதரித்து, பிரிட்டனையும் அமெரிக்காவையும் வழிக்குக் கொண்டு வர வேண்டும்.

பிரிட்டனில் நல்ல சூழ்நிலை நிலவுகிறது. அணுகுண்டு பகிஷ்கார இயக்கம் வெகு வெற்றிகரமாக நடைபெறுகிறது. நாளுக்கு நாள் பலம் பெற்று வருகிறது. பிரிட்டிஷ் மக்கள், இந்த நல் இயக்கத்துக்குப் பாத யாத்திரை ஐம்பது மைல் செய்து, பெரும் ஆதரவு திரட்டி, தங்கள் சர்க்காரின் முடிவை மாற்ற முயற்சிகள் எடுத்து வருகிறார்கள்!

உலகப் பொதுமக்களின் ஆதரவு பெருகினால் நிச்சயம் நல்ல காரியம் நடைபெறும்! அணுகுண்டு ஜலஜ குண்டு விஷத்திலிருந்து உலகம் காப்பாற்றப்படும்.

# இலங்கையில் எழுத்துப் போராட்டம்!

இலங்கை சர்க்காரின் தீர்க்க தரிசனம் அற்ற குறுகிய போக்கு, இரண்டு ஏழைத் தொழிலாளர்களின் உயிரைப் பலி வாங்கி விட்டது. சிங்கள மொழிக்குச் சமமான அந்தஸ்து தமிழ் மொழிக்கு அளிக்க மறுக்கும் இலங்கை சர்க்கார், அங்குள்ள தமிழ் மக்களுக்கு மேலும் கொதிப்பை உண்டாக்கும் சில்லறைக் காரியங்களில் ஈடுபட்டு வருவது வருந்தத்தக்க விஷயமாகும். இலங்கை அரசாங்க பஸ்களில் சிங்கள 'ஸ்ரீ' எழுத்தை மாத்திரம் பொறிக்கச் சர்க்கார் முற்பட்டிருப்பது அத்தகைய நடவடிக்கைகளில் ஒன்று. இதை எதிர்த்துச் சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்துவதென்று தமிழ் அரசுக் கட்சியினர் திட்டமிட்டிருந்தார்கள். அதன்படி நடந்த போராட்டமானது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தில் முடிந்தது. அதன் விளைவாக, இரண்டு இந்தியத் தோட்டத் தொழிலாளர்கள் மாண்டனர் என்றும், சிலர் காயமடைந்தனர் என்றும் தெரிகிறது.

இதுபோல் சென்ற ஆண்டிலும் தமிழர்களின் மொழிப் போராட்டம் நடந்ததெனினும், அப்போது இலங்கை சர்க்கார் புத்திசாலித்தனமாகவும் ராஜதந்திரத்துடனும் நடந்து கொண்டதால், நெருக்கடி எதுவும் ஏற்படவில்லை. தமிழ்ப் பகுதிகளுக்கு அனுப்பப்படும் அரசாங்க பஸ்களில் தமிழ் 'ஸ்ரீ' எழுத்தையே பொறிக்க வேண்டும் என்பது தமிழ் மக்களின் கோரிக்கை. இந்தக் கோரிக்கைக்குச் சர்க்கார் இணங்குவதால், எவ்வித விபரீதமும் ஏற்பட்டு விடாது. அவர்களின் கௌரவம் எவ்விதத்திலும் குறைந்து விடாது. அவ்விதம் செய்வதால் தமிழுக்கு, சிங்கள மொழிக்குச் சமமான அந்தஸ்து அளித்ததாகவும் ஆகி விடாது. இந்த அற்பக் கோரிக்கைக்குக் கூடச் சர்க்கார் இணங்க விரும்பவில்லை. அதனால் தமிழர்கள் கொதித்து எழவும், போலீசார் துப்பாக்கியால் சுடவும் நேர்ந்து விட்டது.

கொழும்புக்கு அருகில் உள்ள ஓரிடத்தில் மொழி வெறியர்கள் கடை போர்டுகளில் உள்ள தமிழ் எழுத்துக்களைத் தார் பூசி அழிக்கும் கைங்கர்யத்தில் ஈடுபட்டதால் கலவரம் மூண்டது. அதன் விளைவாக மற்றும் இருவர் மாண்டதாக இலங்கைச் செய்திகள் கூறுகின்றன. இலங்கை சர்க்கார் தெய்வத் தமிழ் மொழிக்கு உரிய அந்தஸ்து அளிக்காததால், மொழி வெறியர்கள் மேலும் ஒரு படி முன் சென்று தமிழ் எழுத்துக்களைத் தார் பூசி அழிக்க முற்பட்டார்கள். ஏற்கெனவே, தங்கள் தாய் மொழிக்கு உரிய மதிப்பு அளிக்கப்படாததால் மனம் துடித்துக் கொண்டிருக்கும் தமிழ் மக்களுக்கு, மேற்படி செய்கை எவ்வளவு ஆத்திரத்தை உண்டாக்கியிருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

* * *

தமிழ்ப் பகுதிகளுக்குப் புதிய பஸ்களை அனுப்புவதாயின், தற்போதுள்ள சட்டத்தின்படி சிங்கள 'ஸ்ரீ' எழுத்து பொறித்த பஸ்களையே அனுப்ப வேண்டியிருக்கிறது என்று சர்க்கார் சமாதானம் கூறுகின்றனர். தீர்க்க தரிசனமற்ற முறையில், ஒரு பெரிய சமூகத்துக்கு விரோதமாகச் சட்டத்தை நிறைவேற்றி விட்டு, பிறகு சட்டம் இடம் கொடுக்கவில்லை என்று கூறுவது ஓர் அரசாங்கத்தின் மதிப்புக்கு உகந்ததல்ல. தமிழர்களின் சமூகத்துக்கு மனக் கொதிப்பை உண்டாக்கக் கூடிய ஒரு சட்டத்தை நிறைவேற்றியது முதல் தவறாகும். மக்கள் பலமாக எதிர்த்தும், அச்சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர முற்பட்டது இரண்டாவது தவறாகும். தங்கள் எதிர்கால வாழ்வை நிர்ணயிக்கும் பிரஜா உரிமைப் பிரச்னையும் மொழிப் பிரச்னையும் தீருவது எக்காலமோ என்று இலங்கை இந்தியர்கள் ஏங்கி வருகையில், பஸ்களில் எந்த எழுத்தைப் பொறிப்பது என்பது பற்றி அவர்கள் ஒரு போராட்டம் நடத்தும்படி நேர்ந்திருப்பது இலங்கை சர்க்காருக்குப் பெருமை அளிக்கக் கூடிய விஷயம் அல்ல என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

# புத்தாண்டு



கிரஹாம் அறிக்கையை இந்திய சர்க்கார் அடியோடு நிராகரித்து விடலாம்.
இந்திய சர்க்கார்
கிரஹாம் அறிக்கை




இந்தோனேஷ்யா இரு மாபெரும் வல்லரசுகளின் போட்டா போட்டிக்கு நிலைக்களமாகலாம்.
அமெரிக்கா
ருஷ்யா
இந்தோனேஷ்யா

# ஹேஷ்யங்கள்

காங்கிரஸ் வாதிகளிடையே அதிகரித்து வரும் ஒழுங்கீனம் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு, தீராத் தொல்லையாக முடியலாம்.




உணவுப் பற்றாக்குறை

தி.க. கிளர்ச்சி

தி.மு.க. எதிர்ப்பு

பல்வேறு பிரச்னைகளாலும் காமராஜ் மந்திரிசபை திக்குமுக்காடும்படி நேரிடலாம்.

# V. D. SWAMI
# & CO. PRIVATE LTD.



## IMPORTERS OF STEEL



**FOR YOUR REQUIREMENTS OF STEEL FROM WEST GERMANY**

PLEASE CONTACT US



HEAD OFFICE

**No. 2, MANGOE LANE**

**CALCUTTA**

**Telegrams: "METTRADING"**



BRANCHES

KASTURI BUILDINGS
CHURCHGATE
**BOMBAY-1**
Telegrams: "IRUMBU"

VANGUARD HOUSE
2nd LINE BEACH
**MADRAS-1**
Telegrams: "METTRADING"



## ஸ்ரீ சங்கராச்சாரியாரின் ஸ்ரீமுகம்

இந்தப் புதிய ஆண்டின் ஆரம்பத்தில் அதன் பெயருக்கேற்றபடி நாம் எல்லோரும் நிதானமாக யோசித்து, பகுத்தறிவுடன் காரியங்களைச் செய்து பயனடைவோமாக.

இந்த ஆண்டிற்குப் பெயரே விளம்பி விளம்பம் என்றால் தாமதம் அல்லது நிதானம் என்று பொருள்.

சம்ஸ்கிருத பாஷையில் பஞ்ச காவ்யங்களில் கிராதார்ஜுனீயம் என்பது ஒன்று. அதை இயற்றினவர் மகா கவியான பாரவி என்பவர். அந்த காவ்யத்தில் அனேக உயர்ந்த வசனங்கள் இருக்கின்றன. அவைகளில்,

**सहसा विदधीत न क्रियां**
**अविवेकः परमापदां पदम्**
**वृणते हि विमृश्यकारिणं**
**गुणलुब्धाः स्वयमेव संपदः**

என்பது ஒன்று. எந்தக் காரியத்தையும் முன் யோசனையின்றி அவசரமாகச் செய்யக்கூடாது. அவ்வாறு செய்வது அறிவின்மையாகும். அறிவின்மை ஆபத்துக்கிடமாகும். முன் யோசனையுடன் காரியங்களைச் செய்பவனை நற்குணங்களில் ஆவல் கொண்ட சம்பத்துக்கள் தாமாகவே வந்து அடைகின்றன. இவ்வாறு மகாகவி பாரவி கூறுகிறார்.




ரோஜா மார்க்
நெய்
ரசாயனச் சாலையில்
பரிசோதிக்கப்பட்டது
ஆதாரமான
சத்து நிறைந்தது
★
அக்மார்க்
நெய்யும் கிடைக்கும்
ROSE BRAND
PURE GHEE
LINGAM & Co
லிங்கம் & கோ, கோயமுத்தூர்
சேல்ஸ் டிப்போ:–14/66, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர்
M

# புது வருஷ வாழ்த்து

அன்று ஒரு அமெரிக்க நண்பருடன் பேசிக் கொண்டிருந்தேன். நம்முடைய சமய தத்துவங்களைப் பற்றியும், தருமம், நன்மை, தீமை, பாபம், புண்ணியம் இவற்றைப் பற்றியும் அவருடன் பேசும் போது, எல்லாம் பகவான் லீலை என்கிற நம்முடைய மகத்தான மதத் தத்துவத்தை அவர் மிக நன்றாக உணர்ந்தும் அனுபவித்தும் வருவதைக் கண்டு வியந்தேன். நம்முடைய புண்ணிய பூமியில் எந்த தேசத்தார், எந்த மதத்தாராயினும் சில காலம் இருந்து வந்தார்களானால் நம்முடைய மதத் தத்துவங்கள் அவர்கள் உள்ளத்தில் தாமாக ஊறி இடம் பெற்று விடுகின்றன. இது இந்த நாட்டின் விசேஷம். புகழ் பெற்ற ஒரு ஆங்கிலக் கவி நம்முடைய தேசத்தில் பல நாட்கள் இருந்து பழக்கப்பட்டவர் ஒரு நல்ல பாட்டு எழுதியிருக்கிறார். அதைப் படித்தால் நம்முடைய கீதா சாஸ்திரமாகவே இருப்பதைக் காணலாம் :

''மகனே, யாருமே உன்னை நம்பவில்லையாயினும் உன்னைப் பற்றி நீ உன் உள்ளத்தில் திடமாக இருப்பாயா? உன்னை நம்பாதவர்களை வெறுக்காமல் அவர்களின் சந்தேகத்துக்குச் சமாதானமும் கண்டு கொள்வாயா?

உன்னைத் துவேஷிப்பவர்களைக் கண்டு நீயும் உன் உள்ளத்தில் துவேஷத்துக்கு இடம் கொடுக்காமல் காப்பாற்றிக் கொள்வாயா?

இவ்வாறு உன் மனத்தைக் கட்டி ஆண்டு வந்தாலும் உன் சாதனையையும் வெற்றியையும் வெளியே காட்டிக் கொள்ளாமல் அடக்கத்தோடு இருப்பாயா? பெரிய ஞானியைப் போல் பாவம் காட்டியும் பேசவும் செய்யாமல் இருப்பாயா?

வெற்றி தோல்வி இரண்டையும் சமமாகக் கொள்வாயா? வெற்றியடைந்த போது மதிமயங்கிப் போகாமலும் தோல்வி நேர்ந்தபோது மனம் இடிந்து போகாமலும் இரண்டுமே நம்மை ஏமாற்றும் பேய்த்தேர் என்று உணர்ந்து சம சித்தத்துடன் நிற்பாயா?

மக்கள் கூட்டங்களில் பேசியும் பழகியும் செல்வாக்கு அடைந்தாலும் மெய் நெறி தவறாமல் இருப்பாயா?

அரமனைகளில் இடம் பெற்றாலும் கர்வமடையாமல் ஏழையைப் போலவே இருப்பாயா?

வேண்டியவர் வேண்டாதவர் என்றில்லாமல் எல்லாரையும் ஒரு தரமாகப் பாவிப்பாயா? யாரிடமும் அதிகப் பற்று வைக்காமல் நடந்து கொள்வாயா?

உனக்கு இட்ட காலத்தை வீண் போக்காமல் ஒவ்வொரு நாழியையும் உன் கடமை செலுத்திப் பயன்படுத்திக் கொள்வாயா?

இப்படிச் செய்ய ஆற்றல் பெற்றாயானால், மகனே, நீ தீரன் உலகத்தை வென்றவனாவாய். உனக்கு ஒரு குறையுமில்லை.''

இதுவே புது வருஷத்தில் அன்பார்ந்த தமிழ் மக்களுக்கு நான் சொல்வது.

ராஜாஜி

# வெள்ளெழுத்து நீங்குமா?

## மீராபென்

ஊர் திருவிழாவில் குடைராட்டில் சுற்றிச் சுற்றித் தலை கிறுகிறுத்துப் பார்வை மங்கிப் போகுமே, அதுவேதான் இன்றையத் தில்லி வாழ்க்கை. மத்திய அரசாங்க மந்திரிகளும், உத்தியோகஸ்தர்களும் அந்த மாயக் குடைராட்டில் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்; நாள் முழுவதும் சுற்றிக் கொண்டேயிருக்கிறார்கள். ஆண்டவன்தான் அவர்களைக் காப்பாற்ற வேண்டும். பல்வேறு பிரதேச ராஜ்யங்களுக்குப் பிரதிநிதிகளாகத் தில்லியில் வந்து குழுமியிருக்கும் லோக சபை அங்கத்தினர்களோ, பம்பரமாகச் சுற்றும் அந்தக் குடைராட்டில் உட்கார்ந்ததும், 'சாமி வந்துவிட்டது' என்பார்களே, அப்படி அவர்களையும் ஒரு இருள் வந்து மூடிக் கொள்கிறது.

இப்படிப் பொய்யும், மாயையும் பின்னிச் சூழ்ந்திருக்கும் இடத்தில், பாரத மக்களின் உண்மை நிலையைப் பிரதிபலிக்கும் சின்னம் அறவே இல்லாததில் வியப்பேது? திரும்பின இடமெல்லாம் பித்தலாட்டம், பொய், மோசம். தில்லியில் உள்ள ஜனத்திரளோ, சகஜமாக ஒரு ஊரில் இருக்கக்கூடிய ஜனக் கூட்டமல்ல. அங்கு நடப்பது எல்லாம் மாரீசன் கூத்து. இன்று, 'ராமலீலை' என்பார்கள்; நாளை, 'ராணுவக் கேளிக்கை' என்பார்கள்; 'குடியரசு தினக் கொண்டாட்டம்' என்று முரசு கொட்டுவார்கள்; 'ஹோலிப் பண்டிகை' என்று ஆர்ப்பரிப்பார்கள். இன்னும் என்னவெல்லாமோ சொல்லிச் சொல்லி நாலா திசைகளிலிருந்தும் ஜனத் திரளைத் திரட்டி வந்து சேகரித்திருக்கிறார்கள். போதாக் குறைக்கு இடைவிடாது சினிமாக் காட்சி, ரேடியோச் சத்தம், ஒலி பெருக்கி மூலம் பொய்ப் பிரசாரங்களை விடாது பொழிந்து கொண்டிருக்கும் பொதுக் கூட்டங்கள்!

இவ்வளவு ஜகஜ்ஜாலப் புரட்டல்களுக்கெல்லாம் சிகரம் போல மிளிர்வது, அயல் நாட்டுப் பிரமுகர்களுடையவும், அரசியல் வாதிகளுடையவும் நித்திய விஜயங்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் வரவேற்பு, உபசாரம், ராஜவிருந்து. பிறகு அணைத் திட்டங்களையும், சமுதாய நலத் திட்டங்களையும்—அயல்நாடுகளிலிருந்து வருபவர்களுக்குக் காட்டுவதற்காகவே அமைக்கப் பட்டவை—அவர்கள் ஒவ்வொருவரையும்



அழைத்துப் போய்க் காட்டுவது; முன்கூட்டிச் செய்துள்ள ஏற்பாட்டின்படி கிராம மக்களைக் கொண்டு அவர்களுக்கு மாலை அணிவிப்பது; அதற்கு மேலும், "இது எங்கள் நாட்டு மக்கள் அவர்களுடைய சொந்தக் கைகளால் செய்தது" என்று சொல்லி, 'கொட்டாங்கச்சி' அல்லது மொச்சைக் கொட்டையால் ஆன ஒரு பண்டத்தை வந்தவர்களுக்குக் கொடுப்பது. அவர்களும் "பாரத நாட்டு மக்களின் அதி ஆச்சரியகரமான முன்னேற்றங்களையும், ஜனநாயகத் துறையில் அவர்கள் அடைந்துள்ள அபிவிருத்தியையும் வார்த்தை கொண்டு அளக்க முடியாது" என்று முறை வைத்து வாயாரப் புகழ்வது.

இவை யாவும் ஆனந்தமாகத்தான் இருக்கும். யாருக்கு? தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டு காலத்தைக் கடத்திக் கொண்டு போகிறவர்களுக்கு. பூனை கண்ணை மூடிக் கொண்டால் உலகம் இருண்டு விடுமா?

பொழுதெல்லாம் உழைத்தும் உண்ண உணவின்றி ஏழைமையில் வாடும் ஜனங்களின் நடுவே, இங்கு ஒரு கிராமத்தில் நான் வசித்துக் கொண்டிருக்கிறேன். தினம் தினம் என் கண்ணில் படுவதும், பொழுது விடிந்தால் அஸ்தமித்தால் என் காதில் விழுவதும்; அயல் நாடுகளிலிருந்து விஜயம் செய்யும் அந்தப் பிரமுகர்களின் கண்ணிலும் காதிலும் பட்டால், அப்போதல்லவா அவர்களுக்கு உண்மை தெரியும்? அப்போதல்லவா இந்த நாட்டில் மக்களை வாட்டும் வறுமையும், இன்று தேசமெங்கும் மலிந்து கிடக்கும் லஞ்ச ஊழலும், நாட்டை ஆளும் அதிகார வர்க்கத்தின் ஏதேச்சாதிகாரக் கொடுமையும் மக்களின் மனத்தில் எவ்வளவு அதிருப்தியை வளர்த்திருக்கின்றன என்ற உண்மை அவர்களுக்குப் புலப்படும்? நம்மிடையே விடைபெற்றுக் கொண்டு தங்கள் சொந்த ஊருக்குத் திரும்பும் போது, ஒப்புக்கு நல்ல வார்த்தையாக நாலு சொன்னாலும், இன்றைய இந்தியாவின் உண்மை நிலை அவர்களது நினைவில் நிற்கும்; உள்ளத்திலும் பொய் உவகைக்கு இடமிராது.

ஏதோ சாரமற்ற வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு போகிறேன். குடை ராட்டு என்னமோ சுழன்று சுழன்று ஓடிக் கொண்டிருக்கிறது. அயல் நாட்டிலிருந்து பிரமுகர்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கிறார்கள். நாள்தோறும் பிரசங்க மாரிகளும், அறிக்கை அருவிகளும் பொழிந்த வண்ணம் இருக்கின்றன. மக்களும் உழைத்து உழைத்து உண்ணப் போதிய உணவின்றி உழன்று உழன்று தங்கள் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

'இனிமேல் அழிவுதான்' என்று கொட்டை எழுத்தில் கண் எதிரே காண்கிறோம். கண்டும் விழிப்பு ஏற்படாதா? நம்மை அரசு புரியும் அமைச்சர்கள் வண்ணந்தீட்டிய மரக் குதிரை - மாயச் சவாரியிலிருந்து இறங்கி, தரையில் கால்களைப் பாவ விட்டு, கிராமங்களில் உழலும் ஜனங்களின் நடுவே புகுந்து பார்த்து அவர்களது அவல நிலையை அறிய முன்வர மாட்டார்களா? அவர்கள் மட்டும் நாட்டின் உண்மை நிலையை அப்படி உணரத் தலைப்பட்டு விட்டால் அவர்களது கண்ணை மறைக்கும் வெள்ளெழுத்து நீங்கி மீண்டும் அவர்களுக்குப் பார்வை கிட்டும்!

—Courtesy, 'Hindustan Times'

# ராஜாஜி நூல்கள் வெளியீட்டு விழா



மார்ச் மாதம் 30-ம் தேதி ராஜாஜி அவர்கள் எழுதிய ''சக்கரவர்த்தித் திருமகன்'' ''வியாசர் விருந்து'' ஆகிய நூல்களின் மலிவுப்பதிப்பு வெளியீட்டு விழா சென்னை கோகலே மன்றத்தில் வெகு சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குப் பிரபல கன்னட எழுத்தாளர் திரு மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.

கோகலே மன்றம் பொங்கி வழியும்படி தமிழ் அன்பர்கள் வந்து குவிந்திருந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. திரு டி. கே. ஷண்முகம் கடவுள் வணக்கம் பாட ராஜாஜி நூல்கள் வெளியீட்டு விழா ஆரம்பமாயிற்று.

ராஜாஜியின் இலக்கிய சேவைகளைப் பாராட்டித் திருப்பெருந்திரு சோமசுந்தரத்தம்பிரான், திருவாளர்கள் ம. பொ. சிவஞான கிராமணியார், கி. சந்திரசேகரன், மீ. ப. சோமசுந்தரம், ஏ. ஜி. வெங்கடாச்சாரியார், டி. கே. ஷண்முகம் ஆகிய அறிஞர்கள் பேசினர்கள்.

கடைசியில் ராஜாஜி பேசும்போது, ''சக்கரவர்த்தித் திருமகனையும், வியாசர் விருந்தையும் படியுங்கள், அன்புடன் பக்தியுடன் படியுங்கள், நன்மை ஏற்படும்'' என்று வலியுறுத்திக் கூறினர்.

மேற்படி விழாக்காட்சிகளை இந்தப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.





[திரு க. சந்தானம் அவர்கள் எழுதும் "செல்வமும் சுதந்திரமும்" இரண்டாவது பொருளாதாரத் தொடர்க் கட்டுரைகளை மகிழ்ச்சியுடன் ஆரம்பிக்கிறோம். செல்வத்தின் சொரூபங்களையும் சரித்திர காலத்திலிருந்து இன்று வரையில் அதன் வளர்ச்சியையும் சுவையுடன் விவரித்திருக்கிறார் திரு சந்தானம். அடுத்து வரும் கட்டுரைகளிலும் இதேபோல் சுதந்திரத்தைப் பற்றியும் அதன் அம்சங்களைப் பற்றியும் சுவையுடனும் கருத்துத் தெளிவுடனும் எழுதியிருக்கிறார். அவருடைய முதல் தொடர்க் கட்டுரைகளைப் படித்து மகிழ்ந்த அன்பர்கள் இந்த இரண்டாவது தொடரையும் படித்துப் பயன் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

— ஆசிரியர் ]

# செல்வமும் சுதந்திரமும்

**க. சந்தானம்**

செல்வம், சுதந்திரம் இரண்டும் மனிதனுக்கு இன்றியமையாத பொருள்கள். 'இவற்றில் எது வேண்டும்?' என்று கேட்டால், எவரும் 'இரண்டும்' என்று பதில் அளிப்பர். ஆனால் தனது சுதந்திரத்தை ஓரளவு இழக்காமல் செல்வத்தைப் பெற முடியாது. செல்வமில்லாமலும், மனிதனுக்குச் சுதந்திரமில்லை. மிருகத்தைப் போல் தனது இயற்கை உணர்ச்சிகள் மூலம் உணவு தேடி, தன்னைப் பாதுகாத்து, சிந்திக்கும் சக்தியில்லாது கவலையற்று மனிதனால் வாழ முடியாது. ஆதலால், செல்வமும் சுதந்திரமும் சக்களத்திகள் போலிருக்கின்றன. ஒருத்தி உடல் சுகத்துக்குத் தேவை. மற்றொருத்தி மூலம் ஆத்ம சுகம் கிடைக்கும். இருவரும் ஒற்றுமையாக இருக்கும் காலங்களில், மனித வாழ்க்கை ஆனந்த மயமாகின்றது. ஆனால் அக் காலங்கள் அபூர்வமாகத்தான், அதிர்ஷ்டவசமாகவே கிட்டுகின்றன. பொதுவாக, சக்களத்திகள் சண்டை போட்டுக்கொண்டுதான் இருப்பார்கள். எங்களில் ஒருத்திதான் இந்த வீட்டில் இருக்க முடியும் என்று பிடிவாதம் செய்வார்கள். வாய்ச் சண்டை அடிதடியில் முடியாதபடி பார்த்துக் கொள்ளுவதே சாதாரண மனிதவாழ்க்கை.

செல்வம் ஒரு அடங்காப் பிடாரி. அவளை வைத்துக்கொண்டு அமைதியுடன் வாழ முடியாது. அவளை விட்டுவிட்டு அவள் மீதுள்ள ஆசையை முற்றிலும் துறந்து முக்தி வழியைத் தேட வேண்டும் என்று முனிவர்களும், ஞானிகளும், மத குருக்களும் உபதேசித்திருக்கின்றனர். இந்த உபதேசத்தை உண்மையில் கோடியில் ஒருவர் தான் ஏற்றுக் கொள்ள முடியுமென்பதை உலக சரித்திரம் பறை சாற்றுகின்றது. செல்வத்துக்கு மதங்களும், மடங்களும் அடிமையானது போல் தனி மனிதன் என்றும் அடிமையாகவில்லை.



இதற்கு எதிராக, செல்வமொன்றே அவசியமானது. அதிருந்தால் சுகம், இல்லாவிட்டால் துக்கம், சுதந்திரம் என்பது ஓர்புறம் பகற்கனவு, மறுபுறம் பணக்காரர்கள் ஏழைகளை ஏமாற்றும் சூழ்ச்சி என்று ஆதிமுதற்கொண்டு சார்வாகர்களும், எபிகியூரெஸ் கோஷ்டியினரும் வாதித்து வந்திருக்கின்றனர். செல்வமே சமூகத்தின் அடிப்படையான தத்துவமென்றும், அதையொட்டியே மதமும், கலைகளும் மற்றுமுள்ள நாகரிகங்களும் தோன்றியிருக்கின்றனவென்றும் பொது உடைமை மதகுரு மார்க்ஸ் ஓர் தத்துவ சாஸ்திரம் அமைத்து வைத்தார். அதை அடிப்படையாகக் கொண்டு, சோவியத் ருஷியாவிலும், சைனாவிலும் மற்றும் சில நாடுகளிலும் புதிய பொது உடைமை சமூகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. விஞ்ஞானத்திலும், யந்திர சக்தியிலும் பழைய சமூகங்களைத் தோற்கடிக்க முடியுமென்று செயற்கைச் சந்திரன் மூலம் ருஷியா நிரூபித்து விட்டது. ஆனால் அதன் சாதாரணப் பிரஜைக்கு இன்றும் செல்வம் அதிகமில்லை, சுதந்திரமோ சிறிது மில்லை என்ற உண்மையையும் அதனால் மறைத்து வைக்க முடியவில்லை. 'எனக்குச் சுதந்திரமில்லை' என்று கூறும் ருஷியனுடைய தலை அவன் கழுத்தின் மேல் தரிக்காது. போதிய செல்வமில்லை என்று சொல்வது கூடப் பேராபத்தாகும்.

சுதந்திரத்தின் மேல் கட்டப்பட்ட சமூகம் செல்வத்திலும் ஓங்கியிருக்கும் என்பதற்கு என்னைப் பார் என்று அமெரிக்கா மார் தட்டிக் கொள்ளுகிறது. ஒவ்வொரு குடும்பத்துக்

கும் ஒரு மோட்டார் வண்டி; வீட்டுக்கு வீடு டெலிவிஷன், ரேடியோ; இயற்கையான பெண் முகம் காணமுடியாது. நல்வழி, தீய வழி இரண்டுக்கும் சமமான சுதந்திரம். இதுவும் ஓர் அதிசய சமூகம் என்பதில் ஐயமில்லை. ஆனால் சற்று உட்புகுந்து பார்த்தால் அமெரிக்க ஐக்கிய நாட்டின் செல்வ உற்பத்தியின் பெரும் பாகம் சுமார் ஐந்நூறு கோடீசுவரர்களின் ஆதிக்கத்தில் இருப்பது தெரியும். இவர்களுக்கு லாபமில்லை என்றால், கோடிக் கணக்கான தொழிலாளிகளைத் தெருக்களில் திரியும் படிசெய்து விடலாம். சுகத்துக்கோ சுகாதாரத்துக்கோ அவசியமில்லாத, கெடுதி விளைவிக்கக் கூடிய சாமான்களை விளம்பரத்தின் மூலம் சாதாரண மக்கள் வாங்கி உபயோகப்படுத்துவது அவசியமென்று நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். தான் கடனாக வாங்கிய மோட்டாருக்கும், ரேடியோவுக்கும் இதர சாமான்களுக்கும் தவணை கட்டுவதே சாதாரண அமெரிக்கனின் ஓயாத கவலையும், தொல்லையுமாவன. செல்வம், சுதந்திரம் இரண்டுமே அமெரிக்கனைச் சிறைப்படுத்தி யிருக்கும் காவலாளர்களாகி விட்டன.

ஆதலின் செல்வம், சுதந்திரம், இவற்றின் பரஸ்பர சம்பந்தம், இரண்டிலும் எவ்வளவு அம்சம் அடைவது சாத்தியமானது, அது கூடாவிட்டால் எதனை எவ்வளவு தூரம் நல் வாழ்க்கைக்குத் தீங்கின்றித் துறக்கலாம் என்பவை சிக்கலான பிரச்னைகளாகி விட்டன.

இவையெல்லாம் பொருளாதார நிபுணர்களும், அரசியல் தலைவர்களும் ஆலோசித்து நிர்ணயிக்க வேண்டிய பிரச்னைகளல்லவா? சாதாரண மக்கள் ஏன் தங்கள் மூளைகளைக் குழப்பிக் கொள்ள வேண்டும்? என்று வினவலாம். ஒரு எதேச்சாதிகாரத்தின் கீழ் வசிப்போர்கள், நாம் என்ன நினைத்தாலும் நடப்பது நடந்தே தீரும், எல்லாம் ஈசன் செயல் என்று நிம்மதியாக இருந்து விடலாம். ஜனநாயகத்தின் கீழிருக்கும் மக்கள் அவ்வாறு இருந்துவிட முடியாது. இந்தப் பிரச்னைகளுக்கு நிபுணர்கள் ஓர் முகமாக விடையளிப்பதில்லை. தீவிர அபிப்பிராய பேதத்துக்கிடமான விஷயங்கள். அரசியல் தலைவர்களோ தாற்காலிகமாகத் தங்கள் அதிகாரத்தைச் செலுத்துவதே தமது முதல் பொறுப்பாகக் கருதுவார்கள். அவர்களின் செயல்களின் பலன்களை மக்கள் சில வருஷங்களுக்குப் பின் அனுபவிக்கும் பொழுது அவர்கள் பதவியிலிருக்க மாட்டார்கள். வாழ்க்கையின் மூலப் பிரச்னைகளைப் பற்றி முடிவு செய்வதில் எவ்வித சம்பிரதாயத்திலோ, கட்சியிலோ சிக்கிக் கொள்ளாத சாதாரண மனிதனுக்குத் தனி வசதியும், உரிமையும் உண்டு. ஆனால் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள ஓரளவு பொது அறிவு வேண்டும்: பிரச்னைகளின் தன்மைகளையும், அவற்றிலுள்ள சிக்கல்களையும் பற்றி மேலாகவேனும் அறிந்திருந்தால் நிபுணர்களும், அரசியல் தலைவர்களும் பொது மேடைகளிலும், பத்திரிகை வாயிலாகவும் வாதாடும் பொழுது, தீர்ப்புக் கூற அவனுக்கு ஆற்றல் உண்டாகும். பொதுமக்களின் புத்தி பூர்வமான தீர்மானத்தால் கிடைக்கும் சுகங்களைக் கொண்டு திருப்தி அடைவதும், கஷ்டங்களை முக மலர்ச்சியுடன் சகிப்பதுமே ஜனநாயகம். சுகங்களைக் கூடும்வரையில் பெருக்கி, கஷ்டங்களைக் குறைப்பதற்குப் பொது அறிவொன்றே சாதனம்.

## மூன்று சகாப்தங்கள்

செல்வம், சுதந்திரம் இவ்விரண்டின் சொரூபங்கள் காலத்துக்கும், சமூக வளர்ச்சிக்கும் ஏற்றவாறு மாறி வந்திருக்கின்றன. அந்தச் சொரூபங்களுக்குக் கணக்கில்லை. ஆயினும் அவற்றை மூன்று சகாப்தங்களாக வகுக்கலாம். ஆடு மாடு வளர்ப்பதே முக்கிய தொழிலாக இருந்த சகாப்தம்தான் முதலாவது சகாப்தம்.

ஆதிமனிதனின் செல்வம் ஆடாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்பதற்குப் பல காரணங்களுண்டு. பிடித்துப் பழக்குவதற்கு எளிது. விரைவில் விருத்தியாகும். அதன் மாமிசம் உணவுக்கும், உரோமம் உடைக்கும் இன்றைக்கும் பெருமிதமாக உபயோகிக்கப் படுகின்றன. எவ்விதப் புல்லையும், இலையையும், தழையையும் தின்று பிழைக்கும். நேரடியாகக் குன்றுகள் மீது ஏறி அதில் பாறைகளின் நடுவில் தப்பிப் பிழைத்திருக்கும் செடிகளை ஆடுகள் தின்பது ஓர் ஆச்சரியமான காட்சியாகும். ஆதலால், ஆட்டு மந்தைகளை மேய்த்து வாழ்வது ஆதி மனிதனுக்குச் சுலபமாக இருந்தது. ஆனால் அதில் சில கஷ்டங்களும் இருந்தன. எல்லாச் செடிகளையும் அழித்து விடுவதால் ஓயாமல் புது இடங்களுக்குச் சென்று கொண்டிருக்க வேண்டும். நரி போன்ற சிறிய காட்டு மிருகங்களிடமிருந்து கூட அபாயம். மூட்டை தூக்குவதற்கோ, வண்டி இழுப்பதற்கோ ஆடு உதவாது. ஓரிடமிருந்து வேறிடம் செல்லும்பொழுது குட்டிகளை மனிதரே தூக்கிச் செல்ல வேண்டும். ஆயினும், வெகு காலம் சிறு கூட்டங்களாக, வீடு வாசலின்றி, அதிக தட்டுமுட்டுச் சாமான்களில்லாமல், ஆட்டு மந்தைகளை மேய்த்துத் திரிவதே மானிட வாழ்க்கையாக இருந்தது.

பெரும்பாலும் அந்தக்காலத்து மக்கள் ஒரே இடத்தில் வசிப்பதில்லை. அப்படி அவர்கள் வசிக்கும்படி இயற்கையும் அவர்களை விடுவதில்லை. நல்ல தண்ணீர் இருக்கும் பக்கமாகவே அவர்கள் அடிக்கடி நகர்ந்து கொண்டே இருந்தார்கள். மனிதன் உயிர் வாழ்வதற்குக் காற்றைப் போலவே நல்ல தண்ணீரும் மிகவும்



கொழும்பில் தமிழ் எழுத்துக்களை அழித்துத் தமிழர்களை அவமதித்த அதே தினத்தன்று ஒரு ரசமான சம்பவமும் நடைபெற்றது. கோயம்புத்தூர் ஜில்லா ரோட்டரிச் சங்க அங்கத்தினர்களின் மனைவிமார்களும் பிரபல ஆலை முதலாளிமார்களின் மனைவிமார்களுமான இருபத்தாறு தமிழ்ப் பெண்மணிகள் நல்லெண்ணத் தூதர்களாக இலங்கைக்குச் சென்றிருக்கிறார்கள். நவ இந்தியா பத்திரிகையின் அதிபர் திரு பி. ஆர். இராமகிருஷ்ணனின் மனைவி ஸ்ரீமதி ராஜேஸ்வரி இராமகிருஷ்ணன் தலைமையில் வந்திருக்கும் தென்னிந்தியத் தமிழ்ப் பெண்மணிகளின் குழுவுக்கு ஏப்ரல் மூதல் தேதி திரு ஆர். ஏ. நடேசன் தம்பதிகள் ஒரு உபசார விருந்து அளித்தனர். அதற்கு கவர்னர் ஜெனரல் ஸர் ஆலிவர் குணதிலகாவும் அநேகம் உயர்தர சிங்கள அதிகாரிகளும் பிரபலஸ்தர்களும் வந்திருந்து தமிழ்ப் பெண் மணிகளைக் கௌரவித்தது, வகுப்பு வெறி தலைவிரித்தாடும் சமயத்தில் ஒரு விசேஷமான காட்சியாயிருந்தது. தமிழ் நாட்டு நல்லெண்ணத் தூதுக் குழுப் பெண்மணிகளுடன் ஸர் ஆலிவர் குணதிலகா இருப்பதைப் படத்தில் காணலாம்.

---

அவசியமல்லவா? அத்துடன் அவர்கள் ஆட்டு மந்தைகளுக்கும் தண்ணீர் மிகவும் அவசியமாக இருந்தது. ஆகவே தண்ணீர் வசதியும் அதைச் சேர்ந்த சமவெளிப் பிரதேசமும் அவர்கள் குடியேறும் இடங்களாக இருந்து வந்தன. ஒரே இடத்தில் நிலையாகத் தங்கி இருந்தார்கள் என்று சொல்ல முடியாதபடி அவர்கள் வாழ்க்கை இருந்தது.

அச்சமயத்தில், முக்கிய செல்வமான ஆட்டு மந்தைகள் பொது சொத்தாகத்தான் இருந்திருக்க வேண்டும். ஒரு மந்தையை மேய்த்துப் பாதுகாப்பதற்குப் பலர் சேர்ந்து ஒத்துழைப்பது அத்தியாவசியமானது. பிற்காலத்திய குடும்ப வாழ்க்கையோ, தாம்பத்ய தர்மமோ சாத்தியமில்லை. மனிதருக்குள் ஏற்றத் தாழ்வுக்கு இடமில்லை. ஆண்களும் பெண்களும் ஒரேவிதமாக வசிக்க வேண்டும். இக்காலத்திலும் இடையர் சமூகங்களில் அதே பழக்கத்தைக் காண்கிறோம்.

எப்பொழுதும் சஞ்சரிக்கும் சமூகங்களில் எவ்வித ஆட்சியும், சட்ட திட்டமும் நிலைத்திருக்க முடியாது. பழக்க வழக்கங்களும், சம்பிரதாயங்களும், நம்பிக்கைகளுமே இக்கூட்டங்களைச் சேர்த்து வைத்திருக்கும் சக்திகள். இலக்கியம், கவிதை, கலைகள் எல்லாவற்றுக்கும் நிலைபெற்ற சமூக வாழ்க்கை அவசியமாதலால், சஞ்சார சமூகங்களின் வாழ்க்கை மிகவும் எளியதாகவும், தொழில் பிரிவுகள் இல்லாமலும் இருக்கும். ஆதலால் சுதந்திரம் ஒரு பெரிய பிரச்னையாக இருக்காது. யுத்தத்துக்காகவும், சமூக வாழ்க்கை குலையாமல் இருப்பதற்கும் அவசியமான சில நிபந்தனைகளுக்குட்பட்டு ஆண்களும், பெண்களும் பூரண சுதந்திரமுள்ளவர்களாகவே இருந்திருப்பார்கள்.

காட்டு மாடுகளைப் பிடித்துப் பழக்கி, அடிமைப் படுத்தியது சமூக முன்னேற்றத்தின் அடுத்த கட்டமாகும். இது பாரதத்துக்கு வந்த கூட்டத்தாரின் தனிச் சிறப்பு என்பதற்கு இத் தேசத்தில் பசுவைத் தெய்வமாகப் பாவிப்பதே போதிய சான்றாகும். மாட்டு மந்தை, ஆட்டு மந்தையைக் காட்டிலும் உயரிய செல்வமாயினும், அதை மேய்த்து வளர்த்து வருவதால் எவ்வித புது நாகரிகமும் தோன்றவில்லை. விவசாயத்தின் சூக்ஷமங்களைக் கண்டுபிடித்து, அதற்காக மாடுகளை உபயோகிக்கக் கற்ற பின்னரே இரண்டாவது சகாப்தம் ஆரம்பமாயிற்று. இது சுமார் நாலாயிரம் வருஷங்களுக்கு முன் தொடங்கிக் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து இன்றும் உலகில் பெரும் பாகத்தில் நிலவி வருகிறது.

ஆனால் ஐரோப்பா, வெள்ளைக்காரர் குடியேறிய அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்கள் இவற்றில் நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பும் பாரதம், சைனா, எகிப்து போன்ற சில ஆசிய ஆப்பிரிக்கப் பிரதேசங்களில் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பும் மூன்றாவது சகாப்தம், அதாவது இயந்திரத் தொழிலைப் பிரதானமாகக் கொண்ட சகாப்தம் தொடங்கியது. அது இன்னும் எந்நாட்டிலும் பூரணமாகப் பரிணமிக்கவில்லை. இரண்டு சகாப்தங்களுக்கு நடுவில் அகப்பட்டுக் கொண்டிருப்பதால் மனித வாழ்க்கை தற்சமயம் திரிசங்கு நிலையில் இருக்கிறது.




25

ஒருவன் தனது மனத்தில் பொங்கும் கோபத்தை அடக்கப் பயின்று விட்டால் மற்ற நற்குணங்கள் எல்லாம் தாமாக அவனை வந்து சேரும். அரசனைப் பக்தர்களும், சேவகர்களும் எதிர்நோக்கி நிற்பது போல், எங்கே, எங்கே என்று காத்து நிற்கும். அதாவது கோபத்தை அடக்கிக் கொள்ளப் பயின்று விட்டால் மற்ற விஷயங்களை ஒருவன் எளிதாக முடித்துக் கொள்ளலாம். கோபத்தை அடக்கி விட்டோமானால் மற்றவை யெல்லாம் சொன்னபடி கேட்கும். இல்லறம் நடத்துபவனுக்கு முதல் பகை கோபம்.

கதம் காத்துக் கற்று அடங்கல்
ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

[கதம்-கோபம். செவ்வி பார்த்தல்-ஒருவன் சமயத்தை எதிர்பார்த்து நிற்றல்]

கோபத்தைக் காக்கும் வெற்றி ஒரே நாளில் அடைய முடியாது. மிகப் பயில வேண்டும். அதை அடக்குவது ஒரு தனிக் கல்வியாகும். ஆகையால் "கற்று" என்று சொன்னார். கணிதம், வைத்தியம், நாட்டியம், சங்கீதம்—இவை போன்ற கலைகளைக் கற்பதற்குக் கவனமும் முழு ஆற்றலும் செலுத்திப் பயில வேண்டும். அது போலவே கோபத்தை அடக்குவதும் ஒரு பெருங் கலையாகும். அதைக் கற்றுக் கோபத்தை அடக்கிவிடும் ஆற்றல் பெற்றவன் ஒரு அரசனைப் போல் ஆவான். அரசனுடைய செவ்வியை, அதாவது நல்ல சமயத்தை, சேவகர்களும், யாசகர்களும் எதிர்பார்ப்பது போல், மற்ற எல்லா நற்குணங்களும்—ஏன்—அறக் கடவுளே, கோபத்தைக் காத்தவன் செல்லும் பாதையில் சமயம் எதிர் பார்த்து நிற்கும் என்று முனிவர் சொல்கிறார். எந்த வழியில் அரசன் செல்வான் என்பதை அறிந்து கொண்டு, முன்னதாகவே சென்று காத்திருப்பார்கள் அரசனிடம் ஏதேனும் ஒரு நன்மை எதிர்பார்ப்பவர்கள். இந்தச் சமயம் இதைக் கேட்டுப் பெறலாம் என்று அரசனுடைய மன நிலையை விசாரித்து அறிந்து, அரசன் சந்தோஷமாக இருக்கிறான் என்று தெரிந்து கொண்டு, விண்ணப்பம் செய்பவர்கள் மிக வணக்கத்துடனும், ஜாக்கிரதையுடனும் தங்கள் கோரிக்கையைப் பெற முயலுவார்கள். அது போல் தரும தேவதையே கோபத்தை வென்றவனிடம் பணிவுடன் நிற்கும்.

'ஆற்றின்' என்பதில் 'ஆறு' என்றால் பாதை. நாம் அறக் கடவுளைத் தேடிப் போக வேண்டியதில்லை. அறக் கடவுள் நம்மைத் தேடிக்கொண்டு வரும். மிக வணக்கத்துடன் நம்முடைய 'செவ்வி' பார்த்து வரும்.

* * *

பணிவு என்பதும் 'அடக்கம்' என்பதில் அடங்கும் அல்லவா? அதைப் பற்றிச் சொல்லுகிறார் முனிவர். பணிவு எல்லாருக்கும் நல்லதேயாகும். ஆனால் செல்வம் படைத்தவர்களுக்கு அது மிக அவசியம். மற்றச் செல்வத்தோடு சேர்ந்து அதை அதிகப்படுத்தும் தனிப்

பான்மை கொண்ட செல்வமாகும் பணிவு.

ஏழையைப் பணக்காரனுக்கலாம். இது பணத்தால் செய்யக் கூடியது. பணக்காரனைப் பணக்காரனுக்கும் தன்மை கொண்ட பொருளாகும் பணிவு. அது இல்லாவிடில் எவ்வளவு செல்வம் இருந்தபோதிலும் அவனை ஒரு ஏழையைப் போலத்தான் கருத வேண்டும்: முக்கியமான செல்வம் இல்லாதபடியால்.

எவ்வளவு செல்வம் அடைந்த போதிலும் குழந்தை இல்லையே என்று ஒரு மலடி வருத்தப்படுவதுபோல் பணிவு இல்லாவிடில் வருந்தும் நிலையில்தான் இருப்பார்கள்.

எல்லார்க்கும் நன்றும்
பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

செல்வத்துக்குச் செல்வமாகும் ஒரு பொருள் எவ்வளவு பெரும் பொருளாக இருக்க வேண்டும்; அத்தகைய பெரும் பொருள் பணிவு. கல்வி, நல்ல குணம், தனம். எல்லாமே 'செல்வம்' ஆகும். பணிவு, அவற்றைத் தாழ்த்தாது; உயர்த்தும். பணிவு காட்டின பண்டிதனை முன்னைவிட அதிகமாக மதிப்பார்கள். குலச் செருக்கு இல்லாமல் பணிவுடன் நடந்து கொள்பவனை மக்கள் மிகப் போற்றுவார்கள். பொருட் செல்வமும் அவ்வாறே பணிவோடு சேர்ந்தால் இரு மடங்கு விலை கொள்ளும்.

நம்மை நாம் தாழ்த்திக் கொண்டால் குறைந்து போவோமோ என்று பயப்பட வேண்டியதில்லை. பணிந்த அளவு மேல் செல்வோம்.

ஏழைகள் பணிவுடன் நடந்து கொள்ள வேண்டியது அவசியமில்லை என வள்ளுவர் சொல்லவில்லை, எல்லாருக்குமே பணிவு நல்லது. ஆனால் செல்வம் படைத்தவர்களுக்கு அது மிக மேன்மை தரும் என்கிறார்.

# கம்பர் வாழ்க்கைக் காட்சிகள்

உலகில் புகழ் பெற்றவர்களைப் பற்றித்தான் கட்டுக் கதைகள் வழங்குகின்றன. செயற்கரிய செய்வோரைப் பற்றித்தான் நம்ப முடியாத அதிசயக் கதைகளெல்லாம் மக்கள் பேசுகிறார்கள். இதைப் பற்றிச் சற்று யோசித்தோமானால் பெரியோர்களிடம் பொது மக்களுக்குள்ள அன்பே இக்கதைகளுக்குக் காரணம் என்பதை உணர்வோம். ஒவ்வொரு கதையையும் சற்றுக் கூர்ந்து பார்த்தோமானால் அதில் அந்தப் பெரியோர்களின் நுட்பமான பண்பு ஒன்று வெளிப்படுவதைக் காண்போம். அந்தப் பண்பை அப்பெரியோர்களிடம் மக்கள் எவ்வளவு தூரம் அனுபவித்திருக்கிறார்கள் என்பதும் புலனாகும்!

கவிச் சக்கரவர்த்தி கம்பரைத் தமிழ் மக்கள் எவ்வளவு தூரம் போற்றி வந்திருக்கிறார்கள் என்பது அவரைப் பற்றி வழங்கும் கட்டுக் கதைகளே சான்று.

சோழ மன்னன், கவிச் சக்கரவர்த்தியிடம் ஏதோ மனத்தாங்கலுற்று நாட்டை விட்டு வெளியேறச் சொன்னான். அப்பொழுது கம்பருடைய வீர உணர்ச்சி வெளிப்பட்டது. சுதந்திர உணர்ச்சி துள்ளி எழுந்தது. தமிழர்களிடம் அவருக்குள்ள அபரிமிதமான செல்வாக்கு வெளிப்பட்டது. 'உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்?' என்று கூறிச் சென்றார். எவ்வளவு வேகம் நிறைந்த சொற்கள்!

கவிஞர்களுக்கு ஒரு சிறு உதவி செய்தாலும் அவர்கள் உள்ளம் நன்றியால் பெருக்கெடுத்து விடும். கவிச் சக்கரவர்த்தி கம்பருக்கு மாவண்டூர்ச் சிங்கன் என்னும் ஆசாரி தமக்கு முதலில் ஓர் அழகிய எழுத்தாணி கொடுத்த போது அவர் உள்ளம் நன்றியால் நிறைந்து விட்டது. மகாவிஷ்ணு சக்ராயுதம் வேண்டும் என்றும், சிவபெருமான் மழு வேண்டும் என்றும், முருகப் பெருமான் வேல் வேண்டும் என்றும் சிங்கனுடைய கொல்லுலையில் காத்திருப்பார்கள். தேவர்கள் காத்திருக்கும் பெருமைபடைத்தவன் சிங்கன் என்று அத்தொழிலாளியைப் புகழ்ந்து விட்டார். அத்தொழிலாளி தமிழ்ச் சுவையும் நன்கு பெற்ற பண்டிதத் தொழிலாளி என்றவுடன் கம்பர் இவ்வளவுதானா பாடுவார்? இதற்கு மேலும் அல்லவா பாடுவார்?

கற்பனையில் சிறந்த கவிஞர் பெருமான், "மூங்கில் இலை மேலே!" என்று ஏற்றக்காரன் சொல்லி விட்டு இறங்கியவுடன், அடுத்த அடி ஏதாக இருக்க முடியும் என்று யோசித்தார். அவருக்குத் தோன்றவில்லை. மீண்டும் பிற்பகல் ஏற்றக்காரர்கள் வந்து பாட்டுத் தொடரும் வரை காத்திருந்தார். அவர்கள் 'தூங்கும் பனி நீரே!' என்றவுடன் அப்படியே அதிசயித்துப்போனார். 'இது' நமக்குச் சற்றும் படவில்லையே என்று எண்ணி ஏற்றக்காரர்களைப் பாராட்டி விட்டுச் சென்றார். இப்படிக் கம்பர் யார் யாரிடமோ என்ன என்ன விஷயங்கள் எல்லாமோ உயர்வு தாழ்வு பாராமல் கற்று வந்ததாலேயே கல்வியில் பெரியவர் கம்பர் என்ற பெரும் புகழைப் பெற்றார்!

இந்த மூன்று காட்சிகளையும் மூவர்ணச் சித்திரக் காட்சிகளாக 73-ம் பக்கத்தில் நேயர்கள் கண்டு மகிழலாம்.




வேங்கடதாத்தாச்சாரியார் ஆங்கிலம் படிப்பேன் என்று பிடிவாதம் செய்த பொழுது, அவருடைய தகப்பனார் இரண்டு நாட்கள் ஆகாரமே உட்கொள்ளவில்லை. அவ்வளவு வைதிகமான குடும்பம். ஆனால் உபய வேதாந்தத்தில் கரை கண்டவருக்கு ஒரு மிலேச்சபாஷை எம்மாத்திரம்! ஒன்றன் பின் ஒன்றாக பி. ஏ. வரை எல்லாப் பரீட்சைகளிலும் தாத்தாச்சாரியார் தேறி விட்டார். அந்தக் காலத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் கிடையாது. தேறினதும் சென்னை மாகாண சர்க்காருக்கு ஒரு மனுப் போட்டார். பதினைந்து நாட்களுக்கெல்லாம் செப்பாக்கத்தில் 'ரிவின்யூ போர்ட்' ஆபீஸில் குமாஸ்தாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முப்பது ரூபாய் சம்பளம். ஆண்டுக்கு ஒரு ரூபாயாக இருபத்தைந்தாண்டுகளில் ஐம்பத்தைந்து ரூபாய் வரையில் உயரும் பதவி.

ஆனால் தாத்தாச்சாரியார் இந்தச் சிறிய உத்தியோகத்தில் சில நாட்களே இருந்தார். உயர்தரக் குமாஸ்தா. மேற்பார்வை அதிகாரி, உதவிக் காரியதரிசி என்று படிப்படியாக உயர்ந்த பதவிகளை அடைந்து, 'போர்ட்' காரியாலயத்துக்கு ஒரு திலகம் போல் விளங்கி வந்தார். அவர் அறியாத சட்டமே கிடையாது. ஆபீஸ் முறைகள், விதிகள், ரிவின்யூ சட்டங்கள் அப்போதைக்கப்போது வெளிவரும் அரசாங்கக் கட்டளைகள், பிரமாணங்கள்—இவை யாவும் மனித வடிவம் எடுத்து வந்தவர் என்ற பெயர் அவருக்கு உண்டு. எந்தச் சிக்கலையும் சீர்திருத்தித் துரையைச் சமாளித்து விடுவார். இவர் எழுதி வைத்த எந்தக் கடிதத்திலும் உத்தரவிலும் துரை கையெழுத்துப் போடுவார். "தாத்தாச்சாரியாரைக் கேட்டுப் பாருங்கள்" என்று அந்த ஆபீஸில் அடிக்கடி சொல்வார்கள். அவருடைய உபய வேதாந்தமே ஒருபக்கம் 'ஈடு', மற்றொரு பக்கம் 'போர்ட் ஆபீஸ் விதிகள்' என்று சிலர் சொல்லி வந்தனர்.

ஆனால் அவருக்கு வெகு நாட்களாக ஒரு குறை. 'புத்' என்ற நரகத்திலிருந்து தம்மைக் கரை ஏற்றுவதற்கு ஒரு புத்திரன் இல்லையே என்ற கவலை அவரை உருக்கிக் கொண்டிருந்தது. திருப்பதி வேங்கடநாயகனிடம் சென்று தம் குறையைத் தெரிவித்துக் கொண்டார். தமக்குப் பிறக்கும் மகனுக்குப் பெருமான் நாமதேயத்தையே இட்டு அதை அடிக்கொரு தரம் சொல்லிக் கொண்டு தம் நாளைக் கழிக்க வேண்டும் என்று முறையிட்டார்.

திருப்பதிக் கடவுள் கலியுகத்தில் கண்கண்ட தெய்வம் அல்லவா? சில மாதங்களுக்குப் பின் அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு வாசுதேவன் என்று பெயர் வைத்து அன்புடன் வளர்த்து வந்தார். எறும்பும் குருவியும் போல் சிறிது சிறிதாகத் தாம் சேர்த்து வைத்த சொத்து வீணாகச் சிதறிப் போகாது என்ற உறுதி அவருக்கு ஒரு புது மகிழ்ச்சியை அளித்தது. ஏனென்றால் 'தாத்தாச்சாரியார் மற்ற அரசாங்க அதிகாரிகளைப் போல் 'மேல் வரும்படி'க்காகத் தவறான வழிகளைக் கைப்பற்றினதே கிடையாது. போர்ட் ஆபீசுக்கு தர்காஸ்து, நீர்த் தீர்வை முதலிய "அப்பீல்"களைக் கொடுக்க வரும் விவசாயிகள் சமர்ப்பிக்கும் மாமூலை மறுப்பதில்லையே தவிர, தானாக ஒரு காலணாக்கூட ஒருவரிடமும் தாத்தாச்சாரியார் கேட்டதில்லை.

அக் காலத்தில் அனைவரும் இந்த நேர்மையைப் புகழ்ந்து பாராட்டுவதுண்டு. "தாத்தாச்சாரியார் ஒழித்த கோட்டை மேலதிகாரிகள் தாண்டுவதில்லை. அதற்காக அவர் என்ன காணிக்கை வாங்கிக் கொள்ளுகிறாரா? வேண்டுமானால் எத்தனையோ ஆயிரம் சம்பாதித்திருக்கலாம். மாதச் சம்பளத்திலிருந்து வீட்டுச் செலவைக் கூட ஓரளவு நடத்திவருகிறார்" என்று சிப்பந்திகளும் மிராசுதார்களும் பேசிக்கொள்வார்கள். அதனால் என்ன, கடவுள் புத்தியைக் கொடுக்க வில்லையா? எந்த இடங்களில் புது வாய்க்கால்கள் வரலாம், நீர்வளம் எங்கே நிறையும் என்று அவருக்கு முன்னமேயே தெரிய வரும். அங்கெல்லாம் தரிசு நிலங்களை விலைக்கு வாங்கிப் போட்டு வைப்பார். ஐந்து அல்லது பத்து ஆண்டு வட்டி நஷ்டம். அதையும் பொருட்படுத்தமாட்டார். பாசன வசதி வந்ததும் நல்ல விலைக்கு நிலங்களை விற்று விட்டு அடுத்த நீர் சூழ்ச்சியில் மனத்தைச் செலுத்துவார். இதில் என்ன தவறு? தம் பணத்தைத் தானே செலவு செய்து வந்தார். ஏதோ தமக்கு வேண்டிய இடத்தில் நீர்ப்பாசனம் வருவதற்குப் பலமாகச் சிபார்சு எழுதி வைத்தால் தான் என்ன? மேல் அதிகாரிகள் அதைப் பரிசோதனை செய்து பார்த்தபிறகுதானே உத்தரவு போடுவார்கள்!

ஆனாலும் மற்றொரு குறை. "இதென்ன உத்தியோகம், சென்னையில்? காலையில் எழுந்திருந்து கீழ்த்தரக் குமாஸ்தாவைப்

போல் ஆபீசுக்கு ஓட வேண்டும். ஒரு பெருமை கிடையாது; ஒரு அதிகாரம் கிடையாது. அரசாங்கத்தில் வேலை செய்தால் தாசில்தாராகவோ, டிபுடி கலெக்டராகவோ இருக்க வேண்டும். சென்ற விடமெல்லாம் சிறப்பு. உத்தியோகத்துக்கே ஒரு தனி தோரணை. வீட்டை விட்டு வெளியேறினால் ஊர்வலம் போல் ஒரு பரபரப்பும் மதிப்பும். இதெல்லாம் பணத்தைக் கொண்டு ஆகுமா? ஆகையால் வாசுதேவனை எப்படியாவது துரையினிடம் சொல்லி நல்ல ஜில்லாவாகப் பார்த்து 'ரிவின்யூ' இலாகாவில் சேர்த்துவிட வேண்டும். தமக்குத் தவறிப் போன அதிகாரம் தம் மகன் நடத்திப் பார்க்கவேண்டும்'' என்று எண்ணி எண்ணி, வாசுதேவன் பி. ஏ. பட்டம் பெறும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். வாசுதேவன் பரீட்சையில் தேறியதும் அவனைத் தம் மேல் அதிகாரி துரையினிடம் அழைத்துச் சென்று தம் வேண்டுகோளைத் தெரிவித்துக் கொண்டார்.



'' ஏன், நம் ஆபீசிலேயே இருக்கட்டுமே உங்கள் மகன் ?'' என்றார் துரை.

'' நம் ஆபீசினால் நாட்டுக்கு நன்மையுண்டே தவிர ஆளுக்கு அதிகாரம் இல்லையே ?'' என்று புன்னகையும் மரியாதையும் கலந்து சொன்னார் தாத்தாச்சாரி.

துரை நல்ல புத்திசாலி. இந்தியர்களுக்கு அதிகாரத்தில் ஆசை என்று அறிந்தவர். சேவகன் வேலையில் கூட கலெக்டர் சேவகனுக்குள்ள கௌரவம் ஆஸ்பத்திரி இலாகா, காட்டு இலாகா முதலிய சேவகர்களுக்குக் கிடையாது என்ற உண்மையை யார் அறியாதவர்! ஆகவே, வாசுதேவனைத் தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு '' ரிவின்யூ இன்ஸ்பெக்டர் '' ஆக நியமித்து உடனே உத்தரவுபோட்டார்.

இந்தச் சம்பவங்கள் நடந்து இப்பொழுது சுமார் ஐம்பது வருஷங்கள் ஆகின்றன. அக்காலத்தில் போர்ட் ஆபீஸ் மேல் துரை கடவுளுக்கு அடுத்தபடி. உதடு அசைந்தால் ஊர் அசையும். ஆகையால் வாசுதேவன்வேலை ஒப்புக்கொண்ட நாளிலிருந்து மேல் துரையினுடைய ஆள் என்று தனி மதிப்புப் பெற்றிருந்தான். சில நாட்களுக்கெல்லாம் தாத்தாச்சாரியாரும் வேலையிலிருந்து ஓய்வு எடுத்து உதவிச் சம்பளம் பெற்றுக் கொண்டு சென்னையை விட்டுத் தம் கிராமத்துக்குப் போக ஏற்பாடு செய்தார். இவ்வளவு நாட்களாக இகத்தின் எண்ணமே நிறைந்த வாழ்க்கையை உதறி விட்டு, பரத்தின் சிந்தனையைச் செய்ய வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. மேலும் நிலபுலன்களைக் குத்தகைக்காரரிடம் எவ்வளவு நாட்கள் விட்டு வைப்பது? தாம் கவனிப்பது போல் ஆகுமா?

இவ்வாறாகத் தீர்மானம் செய்து கொண்டு தாத்தாச்சாரியார் தஞ்சாவூர் சென்று தம் மகனுடைய வேலைத் திறமையைக் கண்டு களித்தும், எப்பொழுதும் அந்தர்யாமியான நாராயணனை எண்ணிக் கொண்டும், குத்தகை நிலங்களைப் பண்ணையாக மாற்றித் தாமாகவே மேற்பார்வை செய்து கொண்டும் வந்தார்.

வாசுதேவன் தன் தந்தையைப்போலவே கடவுளிடம் பக்தியும் வேலையில் ஊக்கமும் படைத்தவன். நிலங்களில் வரும் வருமானத்தை வீணாக்காமல், வரிபாக்கிக்காக ஜப்தி செய்யப்பட்டு ஏலத்துக்கு வரும் நிலங்களை '' பினாமிதார் '' பேரில் வாங்கியும், முதல் அடமானப் பத்திரத்தின் மீது முழு வட்டிக்குக் கடன் கொடுத்தும், சில்லறைக் கடைகளில் இரகசியமாகப் பங்கெடுத்துக் கொண்டும், பெருக்கி வந்தான். இதைக் கண்ட தாத்தாச்சாரியார் ஒரு வைகுண்ட ஏகாதசியன்று பெருமாளை வணங்கிவிட்டு, இரும்புப் பெட்டிச் சாவியை வாசுதேவனிடம் கொடுத்து விட்டார். வாசுதேவனும் அதைக் கோவில் திறவுகோல் என்று கருதிக் காப்பாற்றி வந்தான். நிலபுலன்களின் ஜாபிதா வேறு. அண்டிமாண்டுகள் வேறு. ஜாமீன் பத்திரங்கள் வேறு. வெள்ளிப் பாத்திரங்கள், நகைகள் வேறு. உதிர் சவரன்கள் வேறு என்று ஒவ்வொரு ஆதாரத்தையும் பொருளையும் பிரித்து அடுக்கி வைத்து அனுபவித்து வந்தான். இதுதான் வாசுதேவன்செய்த திருவாராதனை!



ரிவின்யூ இன்ஸ்பெக்டருக்குச் சட்டத்தையும் விதியையும் பார்க்கப்போனால் சின்ன வேலைதான். ஆனால் அந்தரங்கமாகக் கவனித்தால் ரிவின்யூ இலாகாவின் விசை இவர் கையில்தான். தண்டத் தீர்வை, தண்ணீர்த் தீர்வை, அத்துமீறிச்செய்யும் சாகுபடி, அரசாங்க நிலத்தைத் தர்காஸ்து செய்தல் — இவை அனைத்தையும் ஆக்கலும் நீக்கலும் இன்ஸ்பெக்டருடைய அலகிலா விளையாட்டு என்றுரைப்பது மிகையாகாது. இன்ஸ்பெக்டர் வேண்டாம் என்றால் அதை

# அதிசயமும் அற்புதமுமான சருமப் பாதுகாப்பு

ஸ்நானத்துக்கும், தேகாலங்காரத்துக்கும் முன்பு சருமத்தை சுத்தப் படுத்துவதற்கு, பல விதமான பயனளிக்கும் மலபார் லிம்டா சோப்பு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பிரத்தியேகமான அபிமானத்தைப் பெற்றிருக்கிறது. லிம்டாவை உபயோகித்து ஸ்நானம் செய்த பின், உங்களுக்குப் பரம சுகமளிக்கும் உணர்ச்சியைப் பெறுவீர்கள். ஏனெனில், அதில் சேர்ந்துள்ள மூலிகைத் தைலங்களும் அதன் நறுமணமும் அதற்கு மேன்மையை அளித்துள்ளன.

மலபார்

# லிம்டா

டாய்லெட் சோப்




தி வெஜிடபிள் சோப் வொர்க்ஸ்,

கோழிக்கோடு-1

*இந்தியன் சோப் & டாய்லெட்ரீஸ் அஸோஸியேஷனில் அங்கத்தினர்*

## மலிவு விலையில்

மகோன்னத சரித்திர நாவல்

**மாமன்னன் நந்திவர்மன்**

மண்ணைக் காதலித்தானா?....பெண்ணைக் காதலித்தானா?....மாவீரத்தைக் காதலித்தானா?

இத்தனையும் காதலித்தான். இவற்றிற்கு மேலாக ஒன்றையும் காதலித்தான்! அது என்ன?




எட்டாம் நூற்றாண்டின் பல்லவ வரலாற்றை நிலைக்களனாகக் கொண்டு தேன் சொட்டும் தீந்தமிழில் எழுதப் பெற்ற சரித்திர நாவல் மூவர்ண முகப்பு. 26 வண்ணச் சித்திரங்கள்

திருநாவுக்கரசு தயாரிப்பு

**உயர்ந்த பதிப்பு - விலை ரூ. 2.50**

**எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்**

தபால் மூலம் வேண்டுவோர் ரூ. 2-75 எங்களுக்கு மணியார்டர் செய்க. வியாபாரிகளுக்குத் தக்க கமிஷன் உண்டு. விண்ணப்பிக்க:

எங்கள் இதர புது வெளியீடுகள் :

**இருபதாம் நூற்றாண்டு மேதைகள்**

டி. எம். காளியப்பா, எம். ஏ. எழுதிய இருபதுக்கு மேற்பட்ட உலக அறிஞர்களின் வாழ்க்கைச் சித்திரம். படிக்கச் சுவையூட்டும்! உங்களை அறிஞராக்கும் நூல். விலை ரூ. 2-00

**வெற்றிகரமாக வியாபாரம் செய்வது எப்படி?**

ஒவ்வொரு வியாபாரியும் அவசியம் படிக்க வேண்டிய நூல். ... விலை ரூ. 1-50

**பாம்பு மோதிரம் - விலை ரூ. 2-00**

ஆர். எஸ். மணி எழுதிய துப்பறியும் நாவல்

விவரங்களுக்கு :

## வானதி பதிப்பகம்

82/11, பாண்டி பஜார், சென்னை-17

யாழ்ப்பாணத்தில் கிடைக்குமிடம்: திரு T. தம்பிதுரை

---

## பைன் ஆர்ட்ஸ் (Regd.)

கோயமுத்தூர்

★

12-4-58 சனிக்கிழமை இரவு 9-30 மணிக்கு

கோவை ஷண்முகாவில்

## பத்மினி & ராகினி

நாட்டிய நாடகம்

★

13-4-58 ஞாயிறு மாலை 6 மணிக்கு

பிரண்ட் ராமசாமி நடிக்கும்

## அன்பின் ஜோதி

ஒப்பற்ற சமூக நாடகம்

★

டிக்கட்டுகள் விவரம் :

12-4-58 : ரூ. 10, ரூ. 5, ரூ. 2-50, ரூ. 1-25
13-4-58 : ரூ. 5, 3-50, 2-50, 1-25, 0-75

முன்கூட்டியே முதல் வகுப்பிற்கு மட்டும் இரு நிகழ்ச்சிகளுக்கும் ஸ்ரீ சீதாராம் ஸ்போர்டிங்கில் ரிஸர்வ் செய்து கொள்ளலாம்

போன் : 522

---

## சாம்பியன்

(ரெஜிஸ்டர்டு)

அனைவரும் விரும்புவது

பலமுள்ளது உறுதியானது மைத்தடைப் படாதது

நேர்த்தியாக எழுதுவதற்கும் மசி கசியாத தற்கும் உத்தரவாதம்

குஜராத் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட் பம்பாய்-2

மேல் அதிகாரிகள் மாற்றுவது வழக்கமில்லை. ஆகையால் தேன் பாத்திரத்தில் விரலை விட்டவன்போல் வாசுதேவன் தன் பதவியைச் சுவைத்து அனுபவிக்கலானான்.



வாசுதேவனுக்குக் கலெக்டர் துரை, ஸப்கலெக்டர் துரை முதலிய அதிகாரிகளைக் கவனிப்பதில் ஒரு திறமை தானாகவே தோன்றியது. அவர்களும் இவனுடைய சுறுசுறுப்பையும், ''காம்ப்'' செய்யும் சமயத்தில் இவன் வைத்திருக்கும் சீர் வரிசைகளையும் கண்டுமெச்சினார்கள். வாசுதேவனுடைய அதிகார நலமும், இரும்புப் பெட்டியில் இருக்கும் பொருள்களும் வளர்பிறைச் சந்திரனைப் போல் ஏற்றம் அடைந்து வந்தன.

ஒருநாள் வாசுதேவனுக்கு இரண்டாவது வகுப்பு மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்பட்டு உத்தரவு வந்தது. அன்று தாத்தாச்சாரியார் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. வேலை ஒப்புக்கொண்டு முதல்நாள் ஆபீசுக்குப் புறப்படும்பொழுது வாசுதேவன் தன் தந்தையை வணங்கினான். கூடிய சீக்கிரம் மற்றொரு இரும்புப் பெட்டி பெறவேண்டும் என்று அவரும் ஆசீர்வாதம் செய்தார். முன் சென்று தாத்தாச்சாரியார் தெருவில் நல்ல சகுனங்களை ஏற்பாடு செய்தார். விதவைகள் உள்ளே புகுந்து கொண்டார்கள். பூனைகள் பத்திரப்படுத்தப்பட்டன. சரியான சமயத்தில் ஒரு பசுவும் கன்றும் பக்கத்துத் தோட்டத்திலிருந்து வெளியேறின. குடத்தில் நீர் எடுத்துக்கொண்டு வரவேண்டுமென்று இட்ட கட்டளையை ஒரு சுமங்கலி நிறைவேற்றினாள். பில்லை போட்ட சேவகன் சைக்கிளைப் பிடித்துக் கொண்டு தெருவில் நின்றான். தலைப்பாகையும் நாமமுமாய் வாசுதேவன் வெளி வந்து, பனைஞல நின்று கொண்டு, சைக்கிளைப் பிடித்து, நொண்டி நொண்டித் தள்ளிச் 'சரேல்' என்று தாவி மேலே உட்கார்ந்து கொண்டு, வீதி வழியாய்த் தனது ஆபீசுக்குச் சென்றான்.



ரிவின்யூ இன்ஸ்பெக்டராக இருந்தபொழுது சம்பாதித்த நல்ல பெயரை மாஜிஸ்திரேட்டான வாசுதேவன் காப்பாற்றி வந்தான். 'ஒரு பிராதைத் தள்ளுபடி செய்கிறேன், அல்லது ஒருவனைத் தண்டித்துவிடுகிறேன்' என்று வாக்குக் கொடுத்தால் அது பத்திரத்தில் எழுதிக் கொடுத்தமாதிரி என்று அனைவரும் புகழ்ந்தார்கள். செய்ய முடியாத காரியத்துக்குப் பணம் வாங்கும் வழக்கமும் வாசுதேவனிடம் கிடையாது. இலை மறைவு, காய் மறைவு என்ற இங்கிதங்களை அறிந்தவன்: ''கோர்ட்டார் அவர்கள் நூறுவது பக்கத்தில் நான் சொல்லும் விஷயத்துக்கு ஆதாரத்தைக் காணலாம்'' என்று வக்கீல் ஒரு புத்தகத்தை நீட்டுவார். எதிர்க்கட்சி வக்கீல் உடனே ''இதென்ன ஆதாரம்? சின்ன ஆதாரங்களால் என்ன பயன்? இதோ நான் மேலான ஒரு ஆதாரத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். இருபதாவது பக்கத்தில் இருக்கிறது'' என்று மற்றொரு பெரிய சட்டப் புத்தகத்தைக் கொடுப்பார். முதல் புத்தகத்தில் ஒரு நூறு ரூபாய் காகிதம் வைத்திருந்து, இரண்டாவது புத்தகத்தில் இருநூறு ரூபாய் காகிதம் வைத்திருந்தால், வாசுதேவன் சிறிய ஆதாரம், நடக்கும் வியாஜ்யத்துக்குப் பொருத்தமாக இல்லை என்று புத்தகத்தை வக்கீலிடம் திருப்பிக் கொடுத்து விடுவான்.

இவ்வாறாக வாசுதேவன் நீதிநெறி தவறாமல் வேலை நடத்தி வந்தும், ஒரு சிலருக்கு அவன்மேல் மனவருத்தம் இருந்தது. உலகம் பொல்லாதது. எத்தனை பேருதவி பெற்றாலும் குறைகூறும் தன்மை படைத்தது!

கருணைக்கடல் முதலியார் என்று ஒரு மிராசுதார். அவர் ஒரு நண்பருக்கு வீட்டின் பேரில் கடன் கொடுத்திருந்தார். நண்பர் கடனைத் திருப்பித் தரவில்லை. வட்டியும் கொடுக்கவில்லை. முதலியார் வீட்டை ஏலத்துக்குக் கொண்டு வந்தார். தாமே வீட்டை எடுத்துக் கொள்வதென்று தீர்மானித்து ஏலதினத்தன்று அங்கு சென்றார். இவரைக் கண்டதும் இவருடைய பழைய நண்பருக்கு அடங்காத கோபம் வந்துவிட்டது. ஒருவரையொருவர் மனதார வைது கொண்டார்கள். முதலியார் கழியை ஓங்கினார். நண்பர் கழியை முதலியார் கையிலிருந்து பிடுங்கி முதுகிலும் தலையிலுமாய் ஐந்தாறு அடிகள் அடித்துவிட்டார். கூட்டம் சேர்ந்துவிட்டது. விரோதிகள் விலக்கப் பட்டனர். கோர்ட்டில் பிராது கொடுக்கப்பட்டது. முதலியார் நண்பர்மீது பிராது செய்தார். நண்பர் முதலியார்மீது பிராது செய்தார். உண்மை கிணற்றுக்குள் சென்று ஒளிந்து கொண்டது.

அவ்வளவு நாட்களாக நேர்மைதவறாத வாசுதேவன் இந்தப் பிராதை விசாரிக்கும் பொழுது ஒரு தவறு செய்துவிட்டான். முதலியார் சார்பு வக்கீல் தகுந்த ஆதாரத்தை எடுத்துக் காட்டியும் அதை மறுத்துவிட்டு, எதிர்ப் பக்கம் வக்கீல் சொன்னதை நம்பி விட்டான். அதற்கு ஒரு விதமான ஆதா

ரமும் கிடையாது. என்ன காரணமோ, தெரியவில்லை. வாசுதேவனுக்கு அந்த நண்பரிடம் ஒரு பச்சாத்தாபம் தோன்றிவிட்டது. வழக்கு தள்ளுபடி. முதலியார் மீசை துடித்தது. வீட்டுக்குச் சென்றதும் கலெக்டர் துரை அவர்களுக்கு ஒரு மொட்டைக் கடிதம் எழுதினார். வாசுதேவன் இரு கைகளையும் நீட்டி லஞ்சம் வாங்குவதாயும், கைகள் எப்பொழுதும் "தா" என்ற முத்திரையை அவலம்பித்திருப்பதினால் அவனுக்குக் "கருடன்" என்ற காரணப் பெயர் ஜனங்கள் கொடுத்திருக்கிறார்கள் என்றும், அவன் வீட்டில் பெரிய யானையும் குட்டியானையும் போல் இரண்டு இரும்புப் பெட்டிகள் இருக்கின்றன என்றும் அவை இரண்டிலும் புகை நுழையக்கூட இடமில்லாமல் சாமான்கள் இருக்கின்றன என்றும் பலவாறாக அவதூறுகள் நிரம்பிய ஒரு கடிதம் கலெக்டர் கையில் போய்ச் சேர்ந்தது. கலெக்டர் இதைப் படித்துப் புன்னகை செய்தார். வாசுதேவன் நேர்மையானவன், வேலையில் நிபுணன், யாரையாவது தண்டித்திருப்பான் என்று அதை வகை வைக்கவில்லை; இருந்தாலும் ஒரு விசாரணை செய்து வாசுதேவன் பேரில் ஒன்றுமே தவறு கிடையாது என்று தீர்மானித்து விட்டால் மேற்கொண்டு ஒரு மனுவும் வராது என்று எண்ணித் தான் ஒரு மொட்டைக் கடிதத்தில் கண்டுள்ள குற்றச்சாட்டுகளை விசாரணை செய்ய வருவதாகத் தம் குமாஸ்தா மூலமாக வாசுதேவனுக்குத் தகவல் சொல்லி விட்டார்.

விசாரணை என்றதும் வாசுதேவன் திடுக்கிட்டான். அன்றிரவே இரும்புப் பெட்டியில் இருந்த எல்லா நகைகளையும் பணத்தையும் ஒரு வண்டியில் வைத்துத் தன் மாப்பிள்ளை வீட்டில் கொண்டு போய்ப் பத்திரப்படுத்தி விட்டான். வாசுதேவன் வீட்டு மாப்பிள்ளை ஆபத்பாந்தவாச்சாரி ஒரு நடுத்தர மிராசுதார். வாசுதேவனுடைய தங்கையின் கணவர். கல்யாணம் நடந்து சில நாட்கள் வரை இவர்களிடையே பேச்சு வார்த்தை இல்லாமல் இருந்தது. பிறகு பாக்கி நின்ற சீர் எல்லாம் கொடுத்துச் சமாதானம் ஆயிற்று.

விசாரணை தினம் வந்தது. ஊரெல்லாம் இதே பேச்சு. கலெக்டர் முசாபரி பங்களாவில் தங்கி இருந்தார். வாசுதேவன் துரையை அபரிமிதமாகக் கவனித்தான். பஞ்சின்மேல் வைத்து மரப் பெட்டியில் அடைத்திருந்த காபூல் திராக்ஷை முதல், உள்ளூர் குடியானவனைத் துயில் எழுப்பும் கோழிவரை எல்லாச் சாமான்களும் நிறைந்திருந்தன. துரையிடம் வாசுதேவன் ஊரில் நடக்கும் அநியாயங்களையும், அதிகாரிகள் படும்பாட்டையும் விவரமாக எடுத்துரைத்தான். துரையின் மனம் கரைந்தது. "துரையே! இதோ என் வீட்டு இரும்புப் பெட்டியின் சாவி. நீங்களே திறந்து பாருங்கள். அநியாயமாக நான் சம்பாதித்த பொருள் ஏதாவதிருந்தால், என் குல தெய்வமான திருப்பதி ஸ்ரீனிவாஸன் பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். அதெல்லாம் கல்லும் மண்ணுமாய்ப் போகட்டும்" என்று உருக்கமாகச் சொன்னான் வாசுதேவன். துரை திரும்பக் கொடுத்து விட்டார்!

மறுநாள் காலையில் வாசுதேவன் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஒரு வண்டியில் ஏறி அடுத்த கிராமத்திலிருந்த தன் மாப்பிள்ளை வீட்டுக்குச் சென்றான். மாப்பிள்ளையிடம் நடந்ததைச்சொன்னான். நடந்ததெல்லாம் தான் கேட்டுத் தெரிந்து கொண்டதாக மாப்பிள்ளையும் பதில் கூறினார்.

"சரி! சாமான்களை எடுத்துக் கொண்டு போகட்டுமா?" என்றான் வாசுதேவன்.

"அதற்கென்ன தடை, எடுத்துக் கொண்டு போங்கள்" என்றார் மாப்பிள்ளை.

தம் இரும்புப் பெட்டியைத் திறந்தார் மாப்பிள்ளை. "ஐயோ!" என்று திடீரென்று பின்வாங்கினார். வருத்தத்துடன் வாசுதேவனைப் பார்த்தார். பெட்டியில் நாலைந்து கற்கட்டிகளும் இரண்டு மூன்று மண் குவியல்களுமே இருந்தன.

மாப்பிள்ளை தம் தலையை அசைத்தார். அவர் கண்களில் நீர் ததும்பியது.

"நான் அப்பவே சொன்னேன், திருப்பதிக் கடவுளின் பேரை வீணாக உபயோகிக்காதே என்று. பார்த்தாயா, கைமேல் பலன்" என்று வியந்தார் மாப்பிள்ளை.

"அடே பாவி, உன்னை நான் இலேசில் விடமாட்டேன்" என்று ஏக்கத்துடன் வீரியம் பேசினார் வாசுதேவன்.

. . . You'll love

# MAX FACTOR

HOLLYWOOD

## Color-fast LIPSTICK

Lanolin-rich Color-fast Lipstick won't blot away, won't fade away, won't eat away...stays on until you take it off. Its satiny long-lasting lustre will always be on your lips. It looks better, feels better too!



Eight Exciting New Shades

Available at all Leading Cosmetic and General Stores

Rs. 9/-, 5-75
refill 3-75



ELEANOR PARKER
in "LIZZIE"
an MGM release

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD: MADRAS. BOMBAY. CALCUTTA.

# பொங்கிவரும்

## முன்னுரை

கதைகளுக்கு முன்னுரை எழுதுவது அவ்வளவு சரியல்ல என்பதுதான் என்னுடைய கருத்து. கதையைப் படிக்க வேண்டும் என்ற நேயர்களின் ஆர்வத்துக்கும் கதைக்கும் இடையே முன்னுரை என்ற குறுக்குச் சுவர் நிற்பதாகவே கருதுகிறேன்.

சாமர்த்தியசாலிகள் இந்தக் குறுக்குச் சுவரை ஒரே தாண்டலாகத் தாண்டி விட்டுப் போய் விடுவார்கள். அதாவது முன்னுரை அச்சாகி யிருக்கும் பக்கங்களைப் படிக்காமலேயே புரட்டி விட்டுக் கதையைப் படிக்க ஆரம்பித்து விடுவார்கள் !

ஆனால் அப்படிக் கெட்டிக்காரத்தனமாக அந்தக் குறுக்குச் சுவரைத் தாண்டத் தெரியாத அப்பாவிகளும் இருக்கிறார்கள்.....(அடேடே ! சற்று இருங்கள். உங்களை அப்பாவி என்று சொல்லி விட்டேனே என்பதற்காகக் கோபித்துக் கொண்டு பக்கத்தைப் புரட்டி விடாதீர்கள் ! என்னையும் சேர்த்துக் கொண்டுதான் அப்படிச் சொன்னேன். தயவுசெய்து என்னை மன்னித்துவிட்டு இந்த முன்னுரையை மட்டும் படித்து முடித்து விடுங்கள் !)

பிடிக்காத விஷயமானாலும் இந்தக் கதையைப் பொறுத்த வரையில் முன்னுரை எழுதியே தீர வேண்டி யிருக்கிறது. வேறு வழியில்லை !

இந்தக் கதையைப் படிக்கும்போது சிலருக்கு வியப்பாக இருக்கலாம். சிலருக்குத் துக்கமாக இருக்கலாம். வேறு சிலருக்கு சந்தோஷமாக இருக்கலாம். இன்னும் சிலருக்கு இந்தக் கதையை எழுதத் துணிந்த ஆசிரியர்மீது கோபம் கோபமாக வரலாம்.

காரணம் இதுதான் :

நமது வாழ்நாளில் நாம் எத்தனையோ மனிதர்களைத் தினந்தோறும் சந்திக்கிறோம். சாலையில் நடக்கும்போதும், பஸ்ஸில் பிரயாணம் செய்யும் போதும் ரயில்களில் போகும்போதும் இன்னும் பற்பல சந்தர்ப்பங்களில் பல்வேறுபட்ட மனிதர்களைச்சந்திக்கிறோம். அவர்களுடன் பேசிப் பழகுகிறோம்.

அப்படிப் பேசிப் பழகும் போது அவர்களில் பலர் மிகவும் நல்லவர்கள் என்று தெரிய வருகிறது. அவர்களுடன் மேலும் நெருங்கிப் பழகுகிறோம். நட்பு வளருகிறது.

ஆனால் அதே சமயத்தில் கெட்டவர் என்று தோன்றினால் உடனே ஒதுங்கிக் கொண்டு விடுகிறோம். "சேச்சே ! அவரோடு என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது ?" என்று தொடர்பை அறுத்து விடுகிறோம்.

இந்தக் கதையை எழுதும்போது அப்படி ஒதுங்கிப் போய்விடவில்லை. நல்ல சக்திகளுடன் நெருங்கிப் பழகி அளவளாவியது போலவே தீய சக்திகளிடமும் கதையில் நெருங்கிப் பழகியிருக்கிறேன். நன்றாகக் கண்களைத் திறந்து கொண்டு கதாபாத்திரங்களைப் பார்த்து, பேசி, அவர்களைப் பற்றி நன்கு அறிந்து கொண்டு பின்னர் எழுத முயன்றிருக்கிறேன். அப்படிப் பார்த்த போது ஒரு பேருண்மை என் கண்களுக்குப் புலப்பட்டது.

சமூகத்தில் தீய சக்திகள் எப்படி உருவாகின்றன ? மனிதனுடைய குணாதிசயங்கள் வித்திலிருந்தே உருவாகி விடுகின்றன என்று சொல்லலாம். இது விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்பட்டுள்ள ஓர் உண்மையுங்கூட.

கி.ராஜேந்திரன்



இருந்தபோதிலும் தீய சக்திகள் என்று நாம் எண்ணுபவர்களில் பலர் பிறக்கும் போதே அப்படிப் பிறந்து விடுவதில்லை. கெட்டவர்கள் என்று நாம் நினைப்பவர்களில் பலர் சந்தர்ப்பவசத்தால், சூழ்நிலையின் காரணத்தால் அப்படி மாறுகிறார்கள். சந்தர்ப்பமும் சூழ்நிலையும் நல்லபடியாக அமைந்து விட்டால் கவலையே இல்லை.

அவை நல்லபடியாக அமையாதுபோனால் ஒரு மாபெரும் போராட்டம்நடைபெறுகிறது.

சந்தர்ப்பமும் சூழ்நிலையும் ஒருபுறம். அதில் சிக்கித் தவிக்கும் மனிதனின் நேர்மை உணர்ச்சி மற்றொரு புறம். இந்த இரு சக்திகளுக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தில் மனிதனின் நேர்மை உணர்ச்சி சில சமயங்களில் வெற்றி பெறுகிறது. அவன் நல்ல மனிதனாகிறான். வேறு சில சமயங்களில் சந்தர்ப்பமும் சூழ்நிலையும் வெற்றி பெறுகின்றன. அப்போது தீய சக்தி உருவாகின்றது.

ஆனால் இறுதியில் தீய சக்திகள் நிச்சயமாக அழிந்துதான் போகின்றன. தூய சக்திகள் வெற்றி பெறத்தான் செய்கின்றன.

இனி கதையைப் பார்க்கலாம்.

## அத்தியாயம் 1

# சண்டமாருதம்

சென்னைமாநகரத்தில் ஒரு அகன்ற சாலை. மாலை நேரம். சூரிய வெளிச்சம் சாலையில் முழுவதும் படாதபடி இரு பக்கங்களிலும் வளர்ந்திருந்த மரங்கள் தடுத்தன. ஆங்காங்கே மரங்களின் இலைகளுக்கு இடையே கண்ணைப் பறிக்கும் பிரகாசத்துடன் சூரிய கிரணங்கள் புகுந்து வந்தன. நிழலும் ஒளியுமாகச் சேர்ந்து சாலையில் ஏதேதோ விசித்திரமான கோலங்களைப் போட்டுக் கொண்டிருந்தன. மரங்களில் பழைய இலைகளெல்லாம் உதிர்ந்து புதிய இலைகள் தளிர் விட்டிருந்தன. அந்த இளந் தளிர்களில் சூரிய கிரணங்கள் பட்டு, அதே சமயத்தில் காற்றில் அவை சல சல வென்று ஆடும்போது ஏதோ ஏராளமான சின்னஞ் சிறு தங்கத் தகடுகள் மெல்ல அசைந்து கொடுப்பது போல் தோற்றம் அளித்தன.

சாலையில் போவோரும் வருவோரும் ஏராளமான பேர் இருந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவராவது இயற்கையின் இந்த அற்புத விளையாட்டைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவரவர்கள் தங்கள் காரியத்தில் கருத்தாக விரைந்தார்கள். இதைக் கவனிக்க அவர்களுக்கு நேரம்தான் ஏது? நகர வாழ்க்கையில் உள்ள மிகப் பெரிய குறை இது.

இந்தச் சாலையில் ஒரு மோட்டார் கார் அதி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. காரை டாக்டர் நடராஜன் ஓட்டிக் கொண்டு சென்றான். அதில் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை. கார் அதி வேகமாகச் செல்லச் செல்ல நடராஜனின் மனத்தில் ஒரு விசித்திரமான எண்ணம் உருவாயிற்று. சாலையைப் பார்த்துக் கொண்டே காரை ஓட்டிய அவனுக்குக் கார் சாலையை விழுங்கிக் கொண்டே முன்னேறுவது போன்ற ஒரு உணர்ச்சி. 'விழுங்கு! விழுங்கு! உன்னுடைய அகோரப் பசிக்கு இன்னும் எவ்வளவு விழுங்கினாலும் போதாது' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் நடராஜன்.

திடீரென்று அவன் உரக்கச் சிரித்தான். ரோட்டில் நடந்து சென்று கொண்டிருந்த சிலர் வியப்புடன் திரும்பினார்கள். ஆனால் அதற்குள் கார் வெகு தூரம் சென்று விட்டது. இது போன்ற அர்த்தமற்ற எண்ணங்கள் அவன் மனத்தில் அடிக்கடி தோன்றியவண்ணம் இருந்தன. அவனுடைய மனத்தில் அமைதி இல்லை. அதில் புயல்காற்று வீசியது. ஆயிரமாயிரம் மின்னல்கள் ஒரே சமயத்தில் மின்னின. பேரிடிகள் இடித்தன. கருமையான மேகங்கள் வந்து சூழ்ந்து கொண்டன. 'சோ' வென்று மழை கொட்டுக் கொட்டென்று கொட்டியது. அவன் உள்ளம் சண்டமாருதத்தில் சிக்கித் தவித்தது.

காரின் வேகம் அதிகமாயிற்று. இரண்டு சாலைகள் சந்திக்கும் இடத்தின் நடுவே ஒரு போலீஸ்காரன் நின்று கொண்டு நடராஜனைக் காரை நிறுத்தும்படி சைகை காட்டினான். நடராஜன் அதனைக் கவனிக்கவில்லை. கவனித்திருக்கவும் முடியாது. அவன் உள்ளம் ஒரு நிலையில் இருந்தால் அல்லவா அதனைக் கவனிக்க முடியும்? கார் போலீஸ்காரனைத் தாண்டி மேலே சென்றது. போலீஸ்காரன் விசில் ஊதியதையும் நடராஜன் கவனிக்கவில்லை.

சிறிது தூரத்தில் மரங்களினூடே ஒரு பெரிய கட்டடம் தென்பட்டது. அதை நெருங்கியதும் பழக்கத்தின் காரணமாகவே தன்னையறியாமல் காரின் வேகத்தை நடராஜன் குறைத்தான். வேகமாகத் திரும்புவதால் ஏற்படும் 'கீச் கீச்' என்ற சத்தத்துடன் கேட்

டைத் தாண்டிச் சென்று கார் நின்றது. அந்தப் பெரிய கட்டடத்தின் முன்னால் அதைவிடப் பெரியதொரு தோட்டம். அழகிலும் அமைப்பிலும் தோட்டமும் கட்டடமும் ஒன்றோடொன்று போட்டியிட்டன. தோட்டத்தின் நடுவே வட்டவடிவமான புல் தரை. அதன் நடுவே ஒரு பொங்குபுனல். அதனைச் சுற்றிலும் நாலா பக்கங்களிலும் நடை பாதைகள். நடைபாதையின் இரு மருங்கிலும் பலவித வண்ண மலர்ச் செடிகள் பூத்துக் குலுங்கின.

இன்னொரு சமயமா யிருந்தால் நடராஜன் காரிலிருந்து இறங்கியதும் அங்கேயே சிறிது நேரம் நின்று தன் தோட்டத்தின் அழகை ரசித்திருப்பான். இவ்வளவு அற்புதமான ஒரு தோட்டம் தன்னுடையது என்ற எண்ணத்திலே மனம் பூரித்திருப்பான். அருகே கைகளைக் கட்டிக் கொண்டு பயபக்தியுடன் நின்ற தோட்டக்காரர்களிடம் தோட்டத்தை மேலும் விருத்தி செய்ய ஏதேனும் யோசனைகள் கூறியிருப்பான்.

ஆனால் இப்போது அம்மாதிரி செய்யவில்லை. படீரென்று காரின் கதவைச் சாத்திவிட்டுக் கட்டடத்துக்குள் வேகமாக நுழைந்தான். கட்டடத்தின் வாயில் 'ராஜன் நர்ஸிங்ஹோம்' என்று கொட்டை எழுத்துக்களில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது.

நடராஜன் கட்டடத்தின் உள்ளே நுழைந்ததும் விசாலமான முன் அறையில் அவனைப் பார்க்க வந்திருந்த நோயாளிகள் மரியாதையாக எழுந்து நின்றார்கள். நடராஜன் அவர்களைக் கவனிக்கவில்லை. அடுத்தாற் போல் இருந்த நீண்ட பெரிய அறையில் பத்துப் பதினைந்து கட்டில்களில் நோயாளிகள் படுத்திருந்தார்கள். நடராஜன் அவர்களையும் கவனிக்காமல் வேகமாக அறையைக் கடந்து மாடிப்படிகளில் ஏறினான்.

இப்படி அவன் யாரையுமே கவனிக்காமல் சென்றதை நர்ஸ் பவானியும் நிர்மலாவும் பார்த்தார்கள். அவர்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது. நடராஜன் இதைப் போல் எப்போதுமே நடந்து கொண்டதில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் அர்த்தபுஷ்டியுடன் பார்த்துக் கொண்டார்கள்.

மாடிக்குச் சென்ற நடராஜன் தனது தனி அறையில் புகுந்தான். அங்கிருந்த நாற்காலியில் பொத்தென்று விழுந்தான். எதிரே இருந்த மேஜைமீது முழங்கையை வைத்து விரல்களால் தன் முகத்தை அழுத்தி மூடிக் கொண்டான். ''எனக்கு என்ன வந்துவிட்டது?'' என்று தன்னைத்தானே திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டான். ''ஒரு வேளை பைத்தியம் பிடித்துவிட்டதோ? சீச்சீ! அப்படி யெல்லாம் ஒன்றும் இருக்காது. டாக்டராகிய எனக்குத் தெரியாதா என்ன? எனக்குப் பைத்தியம் இல்லை. நிச்சயம் இல்லை. பின்னர் என் மனம் இப்படி அமைதியற்றுத் தவிக்கிறதே ஏன்? ஒரு காரியமும் செய்ய முடியாமல் சிரமப்படுகிறேனே ஏன்? எதையும் சரியாகச் சிந்திக்க முடியாமல் விழிக்கிறேனே ஏன்? ஏன்? ஏன்? ஏன்? ஏஏஏஏன்?'' அறையின் நாலா பக்கங்களிலிருந்தும் 'ஏன்? ஏன்? ஏன்?' என்ற எதிரொலி கிளம்பியது. நடராஜன் திடுக்கிட்டு நிமிர்ந்தான்.

அறையின் கதவைத் திறந்துகொண்டு நர்ஸ் நிர்மலா நின்று கொண்டிருந்தாள். ''ஏதோ சத்தம் போட்டீர்களே ஏன்?'' என்று கேட்டாள்.

''சத்தம் போட்டேனா என்ன? எனக்குத் தெரியாதே?'' என்றான் நடராஜன்.



நிர்மலா தன் அகன்ற கண்களை மேலும் அகலமாகத் திறந்து அவனை வியப்புடன் பார்த்தாள். ''உங்களுக்கு உடம்பு ஏதாவது சரியில்லையா?'' என்றாள் பரிவோடு.

''உடம்புக்கு ஒன்றும் இல்லை, நிர்மலா. உள்ளம்தான் சரியாக இல்லை. சிறிது நேரம் தனியாக இருக்க விரும்புகிறேன். யாரையும் சந்தித்துப் பேச விருப்பமில்லை'' என்றான் நடராஜன்.

''வாசலில் காத்திருக்கும் நோயாளிகள்......'' என்று இழுத்தாள் அவள்.

''தயவுசெய்து பவானியிடம் சொல்லி அவர்களை அனுப்பிவிடச் சொல்லு. எனக்கு உடல் நிலை சரியில்லை என்றும் நாளை வந்தால் பார்க்கலாம் என்றும் சொல்லிவிடச் சொல்லு.''

நிர்மலா பதில் பேசவில்லை. கதவை மூடிவிட்டுச் சென்றுவிட்டாள். அவள் போனதும் நடராஜன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அவன் உள்ளத்தில் வீசிய சண்டமாருதம் இன்னும் அடங்கவில்லை. மேஜைக்கு அருகே எக்ஸ்ரே

படங்களுக்கு ஒளி செலுத்திப் பார்க்கும் ஒரு கருவி இருந்தது. மேஜை மீது நோயாளிகளைப் பற்றிய குறிப்புக்கள் அடங்கிய 'பைல்கள்'. சற்றுத் தூரத்தில் ஒரு கண்ணாடி அலமாரி. அதனுள் வரிசை வரிசையாக ஏராளமான புட்டிகள் அடுக்கப்பட்டிருந்தன. அந்தக் கண்ணாடி சீசாக்களில் பற்பல வர்ணங்களில் மருந்துப் பொருள்கள் இருந்தன. அலமாரியின்மீது சிவப்பு எழுத்துக்களில் 'விஷங்கள்' என்று ஆங்கிலத்தில் எழுதி ஒட்டப்பட்டிருந்தது.

கண்ணாடி அலமாரிக்கும் சுவருக்கும் இடையே ஒரு சிலந்தி தன் கூட்டை அமைத்துக் கொண்டிருந்தது. ஜன்னல் வழியே வந்த மாலைக் கதிரவனின் செம்பொற்கிரணங்கள், சிலந்தி பின்னிய அந்தக் கூட்டின் மீது பட்டு அதனை மெல்லிய தங்கக் கம்பிகளால் பின்னப்பட்ட ஒருவலையாக மாற்றியது.



நடராஜன் அதனைப் பார்த்தான். 'என்னுடைய நர்ஸிங் ஹோமில் சிலந்திக் கூடா? துப்புரவாக இருக்க வேண்டியது மிக அவசியம் அல்லவா? பவானி எப்படி இவ்வளவு அசிரத்தையாக இருந்தாள்?' என்று எண்ணிக் கொண்டே மேஜையின் மீது இருந்த மணியைக் கோபத்தினால் வேகமாக அடிக்கப் போனான். தூக்கிய அவனுடைய கை சட்டென்று நின்றுவிட்டது.

அவன் மீண்டும் அந்த வலையைப் பார்த்தான். அதனைப் பின்னிய அந்தச் சிலந்தியைப் பார்த்தான். அதே சமயத்தில் அந்தப் பக்கமாகச் சென்ற ஒரு அப்பாவி ஈ அதில் சிக்கிக் கொண்டது. தனியாகத் தவித்தது. தன்னை விடுவித்துக் கொள்ள அது பெரு முயற்சி செய்தது; முடியவில்லை.

டாக்டர் நடராஜன் உரக்கச் சிரித்தான். அவன் கண்களுக்கெதிரே அந்தச் சிலந்தி சிறிது சிறிதாக வளர்ந்தது. அது பெரிதாகப் பெரிதாக அதன் உருவமும் மாறிக் கொண்டே வந்தது. கடைசியில் ஒரு பெண்ணின் உருவத்தை அந்தச் சிலந்தி அடைந்தது. அதே சமயத்தில் அந்த ஈயும் வளர்ந்தது. வளர்ந்து ஒரு ஆண் மகனின் உருவத்தை அடைந்தது. அதில் வேடிக்கை என்னவென்றால் அந்த பெண் உருவமும் ஒரு வலையை விரித்திருந்தது. அந்த வலையில் அந்த மனிதன் சிக்கித் தவித்தான். விடுபட முயன்றான். முடியவில்லை.

டாக்டர் நடராஜன் மேலும் உற்றுக் கவனித்தான். அந்தப் பெண் உருவம் யார் என்று பார்த்தான். அவன் நினைத்தபடியே தான் இருந்தது. அந்த அழகிய பெண் மல்லிகாதான். சந்தேகமில்லை. நடராஜன் இப்போது அந்த மனிதனைப் பார்த்தான். அந்த மனிதன் வேறு யாருமில்லை. அவனேதான்!

இது என்ன விந்தை? நான் தான் இதோ இந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேனே? அங்கே எப்படி மல்லிகா விரித்த வலையில் நான் சிக்கித் தவிக்க முடியும்?

டாக்டர் நடராஜன் அந்தக் காட்சியைக் காண விரும்பாதவன் போல் கண்களை இறுக மூடிக் கொண்டு அதனை அப்புறப் படுத்த முயன்றான். அதில் ஓரளவுக்கு வெற்றியும் கண்டான். அவன் மனக் கண் முன்னால் மல்லிகா விரித்த வலையும் அதில் சிக்கித் தவித்த நடராஜனும் மறைந்து விட்டார்கள். ஆனால் மல்லிகா மறையவில்லை. அவளையும் அப்புறப்படுத்த எவ்வளவோ முயன்றும் அதில் நடராஜன் தோல்வியே அடைந்தான். கடைசியில் அந்த முயற்சியையே கைவிட்டு விட்டான்.

மல்லிகாவை முதன் முதலில் தான் சந்தித்தது நடராஜனுக்கு ஞாபகம் வந்தது. அவள் கட்டிலில் படுத்திருந்தாள். உடல் நிலை சரியில்லாததால் அவள் முகம் வெளிறிப் போயிருந்தது. அதில் உற்சாகம் இல்லை; மகிழ்ச்சி இல்லை. இருந்தபோதிலும் அந்த முகத்தின் அழகு சிறிதளவும் குறையவில்லை. மல்லிகா உற்சாகம் இழந்து. மகிழ்ச்சியற்று இருப்பதே ஒரு தனி அழகாகத்தான் இருந்தது.

நாடியைப் பார்ப்பதற்காக அவளது கரத்தைப் பற்றினன் டாக்டர் நடராஜன். அந்தக் கணத்தில் அவன் உடல் முழுவதும் சிலிர்த்தது! எவ்வளவோ நோயாளிகளுக்கு வைத்தியம் செய்திருக்கிறன் நடராஜன். அவர்களுக்கு வைத்தியம் செய்யும் போதெல்லாம் அதனை ஒரு கடமையாகக் கருதிச் செய்தானே ஒழிய வேறு எந்த விதமான உணர்ச்சியும் அவனுக்கு இதுவரையில் ஏற்பட்டதே இல்லை. மல்லிகாவைக் கண்டதுமே அவனுக்குத் தடுமாற்றம் ஏற்படுவானேன்?

மல்லிகாவுக்கு வைத்தியம் செய்ய ஆரம்பித்தான் நடராஜன். அது விமலாவுக்குப் பிடிக்கவில்லை. "வேண்டாம், அத்தான்! தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். அது பாம்புக்குப் பால் வார்ப்பது போல, அத்தான்!" என்றுள் அவள். விமலா சொன்னதை நடராஜன் அப்போது கேட்கவில்லை. ஏதேதோ காரணம் சொன்னுன். விவாதங்கள் நடந்தன. இருவராலும் ஒரே முடிவுக்கு வர முடியவில்லை. இப்போது அதற்காக நடராஜன் வருந்தினன். "அன்று விமலா சொன்னதைக் கேட்டிருக்கலாம். அப்படிக் கேட்டிருந்தால் இப்போது அதே விமலாவை எண்ணி எண்ணி நான் தவிக்கும்படி நேர்ந்திருக்காதல்லவா?

"விமலா! விமலாதான் இப்போது எப்படி மாறி விட்டாள்? நான் மேல்நாட்டுக்குப் பயணமான போது கண்களில் கண்ணீருடன் என்னை வழியனுப்பி வைத்த விமலா எங்கே? நேற்று நான் பார்த்த விமலா எங்கே?" பாவாடையும் தாவணியும் அணிந்து கொண்டு குறுக்கேயும் நெடுக்கேயும் ஏதோ பெரிய வேலைகளைச் செய்து கிழிப்பவள்போல் ஓடிக் கொண்டிருந்த அந்த விமலாவின் ஞாபகம் வந்தது நடராஜனுக்கு. அதைத் தொடர்ந்து இன்னும் தன்னுடைய வாழ்க்கையிலும் தனது நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரது வாழ்க்கையிலும் ஏற்பட்ட பற்பல அதிசயிக்கத் தக்க ஆனல் உண்மையான சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் ஒன்றன்பின் ஒன்ருக நினைவுக்கு வந்தன.

டைரக்டர் சுகுமாரன் தோன்றினர். கண்களில் கண்ணீர் வெள்ளம் பெருக அவர் மனைவி தோன்றினுள். அவர்களுடைய மகன் கோபாவேசத்தோடு வந்தான். கலகலவென்று சிரித்துக் கொண்டு மணிசேகரன் தோன்றினன். கதறிக் கொண்டே கதிர்வேலன் தோன்றினன். தாமரை மலர்வதுபோல் தனது அகன்ற கண்களை மேலும் அகலத் திறந்து கொண்டு நிர்மலா தோன்றினுள். அந்தக் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்பி நின்றது. சேகர் தோன்றினன். சூழ்ச்சிகள் பல செய்தான். இன்னும் பலர் ஒருவர் பின் ஒருவராக நடராஜனின் மனத்திரையிலே தோன்றினர்கள். அவர்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட அதிசயமான சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்ருக, கோவையாக, சலனப் படத்தைப் போல் அவனுடைய மனத்திரையிலே தோன்றிக்கொண்டேயிருந்தன.

தனது நெருங்கிய நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரது வாழ்க்கையில் ஏற்பட்ட அந்த விநோதமான சம்பவங்களைப் பற்றி ஆரம்பத்திலிருந்து எண்ணுவதே தான் தேடும் மன அமைதியை அளிக்கும் என்பதை நடராஜன் உணர்ந்து கொண்டான். அதன் பின் தன்னுடைய மனத்தை அவன் கட்டுப்படுத்த முயலவில்லை. அதனுடைய போக்கில் விட்டு விட்டான். அவன் உள்ளத்தில் வீசிய சண்டமாருதம் கொஞ்சம் கொஞ்சமாக அடங்க ஆரம்பித்தது. அவனுடைய மனம் ஒவ்வொரு சம்பவத்தையும் நிதானமாக எண்ணிப் பார்க்க ஆரம்பித்தது......

## அத்தியாயம் 2

# அபாய அறிவிப்பு!

தபால்காரர் நான்கைந்து கடிதங்களை வாசலில் போட்டுவிட்டு 'போஸ்ட்' என்று ஒரு குரலும் கொடுத்துவிட்டுப் போனுர். அந்தச் சத்தத்தைக் கேட்டதுமே வீட்டில் இருந்த இருவர் ஓடோடியும் வந்தார்கள்.

நடராஜன் மாடிப் படியிலிருந்து தடதட வென்று இறங்கி வந்தான். விமலா சமையலுள்ளிலிருந்து குடு குடு வென்று ஓடி வந்தாள். நடராஜன் கடிதங்களை எடுக்க ஓடி வருகிறன் என்று தெரிந்ததும் அவளது வேகம் இன்னும் அதிகமாயிற்று. அதேபோல் விமலா கடிதங்களை எடுக்க வருகிறுள் என்று அறிந்ததும் நடராஜனின் வேகமும் அதிகரித்தது. இருவரும் ஒரே சமயத்தில் வாசலுக்கு ஓடி வந்து தரையில் கிடந்த கடிதங்களை எடுக்கக் குனிந்தார்கள். 'மட்' என்ற சத்தத்துடன் இருவர் தலைகளும் மோதிக் கொண்டன. 'அப்பப்பா!' என்று இருவரும் தலையில் கையை வைத்துக் கொண்டு எழுந்தார்கள்.

"அப்படி என்ன அவசரம்?" என்று கேட்டான் நடராஜன்.

"உனக்கு மட்டும் என்ன அவசரம்?"

"எனக்கு என்னவோ அவசரம். அதைப் பற்றி உனக்கு என்ன?"

"எனக்கும் என்னவோ அவசரம். அதைப் பற்றி உனக்கு என்ன?"

"அப்படி அவசரமானால் எடுத்துக் கொள்."

"அவசியம் எடுத்துக் கொள்ளப் போகிறேன்."

"எங்கே எடுத்துக் கொள்ளேன், பார்க்கலாம்."

விமலா குனிந்தாள். அதற்குள் நடராஜன் லாகவமாக வளைந்து கடிதங்களை எடுத்துக் கொண்டு விட்டான்.

"அம்மா!" என்று அலறினாள் விமலா.

"அம்மா!" என்று அழகு காண்பித்தான் நடராஜன்.

உள்ளேயிருந்து இருவரது தாயார்களுமே ஓடி வந்தார்கள். "என்னடாது? குழந்தையை அழ விட்டுண்டு" என்று கடிந்து கொண்டாள் நடராஜனின் தாயார்.

"ஐயோ பாவம்! பச்சைக் குழந்தை" என்று கேலி செய்தான் நடராஜன்.

அதற்குமேல் விமலாவினால் பொறுக்கவே முடியவில்லை. விசித்து விசித்து அழுது விட்டாள். "சீ அசடு! இதற்கெல்லாமா அழுவார்கள்? நாளைக்கு நீ அவனைத்தானே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய்? இப்படி நீ அழுதால் அவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அப்புறம் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று கூடச் சொன்னாலும் சொல்லி விடுவான்" என்று மகளுக்கு எச்சரிக்கை செய்தாள் மரகதம்மாள்.

"ஆமாம்! இந்த அழுமூஞ்சிப் பெண்ணை நான் கட்டிக்க மாட்டேன்" என்றான் நடராஜன். விளையாட்டாகத்தான் அப்படிச் சொன்னான். அவர்களுடைய திருமணம் குழந்தைப் பிராயத்திலேயே நிச்சயமாகிப்போன விஷயம். ஆனால்



அது விமலாவுக்கு விளையாட்டாகப் படவில்லை. அவளுடைய விம்மலும் அழுகையும் முன்னைவிட அதிகமாயிற்று.

நடராஜனின் தாயார் பொன்னம்மாளுக்கு நிஜமாகவே தன் மகன்மீது கோபம் வந்தது. "இந்தா ராஜு! விளையாட்டுக்கு ஒரு எல்லையில்லையா? வயது இருபத்திரண்டு ஆகிறது. டாக்டர் பட்டமும் பெற்று விட்டாய். லண்டனுக்கு வேறு போகப் போகிறாய். இப்படிக் குழந்தைத்தனமாக விளையாடலாமா?" என்று அதட்டினாள். நிஜமாகவே கோபம் வந்து கடிந்து கொண்டாலும் வார்த்தைகள் இந்த மட்டோடு தான் நின்றன. ஒரே புதல்வனை, கண்ணுக்குக் கண்ணான ஆருயிர் மைந்தனை இதற்கு மேல் கோபித்துக் கொள்ள எந்தத் தாய்க்குத்தான் மனம் வரும்!

"அம்மா! அப்பாவிடமிருந்து வந்த கடுதாசைத் தானே நான் கேட்டேன்? அதற்குப் போய் இவ்வளவு ரகளை பண்ணுவானேன்?" என்றாள் விமலா விம்மலுக்கிடையே.

"அப்படி மரியாதையாகக் கேட்டால் கொடுத்து விட்டுப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டே ஒரு கடிதத்தை அவள் பக்கம் நீட்டினான் நடராஜன். விமலா அதனை வாங்கிக் கொள்ளவில்லை. அவள்

தாயார் மரகதம்மாள் வாங்கிக் கொண்டாள். நடராஜன் திரும்பி வேகமாக மாடியேறிச் சென்று விட்டான். அவன் ஆண்பிள்ளை. ரோசம் வந்து விட்டது அவனுக்கு.

மரகதம்மாள் ஆவலுடன் கடிதத்தைப் பிரித்தாள். "என்ன எழுதியிருக்கிறார்?" என்று பொன்னம்மாள் கேட்கவே, மரகதம் உரக்கவே வாசித்தாள். விமலாவும் கண்களைத் துடைத்துக் கொண்டு கேட்டாள்.

"அன்புள்ள விமலாவுக்கு, அப்பா அநேக ஆசீர்வாதம். வேலைத் தொந்தரவினால் உங்களோடு சேர்ந்து சென்னைக்கு வர முடியாதது குறித்து எனக்கு மிகுந்த வருத்தம். சௌக்கியமாய்ப் போய்ச் சேர்ந்தீர்கள் அல்லவா? நான் எப்படியும் நாளை இரவு புறப்பட்டு அங்கு வந்து சேர்ந்து விடுகிறேன்.

சிரஞ்சீவி நடராஜன் லண்டன் செல்வதற்கான ஏற்பாடுகளெல்லாம் சரியாக நடக்கிறதல்லவா? நீ சமர்த்தாக இருந்து அத்தானை நன்றாகக் கவனித்துக் கொள். அம்மாவைத் தொந்தரவு செய்யாமல் இருக்க வேண்டும். உன் மாமாவையும் மாமியையும் விசாரித்ததாகச் சொல்லு.

இப்படிக்கு அன்புள்ள,

அப்பா.

"பார்த்தாயா, விமலா? நான் சொன்னதையே அப்பாவும் சொல்லியிருக்கிறார். அத்தானிடம் அடக்கமாக நடந்து கொள்ள வேண்டும்" என்று கூறி முடித்தாள் மரகதம்.

விமலா பதில் பேசவில்லை. ஏதோ சிந்தனையில் ஈடுபட்டவளாக உள்ளே சென்று விட்டாள்.

* * *

**மா**டிக்குச் சென்ற நடராஜனுக்கு வேலையே ஓடவில்லை. அவன் தன்னுடன் மாடிக்கு எடுத்து வந்திருந்த கடிதங்களில் ஒன்றுகூட அவன் பெயருக்கு இல்லை. எல்லாம் அவன் தகப்பனார் பெயருக்கு வந்திருந்தன. வைத்தியத் தொழில் சம்பந்தமான ஒரு பத்திரிகையும், மூன்று கடிதங்களும் இருந்தன. கடிதங்களைத் தகப்பனார் மேஜையின்மீது வைத்து விட்டுப் பத்திரிகையைப் பிரித்தான். அதில் இருந்ததை அவனால் படிக்கவே முடியவில்லை. அதில் எழுத்துக்கள் இல்லை. விமலா இருந்தாள்! அவள் சிந்திய கண்ணீர் இருந்தது! தன் மீதே கோபம் வந்தது நடராஜனுக்கு. 'ஏன் அப்படி நடந்து கொண்டேன்?' என்று தன்னைத்தானே அவன் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டான். பெரியவர்களான பிறகும் பலருக்குச் சிறுபிள்ளைத்தனம் அடியோடு மறைந்து விடுவதில்லை. திடீர் திடீரென்று அது வெளிப்படுகிறது. அசட்டுத்தனம் என்றுசிறிது யோசித்துப் பார்த்தால் தெரியும். ஆனால் அந்தச் சமயத்தில் மனம் யோசிப்பதில்லை. காரியத்தைச்செய்துமுடித்த பின் வருந்துவார்கள். அதிலும், முக்கியமாகக் குழந்தைப் பருவத்தில் தான் செய்து வந்த காரியத்தின் சாயல் இந்தச் செயலிலும் இருந்து விட்டால் கேட்கவே வேண்டாம். இதேமாதிரியான நிலைதான் நடராஜனுக்கும் ஏற்பட்டது.



விமலாவோடு அவன் குழந்தையாக விளையாடியிருக்கிறான். சண்டை போட்டிருக்கிறான். குட்டி அழவிட்டிருக்கிறான். இட்டியிருக்கிறான். 'டு' விட்டிருக்கிறான். பின்னர் போனால் போகிறது என்று 'பழம்' விட்டிருக்கிறான். தன் வேலை நிமித்தமாக அவனுடைய தகப்பனார் திருச்சிக்குச் சென்ற பிறகு அவளை நீண்ட நாட்களாகச் சந்திக்கவேயில்லை. இப்போது அவளைத் தன் வீட்டில் வைத்துப் பார்த்ததும் குழந்தைப் பிராயத்துச் செயல்கள் அவனை அறியாமல் வெளியாகின.

தனக்கு வயதாகிவிட்டது என்பதோ, விமலா குழந்தையல்ல, நன்கு வளர்ந்து மங்கைப் பருவத்தை அடைந்து விட்டாள் என்பதோ அந்த நிமிஷத்தில் மறந்து போய் விட்டன.

"சேச்சே! அனாவசியமாக ஏதேதோ சொல்லி அவளை அழ வைத்து விட்டேனே, டாக்டர் பட்டம் வேறு பெற்று விட்ட நான்! அவளிடம் மன்னிப்பு கேட்க வேண்டும்" என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

**வா**சலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. 'அப்பா வந்து விட்

டார்' என்று எண்ணிக் கொண்டான் நடராஜன். டாக்டர் ராமலிங்கம் மாடியேறி வந்தார். ''பொன்னு! காப்பி எடுத்துக் கொண்டு வா!'' என்று கட்டளை யிட்டபடியே.

நடராஜன் கடிதங்களைச் சுட்டிக் காண்பித்தான். அவற்றைப் பார்த்துக் கொண்டே, ''சாமான்களெல்லாம் எடுத்து வைத்துக்கொண்டு விட்டாயா? அப்புறம் கடைசி நேரத்தில் ஏதாவது மறந்து போய்விடப் போகிறது'' என்றார் ராமலிங்கம்.

''அநேகமாக எல்லாம் எடுத்து வைத்தாகி விட்டது அப்பா, அம்மா தர வேண்டிய பொருள்களைத் தவிர!''

கீழே பொன்னம்மாள் தன் மகனுக்குத் தான் கொடுத்தனுப்ப வேண்டிய பொருள்களைத் தயார் செய்து கொண்டிருந்தாள். புதிதாக எலுமிச்சங்காய் ஊறுகாய், அப்பளம், 'கறிவடகம்' முதலியன. அவளுக்கு மரகதமும் விமலாவும் உதவி செய்தார்கள். பொன்னம்மாள் கை வேலையை அப்படியே விட்டு விட்டு, கணவனுக்குக் காப்பி எடுத்துக்கொண்டு மாடிக்கு வந்தாள்.

பின்னைக்கு அப்பா அறிவுரை வழங்கிக் கொண்டிருந்தார். அறிவுரை என்பது டாக்டர் ராமலிங்கத்தைப் பொறுத்த வரையில் ஒரே ஒரு விஷயம்தான். அது வைத்தியத் தொழிலின் மேன்மை, அதன் புனிதத் தன்மை, அதன் அவசியம், அதனை மேற்கொள்பவர்களுக்கு அதில் இருக்க வேண்டிய ஆர்வம் முதலியவைதான். இந்த அறிவுரைகளைப் பல முறை கேட்டிருக்கிறான் நடராஜன். இருந்த போதிலும் அவனுக்கு; அதில் அலுப்புத் தட்டியதேஇல்லை. அதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று தகப்பனரைப் போலவே அவனுக்கும் அந்தத் தொழிலில் இருந்த அளவுகடந்த ஆர்வம். மற்றொன்று அவனது தகப்பனரிடமே அவனுக்கு இருந்த பக்தி.




''அப்பா! நீங்கள் கவலைப்படாதீர்கள். நீங்கள் விரும்பி எதிர்பார்த்தது போலவே நான் முதல் வகுப்பில் டாக்டர் பரீட்சையில் தேறவில்லையா? அதே போல் தொடர்ந்து படித்து முன்னுக்கு வருவேன்'' என்றான் மகன்.

''இது மற்றத் தொழில்களைப் போல அல்ல ராஜு! அதை மறந்து விடாதே. இந்தத் தொழிலில் நீ மனிதர்களின் உயிர்களுடன் தொடர்பு கொள்கிறாய். உயிரைக் கொடுப்பதும் வாங்குவதும் கடவுளுக்குத்தான் உரியது. அப்படிக் கடவுளுக்கே சொந்தமான மனித உயிர்களை நமது கையில் வைத்துக் கொண்டிருக்கிறோம். மிக மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியமில்லையா?''

''காப்பி ஆறிப் போகிறது. அதைச் சாப்பிடுங்கள்!'' என்றாள் பொன்னம்மாள். அம்மா குறுக்கிட்ட அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நடராஜன் மெள்ள அங்கிருந்து நழுவினான். வேறு ஒரு நாளாக இருந்திருந்தால் அப்பாவுடன் பேசிக்கொண்டிருப்பதையே அவன் பெரிய வேலையாகக் கருதுவான். ஆனால் இப்போது அவன் மனத்தில் விமலா புகுந்து கொண்டு படாதபாடுபடுத்தி வந்தாள். அவளைத் தனியே சந்தித்துப் பேச அவன் உள்ளம் துடியாகத் துடித்தது.

* * *

விமலா பூப் பறித்துக் கொண்டிருந்தாள். அவனைக் கவனிக்கவில்லை. ''என்மேல் கோபமா, விமலா?'' என்ற குரல் காதில் விழுந்ததும் அவள் திடுக்கிட்டுத் திரும்பினாள்.

''ஏன் அப்படிப் பயப்படுகிறாய், விமலா?'' என்றான் நடராஜன்.

''ஒன்றுமில்லை அத்தான்!'' என்றாள் அவள், இதழ்களில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு.

''என்னை மன்னித்துவிடு, விமலா! அம்மா சொன்னது போல், நான் உன்னிடம் ரொம்ப அசட்டுத்தனமாகத்தான் நடந்து கொண்டு விட்டேன். ஒரு கடிதத்துக்காக உன்னை அவ்வளவு தூரம் அழ வைத்து விட்டேனே!''

'அம்மா சொன்னதற்காகத்தானா?' என்று தனக்குள் எண்ணிக் கொண்டாள் விமலா. வெளிப்படையாக, ''யார் யாரிடம் மன்னிப்புக் கேட்பது அத்தான்? உங்களிடம்தான் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும். தவறு என்னுடையதுதான்'' என்றாள்.

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

**வாய்நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக <u>வீரிய</u> குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோ-பிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது

"இருவருமே தவறு செய்து விட்டோம்!" என்றான் நடராஜன்.

விமலா ஒரு நீண்ட பெரு மூச்சுவிட்டாள். பின்னர் மெல்ல "அத்தான்...!" என்று அழைத்தாள்.

"என்ன விமலா?"

"அத்தான்! லண்டனுக்குப் போன பிறகு என்னை மறந்து விடுவீர்களா, அத்தான்?" விமலா தன்னைப் பற்றித் தானே எண்ணி வியந்தாள். இது என்னகேள்வி? இப்படியெல்லாம் கேட்க எனக்கு எப்படித் தைரியம் வந்தது?

"உன்னை மறந்தாலும் மறந்து விடுவேன். ஆனால் என்னை நீ இன்று படாத பாடுபடுத்தி வைத்தாயே, அதை மறக்கவே மாட்டேன்" என்றான் நடராஜன் சிரித்தபடியே.

நடராஜன் எதிர்பார்த்தது போல் விமலா சிரிக்கவில்லை. "இப்போது அப்படித்தான் பேசுவீர்கள். அங்குபோன பிறகு உங்கள் கவனமெல்லாம் படிப்பில் இருக்கும். சிறிது நேரம் அவகாசம் கிடைத்தாலும், அந்த நேரத்தில் உங்கள் கவனத்தைக் கவர அங்கு எத்தனை எத்தனையோ அழகிய பெண்கள் இருப்பார்கள். ஆடம்பரமான உடைகளை வசீகரமாக அணிவார்கள். முகத்தை அழகுபடுத்திக் கொள்ளும் கலையில் கைதேர்ந்தவர்களாக இருப்பார்கள். அவர்களுக்கிடையே இருக்கும் உங்களுக்கு இந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணின் நினைவு வருமா, அத்தான்?"



நடராஜனுக்கு ஒன்றும் புரியவில்லை. இவள் என்ன இப்படிப் பேசுகிறாள்? இப்படியெல்லாம் பேச இவள் எங்கு கற்றுக் கொண்டாள்? 'அட, அசடே! இன்னுமா உனக்குப் புரியவில்லை? நடராஜா! அவள் நீ நினைப்பதுபோல் சிறுமியில்லையடா! பார்! நன்றாகப் பார்! கண்களைத் திறந்துகொண்டு பார்! அவள் வளர்ந்து விட்டாள். உடல் வளர்ச்சியோடு அவளுடைய உள்ளமும் வளர்ச்சி அடைந்து விட்டது! அந்த உள்ளம் உனக்காக ஏங்குகிறது. உன்னுடைய நல்வாழ்வை எண்ணிப் பிரார்த்திக்கிறது. நீ சந்தோஷமாக இரண்டு வார்த்தைகள் சொல்லி விட்டால் பூரித்துப் போகிறது. கோபமாகப் பேசி விட்டால் மென்மையான அந்த உள்ளம் நொந்து போய்த் தவியாய்த் தவிக்கிறது. உன்னுடைய ஒவ்வொரு செயலுக்கும், சொல்லுக்கும், பார்வைக்கும், மூச்சுக்கும் ஏற்ப அந்த உள்ளம் தாளம் போடுகிறது. இதையெல்லாம் இன்னுமா நீ உணர்ந்து கொள்ளவில்லை?'

* * *

லண்டனுக்குப் புறப்பட்டு விட்டான் நடராஜன். விமலாவின் தகப்பனார் சிவஸ்வாமி முதல் நாள் ஊரிலிருந்து வந்து விட்டார். அத்தை திருஷ்டி கழித்தாள். அம்மா வேப்பிலைக் கொத்தைச் செருகினாள். மாமா அன்புடன் முதுகில் தட்டிக் கொடுத்தார். அப்பா மனம் பூரித்தார். சாமான்கள் காரில் ஏறின. அனைவரும் விமான நிலையத்துக்கு விரைந்து சென்றார்கள்.

விமானம் புறப்படப் போகிறது என்பதை ஒலிபெருக்கி மூலம் தெரியப்படுத்தினார்கள். அம்மா அழுதே விட்டாள். பின்ளைப் பாசம் அவளைப் பிடித்து உலுக்கியது. மகன் லண்டனுக்குப் போகிறான் என்ற பெருமை ஒருபுறம் இருந்தாலும் இரண்டு வருஷங்கள் ஒரே மைந்தனைப் பிரிந்து இருக்க வேண்டும் என்ற எண்ணமே அவளுக்குத் துக்கத்தை அளித்தது. அப்பா ஆலிங்கனம் செய்து கொண்டார். ஆருயிர் மைந்தனை அன்புடன் அவர் தழுவிக் கொள்வதைப் பார்த்த விமலாவுக்குப் பொறாமையாக இருந்தது!

"போய் வருகிறேன் அம்மா!

"போய் வருகிறேன் அப்பா!

"போய் வருகிறேன் அத்தை!

"போய் வருகிறேன் மாமா!

"போய் வருகிறேன் விமலா!"

விமலா பதில் பேசவில்லை. நடராஜனை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் கண்களில் இரு நீர்த்துளிகள் தேங்கி நின்றன. முன்பு விம்மி விம்மிக் கண்ணீர்ப் பிரவாகத்தை வரவழைத்தது போன்று இல்லை. இரண்டே இரண்டு கண்ணீர்

முத்துக்கள் கண்களின் ஓரத்திலே பிரகாசித்தன. நடராஜன் தன் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்தான். மெல்ல அந்தக் கண்களின் ஓரத்திலே இருந்த கண்ணீரைத் துடைத்தான். மிகமிக ஜாக்கிரதையாக இருந்த போதிலும் அவனுடைய சுண்டு விரல் விமலாவின் பட்டுப் போன்ற மிருதுவான கன்னத்தைத் தீண்டி விட்டது.

விமலா நடுங்கி விட்டாள். உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் மின்சாரம் பாய்ந்ததுபோன்று இருந்தது அவளுக்கு. உடல் முழுவதிலும் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. சட்டென்று கண்களை இறுக மூடிக் கொண்டாள். அவளைச் சுற்றிலும் ஒரே இருள். ஒரே அந்தகாரம். அந்தச் சூன்யமான இருளிலே அவள் ஒரு அலாதியான, இனந் தெரியாத இன்பத்தை அனுபவித்தாள். இவ்வளவும் ஒரே ஒரு வினாடிதான். அடுத்த வினாடி கண்களைத் திறந்து விட்டாள். ஆனால் அந்த ஒரு வினாடியில் அவள் அடைந்த இன்பத்தை அதற்குமுன் அனுபவித்ததே யில்லை என்பது நிச்சயம்.



தடாகத்திலே ஒரு புத்தம் புதிய அல்லி மொட்டு. மாலை நேரம் போய் இரவு வந்தது. பூரண சந்திரன் தோன்றினான். அவனிடமிருந்து நிலவு பொங்கி வழிந்தது. அது அமுதக் கிரணங்களாகக் கீழே இறங்கி வந்து அல்லி மொட்டைப் பரிவோடு அணைத்துக்கொண்டது. அல்லி மலரின் உடல் சிலிர்த்தது. அதன் இதழ்கள் மெல்ல மெல்ல விரிந்து கொண்டன. அல்லி மொட்டுக்கு அது ஒரு புது அனுபவம். விமலாவுக்கும் அன்று ஒருபுது அனுபவம்.

பரிவு உணர்ச்சியை ஆண்மகன் அடிக்கடி வெளிக்காட்டுவது இல்லை, எப்போதோ ஒரு முறைதான் அது வெளிப்படுகிறது. ஆனால் பெண் மனம் அந்தப் பரிவு உணர்ச்சியை ஒவ்வொரு கணமும் எதிர்பார்க்கிறது. அது கிட்டாமல் போவதால் அந்த உள்ளத்தில் ஒரு வித ஏக்கம் சதா இருந்து கொண்டே இருக்கிறது. அதன் காரணமாகவே எப்போதாவது ஒரு முறை தன்னிடம் பரிவு காட்டப்படும் போது அது இன்பக் கடலில் ஆழ்ந்து விடுகிறது!

நடராஜன் சட்டென்று திரும்பிச் சென்று விமானத்தில் ஏறிக் கொண்டான். சிறிது நேரத்தில் விமானம் கிளம்பி; மேலே மேலே சென்றது. விமானம் மேலே ஏறுவதும் கீழே இறங்குவதும் ஒரு தனி அழகுதான். எத்தனை முறை பார்த்தாலும் அலுக்கவே அலுக்காத ஒரு காட்சி. கண்ணுக்கு மறையும்வரை அதனைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அது மறைந்து போன பின்னரும் அது சென்ற திக்கையே நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பின்னர் அனைவரும் திரும்பினார்கள், காரில் ஏறுவதற்கு.

திடீரென்று அபாய அறிவிப்பு அலறியது. ஒலி பெருக்கிகள் சற்று முன் புறப்பட்டுச் சென்ற விமானத்துக்கு ஆபத்து என்று அறிவித்தன. விமானம் திரும்புகிறது நிலையத்துக்கு. விமானம் இறங்கப் போகும் இடத்துக்குத் தீயணைக்கும் படையினர் விரைந்தனர். ஆம்புலன்ஸ் கார்கள் விரைந்தன. அனைவரும் திரும்பும் விமானத்தைப் பத்திரமாக வரவேற்கத் தயாரானார்கள்.

இந்த விஷயங்களை யெல்லாம் ஒரே சமயத்தில் தெரிந்து கொண்ட டாக்டர் ராமலிங்கமும் பொன்னம்மாளும் மரகதமும் சிவஸ்வாமியும் திரும்பி ஓடி வந்தார்கள். அவர்களுடன் விமலா ஓடி வரவில்லை. அந்தச் செய்தியைத் தாங்கும் சக்தி அவளுக்கு இல்லை. 'அத்தான்! அத்தான்!' என்று அழைக்க விரும்பினாள் அவள். வார்த்தைகள் வரவில்லை. பல்வேறு பட்ட உணர்ச்சிகளை இரண்டொரு நாட்களில் அவள் மனம் அனுபவித்திருந்தது. கோபம், தாபம், துக்கம், ஏக்கம், ஆனந்தம் முதலிய எல்லா உணர்ச்சிகளையும் அனுபவித்திருந்த அவளால் இந்தப் பேரதிர்ச்சியைத் தாள முடியவில்லை. ஒரு மாபெரும் சுழலில் அவள் சிக்கிக் கொண்டாள். வேகமாகச் சுழன்று சுழன்று வந்தாள். வேகமான சுழல் என்பதோடு ஆழமானதாகவும் இருந்தது. அந்த ஆழத்தின் எல்லையை எட்டிப் பிடிக்க முயல்பவளைப் போல் சுழன்று கொண்டே கீழே கீழே இன்னும் கீழே அதற்கும் கீழே அதள பாதாளத்தை நோக்கிப் போய்க் கொண்டே இருந்தாள் அவள். அந்த எல்லையை எட்டிப் பிடித்ததும் சுழல் அடங்கி விட்டது! அந்தப் பேதை மூர்ச்சையானாள்.

(தொடரும்)






எங்கள் சேவையே எங்கள் வெற்றிக்கு ஆதாரம். ஒவ்வொரு பிலிப்ஸ் வியாபாரியும், திறம்பெற்ற சேவையில் நம்பிக்கை கொண்டவர். அவர்களிடம் அனுபவம் வாய்ந்த டெக்னீஷியன்கள் வேலை செய்கின்றனர். அவர்களிடம் பழகுவதால் நம்பிக்கை உண்டாகிறது. பிலிப்ஸோடு விற்பனையும் சேவையும் கைகோர்த்துச் செல்கின்றன.

உங்கள் ரேடியோ பிரச்னை எதுவாயிருப்பினும் உங்களுக்கு அருகாமையிலுள்ள பிலிப்ஸ் வியாபாரியிடம் அதை ஒப்படையுங்கள்.

**பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்**

35/4. மவுண்ட் ரோடு. சென்னை - 2





அழகு மிகுந்த நீண்ட
அடர்ந்த கூந்தலுக்கு

# பாமாலிவ்

பெர்ப்யூம்ட் கோகோனட் ஹேர் ஆயில்








குடும்ப முழுவதிற்கும் மிக்க உகந்தது !

பெரிய எகானமி அளவு புட்டி
யினால் பணம் மிச்சமாகிறது!
மூன்று விரு விருப்பான
வாசனைகளில் கிடைக்கும்.

லவண்டர்
மல்லிகை
ரோஜா




வஸந்தத்தின் புத்துணர்ச்சி

உங்களுக்கு இன்றும்..என்றும்

மிக்க நேர்த்தி வாய்ந்த காஷ்மீர் பொக்கே
உங்கள் உடலுக்கு இளவேனிற்கால
யின் புத்துணர்ச்சியளிக்கிறது...
அதைக் குளிர்ச்சியாகவும்
வாசனை திகழவும்
வைக்கிறது.



# காஷ்மீர் பொக்கே

டால்கம் பௌடர்

ஆண்கள்
விரும்பும்
நறுமணத்துடன்


......புணர்திரைக்
கடல்விளை அமுதம் பெயற்கு ஏற்ருஅங்கு
உருகி உகுதல் அஞ்சுவல்;' உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி
நயம்பெரிது 'உடைமையின் தாங்கல் செல்லாது
கண்ணீர் அருவி யாக
அழுமே தோழிஅவர் பழமுதிர் குன்றே !
நற்றிணை - 88


குன்றுணர் மதியம் நோக்கி நின்று நினைந்து
உள்ளினேன் அல்லேனோயானே? முள்ளெயிற்றுத்
திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்
எமதும் உண்டோர் மதிநாள் திங்கள்......
கல்பிறங்கு மாமலை உம்பரஃது எனவே.
நற்றிணை - 62


.......ஆயிடை
ஒளிறு ஏந்து மருப்பின் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்என் வருந்திய உடம்பே !
நற்றிணை - 284


அதனினும் கொடியள் தானே மதனின்
துய்த்தலை இதழ பைங்குருக் ]கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோஎன
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவர் தனிமட மகளே!
நற்றிணை - 97
மணியம்.

# நற்றிணைக் காட்சிகள்

சித்திரை மாதம் பிறந்து விட்டது என்றாலே எங்கும் குதூகலம் பரிமளிக்க ஆரம்பித்து விடும். மரங்களில் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கத் தொடங்கி விடும். காதலர் உள்ளங்களில் இன்பக் கடல் கொந்தளித்துப் பொங்கத் தொடங்கி விடும். இந்த இன்பச் சூழ்நிலைக்கு ஏற்ப, சங்க இலக்கியங்களிலிருந்து நான்கு அகத்துறைக் காட்சிகளைப் புது வருஷ விருந்தாக அளிக்க விரும்புகிறோம்.

சங்க இலக்கியங்களிலே நற்றிணை என்பது சுவை மிக்க அரிய நூல். அந்நூலின் வாயிலாகப் பழந் தமிழ் மக்களின் அகத்துறை வாழ்வை ஓரளவு புரிந்து கொள்ள முடிகிறது.

காதலனின் கடமை, தான் காதலித்த காரிகையைக் காலா காலத்தில் கடிமணம் புரிந்து கொள்ளுதலே அல்லவா? அதற்குரிய முயற்சிகள் காதலன் எடுக்காவிட்டால் காதலி எவ்வளவு வேதனைப் படுவாள். அதை வெளியில் சொல்லிக் கொள்ளவும் முடியாது. நினைத்து நினைத்து உருக வேண்டியதுதான்.

ஆனால் காதலியின் தோழிக்குத் தன் தலைவியின் மனநிலை நன்கு புரியும்.

வேலிப்புறமாக வந்து நின்றான் காதலன். அவன் கடமையை உணர்த்த வேண்டும் என்று தோழி தீர்மானித்தாள். அவன் கடமை தவறியதால் தலைவி எவ்வளவு வேதனைக்கு உள்ளாகி யிருக்கிறாள் என்பதைத் தலைவியிடம் பேசுவதுபோல் மிகச் சமத்காரமாகக் காதலனுக்கே தெரிவிக்கிறாள்.

''நாம் செய்த தலைவிதிக்கு ஏன் வருத்தப் படுகிறாய்? நீரில் கரையும் உப்பைப் போல் ஏன் கரைகிறாய்? ஆனால் தலைவனுடைய நாட்டு மலை நல்ல பண்பாடுடையது. தலைவன் நமக்குச் செய்த கொடுமையை எண்ணி அனுதாபப்பட்டுக் கண்ணீரை அருவியாகப் பொழிகிறது. அதோ, பார்!'' என்றாள் தோழி. தலைவனுக்கு இனி விஷயம் விளங்காதா?

வெளி நாட்டுக்குப் பொருள் தேடிச் செல்லும் நிலைமை காதலனுக்கு ஏற்பட்டது. முன்னம் ஒருமுறை சென்றபோது, காதலியை நினைத்து மருகியது நினைவுக்கு வந்தது.

முன்னம் நடந்து சென்று கொண்டிருந்த போது, மாலை நேரம் வந்தது. அப்போது மலையை விட்டு வானில் சந்திரன் பவனி வந்து கொண்டிருந்தது. அந்தச் சந்திரனைப் பார்த்ததும், 'இந்தச் சந்திரனைப் போலவே அழகிய முகமும், திலகமும் பெற்ற ஒரு முழுமதி எனக்கும் உரியவளாக ஊரில் இருக்கிறாள் அல்லவா?' என்று நினைத்து வருந்தினான்.

அந்த நினைவு வந்த மாத்திரத்தில் மீண்டும் அத்தகைய பிரிவுத் துயரைத் தன்னால் தாங்க முடியாது என்று பிரயாணத்தையே 'ரத்து' செய்து விட்டான்! காதலியின் பிரிவாற்றாமையின் சக்தியைப் பார்த்தீர்கள் அல்லவா?

காதல் மனத்தின் பரிதாப நிலையை இன்னொரு பாடலில் சித்திரிக்கிறார் புலவர்.

பொருள் தேடி வருவதாகச் சொல்லி விட்டுப் பிரிந்து செல்கிறான் தலைவன். செல்லும் வழியெல்லாம் காதலியின் நினைவே அவனுக்கு. அவளுடைய அன்பே மீண்டும் மீண்டும் நினைவுக்கு வருகிறது. அந்தக்காதல் மேலோங்கி யிருக்கும்போது, திரும்பக் காதலியினிடமே போய் விடலாம் என்று தோன்றுகிறது. 'திரும்பி விடுவோமா' என்று எண்ணுகிறான். அந்தச் சமயம் வேறொரு எண்ணம் உள்ளத்தில் எழுகிறது.

பொருள் தேடி வருவதாகச் சொல்லி விட்டு இப்போது வெறுங் கையுடன் ஊர் திரும்பினால் கடமையில் தவறியவனாவேன். அதனால் எனக்குப் பெரு இழுக்குத்தான். இந்த எண்ணம் மேலோங்கிய மாத்திரத்தில், ''வீட்டுக்குப் போக அவசரப் படாதே!'' என்று உள்ளம் தடுக்கிறது. இப்படி இவ்விரண்டு எண்ணங்களுக் கிடையே மனம் அகப்பட்டுப் படும்பாட்டை என்னவென்பது? பிரிகளை உடைய பழங்கயிற்றை இரண்டு யானைகள் ஒன்றுக்கொன்று எதிராக நின்று பற்றி இழுத்தால் எப்படி இற்றுத் தேய்ந்து போகுமோ, அம்மாதிரி அவன் மனம் இற்றுத் தேய்ந்து உடலும் நலிகிறது!

இளவேனில் வந்து விட்டால் பிரிந்துள்ள காதலர்களின் பாடு திண்டாட்டம்தான் என்பது இப்பாடல் உறுதி செய்கிறது.

உலகில் உள்ள அழகிய பொருள்கள் எல்லாம் அவர்கள் பிரிவாற்றாமையை அதிகரிக்கச் செய்கின்றனவே தவிரக் குறைப்பதில்லை.

பொருள் தேடி வருவதாகச் சொல்லிச் சென்றான் தலைவன். போகும் போது இளவேனிற் காலம் தொடங்கு முன்பாகவே திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுச் சென்றான். இளவேனிற் காலம் வந்துவிட்டது. ஆனால் காதலன் வரவில்லை! அவளுக்கு எப்படி யிருக்கும்!

ஆற்றில் மழைக் காலத்தில் கலங்கிய நீர் ஓடும். இப்பொழுது ஆற்று நீர் தெளிந்து பளிங்கு போல் ஓடுகிறது.

குருக்கத்தி மலர்களும் பிச்சி மலர்களும் மலர்ந்து கம்மென்று மணம் வீசுகின்றன.

மரக்கிளைகளில் அமர்ந்து குயில்கள் கீதம் இசைக்கின்றன.

இவையெல்லாம் ''உடனிருந்து துய்க்க அவர் இல்லையே'' என்ற ஏக்கத்தைத்தான் அவளுக்கு உண்டாக்குகின்றன?

இத்தனையும் போதாவென்று பூக்காரி, பிச்சிப் பூவையும், குருக்கத்தியையும் விரவிக் கட்டிய அழகிய மாலைகளைக் கூடையில் ஏந்தி ''மாலையை வாங்கவில்லையோ?'' என்று கூவிக் கொண்டு போகிறாள். அப்போது அவள் மனம் என்ன பாடுபடும்!

இவ்வழகிய நான்கு காட்சிகளையும் ஓவியர் மணியம் வெகு அழகாகச் சித்திரித்திருக்கிறார்.

# மயிலை இந்து சாசுவத நிதி அளவை யுள்ளது

(ஸ்தாபிதம்: 1872)

| தலைமை ஆபீஸ்: | கிளை ஆபீஸ்: |
|---|---|
| 30 & 31, தெற்கு மாட வீதி | 198, கோவிந்தப்ப நாயக்கன் தெரு |
| மயிலாப்பூர், மதராஸ். | ஜி. டி. மதராஸ். |

## அனைவருக்கும் எமது புத்தாண்டு நல் வாழ்த்துக்கள்!

## மொத்த அலுவல் ரூபாய் ஒரு கோடிக்குமேல். ரெகரிங் டிபாஸிட்டுகள் ஏற்றுக் கொள்கிறோம்.

❋

★ தங்க நகைகள், வைர நகைகள், வெள்ளி சாமான்கள்பேரில் கடன் தருகிறோம்.

★ சென்னை நகரின் பழைய எல்லைக்குள்ளும், கீழ்க்கண்ட புதிதாக சேர்க்கப்பட்ட இடங்களிலுமுள்ள ஸ்தாவர சொத்துக்களின் பேரில் கடன் தருகிறோம்.

| | |
|---|---|
| அடையார் டிவிஷன் | காந்தி நகர், கஸ்தூரிபாய் நகர். |
| கோடம்பாக்கம் டிவிஷன் | பழனி ஆண்டவர் கோவில் வரையிலும் உள்ள ஆற்காடு ரோடு. |
| செம்பியம் டிவிஷன் | சிசு சம்ரக்ஷண ஆஸ்பத்திரி வரையிலும் உள்ள பேப்பர் மில்ஸ் ரோடு, மாதவரம் ஹைரோடு, லக்ஷ்மி அம்மன்கோவில் தெரு. |
| அயனாவரம் டிவிஷன் | ரெயில்வே குவார்ட்டர்ஸ் வரையிலுமுள்ள கொன்னூர் ஹைரோடு மற்றும் வெங்கடேசபுரம் காலனி. |
| அமிஞ்சிக்கரை டிவிஷன் | அமிஞ்சிக்கரை பஸ் ஸ்டாண்ட் வரையிலுமுள்ள பூந்தமல்லி ஹைரோடு, மற்றும் ஷெனாய் நகர். |

❋

## புதிய ரெகரிங் டெபாஸிட்டுகள்பேரில் உள்ள சாதாரண கடன்களுக்கு 6% வட்டி

**பிக்ஸட் டெபாஸிட்டுகள் 3½% வட்டிக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.**

| | |
|---|---|
| யு. எஸ். ராமசாமி அய்யர், எம். எல். | கே. விநாயகம், பி.ஏ., பி.எல். |
| *பிரஸிடெண்ட்* | *செக்ரடரி* |

# கோடைக் காட்சிகள்


அவர் டிரஸ்ஸைப் பார்த்தீர்களா! வெயில் தொந்தரவே அவருக்குக் கிடையாது!


எண்ணெய் கொதிக்கிறது- அப்படியே கொண்டுபோய் அப்பளாம் பொரிக்க வேண்டியது தான்!
எண்ணெய் எண்ணெய்!


பிரத்தியார் கஷ்டத்தை உணராதவன் மனுஷ ஜன்மமா?


'சம்மர் கட்' வெட்டி விடப்பா!


உங்களாலே எப்படி இந்தப் புழுக்கத்தைத் தாங்க முடியறது?


கோடையிலே இளைப்பாறி... இளைப்பாறி... இளைப்பாறி...
கோடையிலே இளைப்-பாறி, குளிர்காலத்திலே தான் மேலே பாடும் போலிருக்கு!

## எமது புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

எமது பாலிஸிதாரர்கள், நண்பர்கள், ஆதரவாளர்கள்
ஏஜண்டுகள் அனைவருக்கும் புத்தாண்டு நல்வாழ்வு அளிக்கட்டும்

★

# இந்தியன் மியூச்சுவல் ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் சொசைட்டி லிட்.

தலைமை ஆபீஸ்: 35, மவுண்ட் ரோடு, மதராஸ் - 2

(நெருப்பு, மோட்டார் கார் மற்றும் பலவித
விபத்து இன்ஷ்யூரன்ஸ் செய்பவர்கள்)

ரூ. 5000/- விபத்து இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ள
வருடாந்தர பிரீமியம் ரூ. 12-50

விவரங்களுக்கு எழுதவும்

ASP/GM-6





...மானேர்ஸ்
கிரைப் மிக்சரை கொடுங்கள்



யாதொரு
முயற்சியும்
பலனளிக்காவிடில்...

மீண்டும்
குழந்தையின்
புன்முறுவலை
கவனியுங்கள்



உன்னத தரத்தின் இந்த
சின்னத்தைக்
கவனியுங்கள்.



இது ஒரு மானேர்ஸ் தயாரிப்பு

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD., BOMBAY · DELHI · CALCUTTA · MADRAS.

# சாந்தை கேட்ட சன்மானம்

எஸ். ரங்கநாயகி

அயோத்தியா நகரில் பூரண குதூகலம் நிறைந்திருந்தது. எங்கெங்கும் மாவிலைத் தோரணங்களும், கொடிகளும் தொங்கவிடப்பட்டிருந்தன. பொன்னின் பூமியில் இழைக் கோலங்கள் பளிச்சென்று முத்து படர்ந்து கிடந்தன. நான்கு புறமும் செம்மண் காவி ஒரு தனி மெருகு கொடுத்துக் கொண்டிருந்தது. பக்ஷி ஜாலங்கள் தங்கள் இனத்தாருடன் மரக்கிளைகளில் ஆனந்தக் கவி கூறி நின்றன. மலர் இனங்கள் இதழ் விரித்துத் தேன் அமுதத்தைப் பங்கிடு செய்து நின்றன.

அரண்மனை முற்றத்திலே ராஜ குடும்பம் கூடி இருந்தது. பட்டாடை சலசலக்க, முகத்தில் பொலிவு பொங்கச் சீதை, மாண்டவி, ஊர்மிளை, சுருதகீர்த்தி நால்வரும் பண்டிகைக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் ஈடுபட்டிருந்தனர். மருமக்கள் பொறுப்பேற்றதும் மாமிகளுக்கு அதிக வேலை இல்லை போலும். தசரதருடன் கௌசல்யை, கைகேயி, சுமித்திரை மூவரும் அளவளாவிக் கொண்டிருந்தனர். பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் பின்தொடர ஸ்ரீராமர் அப்பொழுதுதான் உள்ளே நுழைந்தார். மற்ற மூவர் முகங்களும் காந்தி பெற்று விளங்கிய போது ஸ்ரீராமரின் முகம் மட்டும் சற்று வாடியிருப்பதைக் கைகேயி கண்டாள்.

''ராமா!''

பரந்தாமன் கைகேயியின் அருகில் சென்று அவள் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

''ராமா! உன் முகம் மட்டும் ஏனப்பா வாடி இருக்கிறது? அரண்மனையின் வேலைக்காரர்கள் யாராவது உன்னிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டார்களா?''— அன்பொழுக மகனை அரவணைத்துக் கேட்டாள் தாயார் கைகேயி.

''இல்லை, அம்மா!''

''பின் முகவாட்டத்தின் காரணம்?''

''மருமகள் சீதையிடம் ஏதாவது பந்தயம் வைத்துத் தோற்றுப் போயிருப்பான்!'' தசரதர் சிரித்துக் கொண்டே கூற, மற்றவர்களும் சிரித்தனர். ஜனகபுத்திரி ஓரக் கண்களால் மணாளனைப் பார்த்து லஜ்ஜையுடன் தலைகுனிந்தாள். அவள் முகத்தில் செம்மை படர்ந்தது.

''அது காரணமாக இருக்காது. சீதையிடம் தோற்றாலும் ராமனுக்கு என்றும் சந்தோஷம் தான். அவன் பிரசன்ன முகத்தைப்பார்த்து ரசிப்பவனாயிற்றே!'' — சுமித்திரை குறுக்கிட்டாள்.

ராமர் மௌனமாக இருந்தார்.

''சும்மா இருங்கள். குழந்தையைப் பரிகசிக்காதீர்கள் ...... அப்பா ராமா, உனக்கு உடல்நலம் சரியில்லையா, என்ன? ஏன் இந்த வாட்டம்?'' கைகேயி மீண்டும் பரிவுடன் கேட்டாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா. இன்று 'ரக்ஷா பந்தன்' பண்டிகை என்று தங்களுக்குத் தெரியுமே...''

''ஆமாம், அதற்கென்ன? பண்டிகைக்கான தயாரிப்புகளில் ஒன்றும் குறை வைக்கவில்லை. எல்லோரும் புத்தாடை உடுத்தியிருக்கிறோம். நகரெங்கும் கொண்டாட்டம். இதில் குறைக்குக் காரணமே இல்லையே!''

''எது இருந்து என்ன? நம் வரையில் சகல ராஜபோகங்கள் இருந்தும் பண்டிகை நிறைவு பெறவில்லையே! ஐசுவரியத்திலும் அன்ன போகத்திலும் நிறைந்து விடும் பண்டிகை அல்லவே இது. சகல போகங்கள் இருந்தும் இந்தத் திருநாளில் நாங்கள் சகோதரர்கள் அநாதைகளாகி விட்டோம்.''

''என்னப்பா சொல்கிறாய் நீ? நீங்கள் அநாதைகள் என்பதை என்னால் கேட்டுச் சகித்திருக்க முடியாது. உன் விருப்பம் எது நிறைவேறவில்லை, சொல், பார்ப்போம்.'' தசரதர் உள்ளம் உருகினார்.



"அப்பா, இப் பண்டிகைக்கு முக்கியமாக வேண்டியது ஒரு சகோதரி. சகோதரர்களின் நலனைக் கோரி அவர்கள் கையில் ரக்ஷைக் கயிறு கட்ட எங்கள் சகோதரி இன்று இங்கு இல்லை. இவ்விஷயத்தில் பண்டிகை பெரும் குறைவுடன் நிற்கிறது." ராமர் உள்ளம் தழுதழுக்க, கண் கலங்கக் கூறினார்.

இதைக் கேட்டதும் எல்லோருடைய முகங்களுமே வாட்டமடைந்தன. சகோதரியற்ற அநாதைகளல்ல புதல்வர்கள் நால்வரும். ஆயினும் இம் மகிழ்ச்சி பொங்கும் நன்னாளில் சகோதரர்களின் கையில் ரக்ஷைக் கயிறு கட்ட அவள் அங்கு இல்லை. இவ் விஷயத்தை ரகுநந்தனன் எடுத்துச் சொன்னதும் தசரத சக்கரவர்த்தியே சற்று உள்ளம் கலங்கினார். இனி என்ன செய்வது? மித்ரபாசம் சொந்த மகளைத் தத்துக் கொடுக்கும்படி செய்து விட்டது. சகோதரர்களுடன் இனிக்க இனிக்கப் பேசி, வீட்டில் வளைய வந்து, மருமக்களைப் பரிகசித்து அவர்கள் லஜ்ஜையில் இன்பம் கொள்ள அருமை சாந்தை வீட்டில் இல்லை. அவள் அங்கதேச நாட்டில் ரோமபாதரின்அன்பு மகளாகச் சென்று விட்டாள். ரிஷ்யசிருங்கரை மருமகனாகப் பெற்று ரோமபாதர் ஆனந்தம் எய்திக் கொண்டிருக்கிறார். அவர்கள் ஆசியினால் பிறந்தவர்களாயிற்றே சகோதரர்கள் நால்வரும்.

வரப்போகும் நிகழ்ச்சியைக் குறித்து ஸ்ரீராமர் அறிந்து கொண்டு விட்டாரோ! என்றுமில்லாதபடி இவ்வருடத்திய பண்டிகையின் போதுமட்டும் அவர் சகோதரியின் ரக்ஷைக் கயிற்றை ஏன் விரும்பினார் என்பது அவர் உள்ளத்துக்குத்தான் தெரியும்.

இச் சம்பாஷணைக்குப் பிறகு கைகேயியினால் மௌனமாக இருக்க முடியவில்லை. மைந்தனின் மனக் கிலேசத்தை நீக்க உடனே சாந்தையை அழைத்து வர விரும்பினாள். அதே சமயம்......

"ராமா, லக்ஷ்மணா!" என்ற குரல் கேட்டது. யாவரும் திரும்பிப் பார்த்தனர்.

பொலிவு பொங்கச் சாந்தை நின்று கொண்டிருந்தாள்.

"சாந்தை, வாம்மா" — கைகேயி ஓடிச் சென்று அவளை அணைத்துக் கொண்டாள். சுமித்திரை உச்சி முகர்ந்தாள். கௌசல்யையின் கண்களில் ஆனந்தப் பிரவாகம் பொங்கிப் பெருகியது.

"அம்மா, சாந்தை! சகோதரர்களைப் பார்க்க வேண்டும் என்ற குதூகலிப்பில் அவர்களுக்காகக் கொண்டு வந்த பட்டாடைகளையும், பொன் மணிகளையும் ரதத்திலேயே வைத்து விட்டு உடனே ஓடி வந்து விட்டாயே?" என்று கூறிக் கொண்டே ரோமபாதர் உள்ளே நுழைந்தார்! பிறகு அவர் தசரதரை நோக்கி, "நண்பா! இன்று ஏனோ தெரியவில்லை. சாந்தை ஒரே பிடிவாதமாக அயோத்தி சென்று சகோதரர்களுக்கு ரக்ஷைக் கயிறு கட்ட வேண்டுமென்று துடிதுடித்து விட்டாள். அவள் மனம் கோணாமலிருக்க அவளை அழைத்து வந்து விட்டேன்" என்றார்.

தசரதரின் உள்ளம் குதூகலித்தது. ரத்த பாசத்தின் பிரத்யக்ஷ நிலையை அவர் இன்று பார்த்து விட்டார். சகோதரர்கள் தங்கள் சகோதரியைக் காணத் துடித்த அதேசமயம் சகோதரியும் சகோதரர்களைக் காண்பதற்குப் பிடிவாதமாக வந்து விட்டாள்.

தசரதர் நண்பரையும் மகளையும் இன் முகத்துடன் வரவேற்றார். ஸ்ரீராமருக்குக் கரைகாணாத ஆனந்தம். சகோதரியைச் சுற்றிச் சுற்றி வந்தார். அவளிடம் பலப்பல கதைகள் பேசினார்.

சாந்தை பிறகு கௌசல்யையிடம், "அம்மா! நம் வீட்டு மருமக்கள் ஏன் இப்படிப் பயந்து தூரத்தில் நிற்கிறார்கள்? என் சகோதரர்கள் அவர்களைப் பயந்து நடுங்கும்படி ஏன்தான் இப்படி அடக்கி வைத்திருக்கிறார்களோ, தெரியவில்லை......சீதை! ஊர்மிளை, நீங்கள் எல்லோரும் இங்கு வாருங்கள். என் சகோதரர்கள் உங்களை எவ்விதமெல்லாம் படுத்தி வைக்கிறார்கள், சொல்லுங்கள். இன்று நியாயத்தை விசாரித்து விட்டுத்தான் வீடு திரும்பப் போகிறேன்" என்றாள் சிரித்துக் கொண்டே.

உடனே லக்ஷ்மணர், "அக்கா! அத்துடன் நிறுத்திக் கொள். இப்பொழுதே சகோதரிகள் நால்வரும் இந்த அரண்மனையையே ஆக்கிரமித்துக் கொண்டு விட்டனர். வேலைக்காரர்களோ, மற்றும் பந்துக்களோ எங்களை லட்சியம் செய்வதில்லை. அதுமட்டுமில்லை; இந்த மருமக்கள், பெற்றோர்களுக்கு நாங்கள் சாதாரணமாகச் செய்யும் சேவையையும் ஆக்கிரமித்துக் கொண்டு எங்களைச் சோம்பேறிகளாக்கிக் கொண்டிருக்கின்றனர். நியாயாதிபதி ஸ்தானத்தில் ஏறி விட்டால் முதலில் இக் குற்றங்களுக்கு நீ அவர்களைப் பதில் சொல்லச் சொல்ல வேண்டும்" என்றார்.

மருமக்கள் அனைவரும் முகத்திரையை விலக்கி ஒருவரையொருவர் பார்த்துப் புன்முறுவல் பூத்தனர்.

பரிகசிப்பிலும், ஆனந்தத்திலும் நேரம் கழிந்து கொண்டிருந்த போது, வசிஷ்டர் உள்ளே நுழைந்தார். சாந்தை அவரை நமஸ்கரித்தாள்.

"சாந்தை! வாம்மா. இந்தத் திருநாளில் நீ வந்தது உன் சகோதரர்களின் நன்மையை உரைக்கிறது. சகோதரர்களுக்கு ரக்ஷைக் கயிறு கட்டி, வேண்டியதைப் பெற்றுக் கொள், அம்மா!" என்றார்.

சாந்தை சகோதரர்கள் நால்வரையும்பீடத்தில் உட்கார வைத்தாள். நெற்றியில் பொட்டிட்டாள். தானே அங்க தேசத்திலிருந்து நினைவாகக் கொண்டு வந்திருந்த ரக்ஷைக் கயிறுகளைச் சகோதரர்களின் கையில் கட்டுவித்தாள். பிறகு நாராயணனின் திருவுருவத்தை மனத்தில் தியானித்துக் கொண்டு சகோதரர்களின் நல்வாழ்க்கைக்குப் பிரார்த்தனை செய்தாள்.

சகோதரர்களின் மனம் என்றுமில்லா ஆனந்தத்தில் திளைத்தது. உள்ளத்தில் தனிப்பட்ட உவகை தோன்றியது. இன்று முதன்முறையாகச் சகோதரியின் ரக்ஷைக் கயிறு நல்லாசியுடன் அவர்கள் கையில் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"அக்கா! உனக்கு வேண்டியதைக் கேள்" என்றார் ஸ்ரீராமர்.

"எது வேண்டுமானாலும் கொடுப்பீர்களல்லவா?" என்று சாந்தை கேட்டாள்.

'' அதில் என்ன சந்தேகம்? எங்கள் நலனுக்காக ரகைஷக் கயிறு கட்டிய சகோதரியை நாங்கள் ஏமாற்றி விட மாட்டோம்'' என்றார் லக்ஷ்மணர்.

'' அப்படியானல் சொல்கிறேன், கேளுங்கள். நீங்கள் சகோதரர்கள். இப்பொழுது போலவே எப்பொழுதும் ஒற்றுமையுடனும், ஒருவருக்கொருவர் மனத்தில் துவேஷமில்லாமல் உள்ளன்புடனும் ஒருவரையொருவர் நேசித்துப் பகையில்லாமல் வாழ வேண்டும். அத்துடன்...''

''சாந்தை...!'' கைகேயி இடைமறித்தாள்.

'' இருங்கள் அம்மா...மற்றொரு விஷயமும் சன்மான உருவத்தில் கேட்கப் போகிறேன். இன்னும் பதினைந்து வருடங்கள் கழித்து மீண்டும் இப்பண்டிகைக்கு வருவேன். அப்பொழுது உங்கள் நால்வரையும் இதே போல் உட்கார வைத்து ஆசி வழங்கும் பாக்கியத்தை எனக்கு அளிக்க வேண்டும்'' என்றாள் சாந்தை. அவள் முகத்தில் காந்தி பொங்கியது. வார்த்தைகளில் பாசம் பொங்கிப் பெருகியது.



'' பூ, கடைசியில் சன்மான ரூபத்தில் உன் விருப்பம் இது தானு? இந்தச் சின்னஞ் சிறு கோரிக்கைக்கு ஏதோ பெரிய பீடிகை போட்டாயே? உன் விருப்பப் படியே கண்டிப்பாக நிறைவேறும்'' என்று சொன்னார் லக்ஷ்மணர்.

மற்றச் சகோதரர்களும் அவள் விருப்பத்தைக் கண்டிப்பாக நிறைவேற்றுவதாக வாக்களித்தனர்.

'' அக்கா! ஏமாந்து விட்டீர்களே! சகோதரர்கள் நால்வர் இருக்கும்போது ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு பொருள் நீங்கள் ஏன் பறிக்கக் கூடாது?'' என்று மாண்டவி கேட்டாள்.

'' எனக்கு எதற்கம்மா பொருளும் பண்டமும்? தத்துக் கொடுத்த தந்தையும், தத்து வாங்கிய தந்தையும் எனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. எனக்கு வாய்த்த கணவரோ அன்பு என்னும் பொருளை அபரிமிதமாகப் பொழியும்போது எனக்கு என்னம்மா குறைவு?'' என்றாள் சாந்தை.

அப்பண்டிகை தினம், என்றும் மறவாத நாளாக அமைந்திருந்தது.

சித்திரகூடத்தின் சித்திர சபை அது. கைப்பிடித்த இல்லாளுடன் வனத்தையும் நகரமாக்கி, பரந்தாமன் ஒரு பாறையின் மீது வீற்றிருந்தார். அதுதான் அவருடைய சிம்மாசனம். வன மிருகங்களும் பறவைகளும் நகரத்து மக்கள். அரசனிடம் அவர்களுக்குப் பயம் கிடையாது. தோளின் மீது சவாரி செய்வார்கள்; மடியில் உட்கார்ந்து கொஞ்சுவார்கள்; கைகளில் தைரியமாக அமர்ந்து இன்பமொழி பேசுவார்கள்.

''அரசே, வணக்கம்.''

ராமர் திரும்பிப் பார்த்தார். சீதை கை கட்டி வாய் பொத்தி மௌனமாக நின்றாள்.

'' சீதை, இது என்ன நாடகம்?''

'' அரசே! மன்னிக்க வேண்டும். ஒரு கோரிக்கை.'' சீதையின் வதனத்தில் ஹாஸ்யம் மிளிர்ந்ததைக் கண்டார் ராமர்.

'' வாருங்கள் மந்திரியாரே! தங்கள் கோரிக்கை என்னவோ?'' ஸ்ரீராமரும் ஹாஸ்யத்தில் கலந்து கொண்டார்.

'' தங்கள் மனைவி தங்கள்மீது ஒரு குற்றப் பத்திரிகை தாக்கல் செய்திருக்கிறாள். தாங்கள் குற்றத்தை ஏற்க வேண்டும்.''

'' குற்றத்தை ஏற்க வேண்டியது நானல்ல. அது அவளுடைய குற்றமே என்று சொல்லும். காட்டில் நடமாடினல் காலில் முள் குத்தும். அதற்கு நானு பொறுப்பாளி?''

'' அரசே! தங்கள் கையினுல் முள் எடுபட வேண்டும் என்றுதானே முள்ளிருக்கும் இடமாகப் பார்த்துத் தங்கள் மனைவி செல்கிறாள். இவ் விஷயம் தங்களுக்குத் தெரியாமல் இருப்பது தங்கள் குற்றம்தானே!''

'' இருக்கட்டும். அப்படியானல் மனைவியுடன் பேச வேண்டும் என்றுதானே நான் தாகத்துக்குத் தண்ணீர் கேட்டேன். அதைக் கவனியாது செடிகளுக்கே தண்ணீர் ஊற்றுவது யாருடைய குற்றமோ?''



மனைவி — நாம் அன்றைக்கு ரயிலில் போகும் போது சிநேகம் பண்ணிக் கொண்டோமே; அவர்களிடம் 'ரயில் சிநேகமாக இல்லாமல் அவசியம் எங்கள் வீட்டுக்கு வரவேண்டும்' என்று சொன்னதை அந்த அசடுகள் நிஜமாக எடுத்துக் கொண்டு நம் வீட்டில் நாளைக்கு வந்து ஒருமாசம் தங்குவதாக எழுதி இருக்கிறார்கள்! என்ன செய்வது?

"அண்ணா!" லக்ஷ்மணரின் கூக்குரல் தம்பதிகளின் குதூகல நாடகத்தின் நடுவில் பாய, நாடகம் சட்டென்று நின்றது. சீதையும், ஸ்ரீராமரும் அம்பைக் கையிலேந்தி வரும் லக்ஷ்மணரை நோக்கினர்.

"அண்ணா! சட்டென வில்லைக் கையிலெடுங்கள், ஆபத்து நெருங்கி விட்டது!"

சீதை என்ன ஆபத்தோ என்று நடுநடுங்கி விட்டாள். ஸ்ரீராமர் தமது கண்களைத் தொலை தூரம் செலுத்திப் பார்த்தார். விஷயம் ஒருவாறு விளங்கியது.

"லக்ஷ்மணா! ஏனப்பா இந்தப் பதற்றம்?"

"பதற்றப்படாமல் என்ன செய்வதாம்? பங்காளி பரதன் வருகிறானே!"

"அப்படியானால் நல்ல விருந்தாக உன் மன்னியைத் தயாரிக்கச் சொல். பரதனுடன் சேர்ந்து சாப்பிடுவோம்."—ராமர் சாந்தமாகப் பதில் கூறினார்.

"போதும், அண்ணா! உங்கள் குணத்துக்கு அத்துடன் ஒரு முற்றுப்புள்ளி வையுங்கள். நாட்டை விட்டுத் துரத்தி வனத்தில் உங்களை வாழவைத்தும் பரதனுடைய மனம் இன்னும் சந்தோஷமடையவில்லை. இக் காட்டிலுள் நிர்க்கதியாக நிற்கும் உங்களை ஒரு வழியாக ஒழித்துக்கட்டத் தன் சைன்யங்களுடன் வந்து விட்டான்!" லக்ஷ்மணர் கண்களில் கோபம் ஜொலிக்கக் கூறினார்.

"லக்ஷ்மணா! கோபத்தை அடக்கு. எவ் விஷயத்திலும் சட்டென்று ஒரு முடிவுக்கு வருவது சுலபம். ஆனால் அதன் பலனை அனுபவிக்கும்போது நம் முட்டாள்தனம் புரியும். என்னிடம் உனக்குள்ள அன்பு, பரதனுக்கும் என்னிடம் இருக்கலாமல்லவா? நீ ஒருவனாக எனக்குச் சேவை செய்கிறாய். நகர மக்களின் சேவை முழுவதும் எனக்குக்கிடைக்கப் பரதன் வழி செய்ய நினைத்து, சித்ர கூடத்தையே அயோத்தியாக நினைத்து வந்திருக்கலாம்..." சீதாராமன் பலவித உபதேசங்கள் செய்தார்.

சகோதரப் பாசத்தால் லக்ஷ்மணரின் செவிகளில் அவ் வார்த்தைகள் விழவில்லை. வில் எடுத்த கை துடித்துக் கொண்டிருந்தது.

இது சமயம் சீதை மெதுவாக லக்ஷ்மணரை நோக்கி, "லக்ஷ்மணா! உன் தந்தை ஒரு பெண்ணுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றத் தனயனைக் காட்டுக்கு அனுப்பினார். உன் தமையன் தந்தையின் வாக்கைப் பரிபாலிக்க வனம் புகுந்தார். இந்த உத்தம குலத்தில் பிறந்தும் நீ ஒரு பெண்ணுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் இருக்கிறாயே என்பதை நினைத்தால் எனக்கு வருத்தமாக இருக்கிறது" என்றாள் மெதுவாக.

"என்ன சொல்கிறீர்கள் மன்னி?" லக்ஷ்மணர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

"சென்ற 'ரக்ஷாபந்தன்' பண்டிகை தினத்தன்று சகோதரி சாந்தைக்குச் சன்மான ரூபத்தில் 'சகோதரர்கள் ஒருவருக்கொருவர் துவேஷம் பகையில்லாமல் வாழ்வோம்' என்று வாக்குக் கொடுத்ததை மறந்து போய் விட்டாயா?"

லக்ஷ்மணரின் கையிலிருந்த பாணமும், வில்லும் தானாக நழுவிக் கீழே விழுந்தன. அங்கிருந்த ஒரு பாறையின்மீது அமர்ந்து விட்டார். "அப்பப்பா, பெண்களை நம்பவே கூடாது. வாக்குமூலமாகவே ஆண்களை அடக்கி விடுவார்கள்" என்று அவர் வாய் முணுமுணுத்தது.

உபதேசச் சொல்லுக்குக் கட்டுப்படாத இளையவன், வாக்குத்தத்தத்துக்குக் கட்டுப்பட்டு அடங்கி விட்டானே என்று கௌசல்யா நந்தனன் ஆனந்தம் எய்தினார். நல்லதொரு வரம் வாங்கின சகோதரியை மனதார வாழ்த்தினார்.

அதே சமயம் 'அண்ணா!' என்று ஒரு பேரன்புக் குரல் ஒலிக்க, பரதன் ஓடோடியும் வந்து பரந்தாமன் காலடியில் விழுந்தார்.

"ஹா, சீதை! நீ எங்கு சென்று விட்டாய்? ஒளிந்து விளையாட இது நேரமில்லை. என் மனத்தைத் துளைக்காதே!" சாந்தத்துக்குப் பெயர்போன ராமரே கதறித் துடித்தார்.

சீதையை, தேடித் தேடி ராமர் சோர்ந்து விட்டார். மூச்சு முட்ட, படபடவென்று இருதயம் அடிக்க மயக்கமுற்றுக் கீழே விழுந்து விட்டார். லக்ஷ்மணர் பதைபதைத்து விட்டார். உடனே ஓடிச் சென்று ஒரு தொன்னையில் நீர் கொண்டு வந்தார். சகோதரனை மடியில் படுக்க வைத்து அவர் முகத்தில் நீர் தெளித்தார். வெகுநேர முயற்சிக்குப் பிறகு சீதாபதி மெதுவாகக் கண்களைத் திறந்தார்.

லக்ஷ்மணர் சகோதரனைப் பார்த்து, "அண்ணா! களைத்து விட்டீர்கள். இந்தத் தண்ணீரை அருந்துங்கள்" என்றார்.

"லக்ஷ்மணா, வேண்டாம்! தண்ணீரும் வேண்டாம், கண்ணீரும் வேண்டாம் ஒரு வழியாகப் பிராணனை விட்டு விடுகிறேன். சீதை இல்லாமல் என் வாழ்வு எதற்கு?"—ஸ்ரீராமர் புலம்பித் தவித்துத் தண்ணீர் குடிக்க மறுத்து விட்டார்.

லக்ஷ்மணர் பயந்து விட்டார். பனிச்சென்று அவர் முன் ஒரு நிகழ்ச்சி தோன்றியது.





# 2 வழிகளால் நரையை ஒழிக்கலாம்...

'சிரசாஸனம்' ஒழுங்காகச் செய்துவந்தால், நரைமயிர் நாளடைவில் கருப்பாக மாறும் எனச் சொல்லப் படுகிறது. ஆனால் அதைப் பழக, ஓய்வு நேரமும், மன நிம்மதியும் அவசியம்.

தற்காலத்தில் "லோமா"வைத் தவறாமல் உபயோகிப்பதுவே, நரையை ஒழிக்க நிச்சயமானதும், பத்திரமானதும், சுலபமானதுமான வழியாகும்.



"லோமா" இப்பொழுது திருட இயலாத மூடியுள்ள பிரத்தியேகமாகத் தயாரித்த பாட்டிலில் வழங்கப்படுகிறது.






ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா, ஆமதாபாத்-1
ஏஜெண்டுகள்: வி. நரோத்தம் அண்ட் கோ., பம்பாய்-2 போன்: 30575

சென்னை ஏஜண்டுகள்: ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260, எஸ்பிளனேட், மதராஸ் 1
இலங்கை ஏஜண்டுகள்: சிர்குல கதிர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# யூனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.

தலைமை ஆபீஸ் : 2, இந்தியா எக்சேஞ்ச் பிளேஸ், கல்கத்தா
லண்டன் ஆபீஸ் : 12, நிக்கோலஸ் லேன், லண்டன் E. C. 4

| செலுத்தப்பட்ட மூலதனம் | ரிஸர்வ் நிதி |
|---|---|
| ரூ. 2,00,00,000 | ரூ. 1,34,00,000 |



**குறுகிய மற்றும் நீண்டகால டிபாஸிட்டுகள்
நல்ல வட்டி விகிதத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

**எங்களிடம் சேமிப்புக் கணக்கு வைத்துக் கொள்ளுங்கள்**

**ஜி. டி. பிர்லா**
சேர்மென்

**எஸ். டி. சதாசிவன்**
ஜெனரல் மானேஜர்

இந்தியாவில் எல்லா முக்கிய நகரங்களிலும், பட்டினங்களிலும் மற்றும் பாகிஸ்தான், பர்மா, மலேயா, ஹாங்காங், லண்டன் முதலிய இடங்களில் கிளை ஸ்தாபனங்களுடனும் கூடிய இந்த பாங்கு, இந்தியாவிலும் மற்றும் வெளிநாட்டிலும் சிறந்த சேவை அளிப்பதற்கான வசதிகளுடன் கூடியதாக இருக்கிறது.

சென்னை கிளைக்காரியாலய மானேஜர் : எம். கருணாகர்

சென்னையில் கிளைக் காரியாலயங்கள் : லிங்கி செட்டித் தெரு (மெயின் ஆபீஸ்)
சௌகார்பேட்டை, மயிலாப்பூர் & புரசைவாக்கம்




# புலி மார்க்கு தேயிலை

## வலிமைக்கு புலி மார்க்கு தேயிலை



LIPTON (INDIA) LIMITED (Incorporated in England)

"அண்ணா! தந்தைக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றியது போல் சகோதரிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதும் தங்கள் கடமை அல்லவா?"

லக்ஷ்மணர் கூறியதை ராமர் புரிந்து கொண்டார். ரக்ஷாபந்தன் தினத்தில் சகோதரி சாந்தைக்குக் கொடுத்த வாக்கு நினைவுக்கு வந்தது. "லக்ஷ்மணா! வாக்குக் கொடுத்தது போல் நான் சகோதரர்களைப் பகைத்துக் கொள்ளவில்லையே!" என்றார் அயோத்யாதிபதி.

"பகைக்காமலே சகோதரர்களின் மரணத்துக்குப் பொறுப்பாளியாகி விடுவீர்கள். தங்கள் வாழ்க்கைக்கு முடிவு கட்டத் தீர்மானித்தால் அதற்கு முன்பே நான் பிரயோபவேசத்தின் மூலம் உயிரை விட்டுவிடுவேன். நாம் இருவரும் இல்லை என்று அறிந்தால் பரதனும், சத்ருக்னனும் உயிருடன் இருப்பார்களா? சகோதரர்களின் நலனை விரும்ப வேண்டியவர் கடைசியில் அவர்கள் மரணத்துக்குக் காரணமாகி விடுவீர்கள்" என்றார் லக்ஷ்மணர்.

தம்மை அடக்கி விட்ட லக்ஷ்மணரைக் கண் குளிரப் பார்த்து விட்டு ஸ்ரீ ராமர் நீர் பருகினார். லக்ஷ்மணர் மானசீகமாகச் சாந்தைக்கு வந்தனம் செலுத்தினார்.

"அப்பா, பரதா! அவசரப்படாதே! இன்னும் சற்றுப் பார்ப்போம்." கௌசல்யை பரதனைத் தேற்றிக் கொண்டிருந்தாள். ஆனால் பரதனோ தீயில் குதித்து உயிர் நீக்கத் துடித்துக் கொண்டிருந்தார்.

இதே சமயம் மாண்டவி, பரதனை அணைத்து நிற்கும் கௌசல்யையிடம் வந்து, "அம்மா! இதென்ன அபசாரம்? சகோதரருக்கு 'நீங்கள் பதினான்காவது வருடத்தில் திரும்பாவிடில் அக்னிப்பிரவேசம் செய்து உயிரை விட்டு விடுவேன்' என்று கொடுத்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றத் தங்கள் மைந்தன் துடிதுடிக்கிறாரே.' ஆனால் அதேபோல், பதினான்கு வருடங்களுக்கு முன்பு 'ரக்ஷாபந்தன்' திருநாளில் சகோதரி சாந்தைக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டாமா? இதைப் பற்றி அவரிடம் கேளுங்கள்" என்றாள்.

சட்டெனக் கௌசல்யையின் முகத்தில் பிரகாசம் தோன்றியது. பரதனைக் காப்பாற்ற அவளுக்கு ஒரு ஆதாரம் கிடைத்து விட்டது. "ஆமாம், பரதா! ராமனைவிடச் சாந்தை மூத்தவள். அவளுக்குத்தான் முதல் வாக்கும் கொடுத்தாய். 'இன்னும் பதினைந்து வருடங்கள் கழித்து இதே திருநாளில் வருவேன். அப்பொழுதும் இதே ஆசி வழங்கும் பாக்கியத்தை அளிக்க வேண்டும்' என்று அவள் கேட்ட வரத்தை நீ கொடுத்தாயே? வனத்துக்குச் சென்ற குழந்தைகளைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லை. நீயாவது கொடுத்த வாக்கைக் காப்பாற்றி இன்னும் சில மாதங்களில் வரப் போகும் 'ரக்ஷாபந்தன்' திருநாளில் அவள் ஆசியைப் பெற வேண்டாமா? மூத்தவளுக்குக் கொடுத்த வாக்கு முதல் வாக்கு, பரதா!"

பரதன் தயங்கினார். யோசித்தார். அவர் தயக்கத்திலும் சிந்தனையிலும் மேலும் சில மணி நேரங்கள் கழிந்தன. இதுசமயம்......

இன்ஷூரன்ஸ் ஏஜெண்ட்:— நீங்கள் கார் ஓட்டுவதால் ஆக்ஸிடெண்ட் இன்ஷூரன்ஸ் அவசியம் செய்து கொள்ள வேண்டும். நேற்று ஒருவர் விபத்தில்



காலை உடைத்துக் கொண்டதால் இருபதினாயிரம் ரூபாய் பெற்றுக் கொண்டான். அந்த அதிர்ஷ்டம் உங்களுக்கும் கிட்டலாம் அல்லவா?

"வந்தான், வந்தான் ராமன்" என்று ஆஞ்சநேயர் குரல் கேட்டது. பரதன் காதுகளில் தேனருவி பாய்ந்தது. மகனைக் காப்பாற்றிய சாந்தையின் வரத்தை நினைந்து உள்ளம் உவகை அடைந்தனர் தாய்மார்கள்.

இதோ அயோத்திமா நகரில் பதினைந்து வருடங்களுக்குப் பிறகு 'ரக்ஷாபந்தன்' திருநாள் கொண்டாடப்படுகிறது. கொடுத்த வாக்குத் தவறாமல் சாந்தை வந்துவிட்டாள்.

சகோதரர்கள் அனைவரையும் பீடத்தில் உட்காரவைத்துச் சாந்தை திலகமிட்டாள். கையில் நல்லாசியோடு ரக்ஷைக் கயிறு கட்டினாள்.

"அக்கா! இம்முறை என்ன கேட்கப் போகிறாய்?"—லக்ஷ்மணர் கேட்டார்.

"நான் என்னத்தையடா கேட்கப் போகிறேன் கண்மணிகளே! கிழவியாகி விட்டேனே! சென்ற தடவை போல் வாக்கு மூலம் ஒரு சன்மானம் அளித்து விடுங்கள்."

என்ன கேட்டு விடுவாளோ என்று ஆவலுடன் சகோதரர்கள் நால்வரும் அவள் முகத்தையே நோக்கினர்.

"என்ன அக்கா வேண்டும்?"

"ஒன்றும் பிரமாத விஷயமில்லை, அப்பா. இவ்வளவு நேரமாக முன்பு எனக்குக் கொடுத்த வாக்கு காரணமாகத்தான் நீங்கள் பிழைத்திருக்க முடிந்தது என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? இனி அம்மாதிரி சொல்லக் கூடாது. இயற்கையிலேயே நற்குணம் படைத்த நீங்கள், உங்களையே தாழ்த்திக் கொள்வதில் எனக்கு விருப்பமில்லை. எனக்கு முன்பு கொடுத்த வாக்கு பற்றியோ, அது எவ்விதம் பயன்பட்டது என்பது பற்றியோ ஒருவரிடமும் சொல்லக் கூடாது. நீங்களும் மறந்துவிட வேண்டும்" என்றாள் சாந்தை.

பெருமை பொங்க, தியாகமூர்த்தியான சகோதரி சாந்தையைச் சகோதரர்கள் நால்வரும் வணங்கினர்.

இரண்டாம் முறையாக, சாந்தைக்குக் கொடுத்த இந்த வாக்கையும் நிறைவேற்றியதால்தான் ராமாயணத்தில் ரக்ஷாபந்தனைப் பற்றின விவரம் கிடைக்கவில்லையோ!

# மஞ்சுளா

பிப்ரவரி மாதத்திய
பரிசு பெற்ற

மஞ்சுளா தன் அழகைக் கண்ணாடியில் பார்த்துக்கொண்டாள். திருப்தியும் ஓரளவு கர்வமும் அவள் முகத்தில் நிழலிட்டன. அவள் வளைந்து கொடுத்துத் தன் நீண்ட பின்னலை நோக்கினாள். அவளுடைய மான் விழிகள் வழியே ஆனந்தம் மிளிர்ந்தது. தெரு ஜன்னலை எட்டிப் பார்த்தாள் அவள். அவள் தகப்பனார் காம்பவுண்டுக் கதவைச் சாத்திக் கொண்டு எங்கோ வெளியே போய்க் கொண்டிருந்தார்.

அவளை அறியாமல் இன்ப கீதம் ஒன்று எழுந்தது. அவள் கண்டத்திலிருந்து. அவள் சென்று வீணையை எடுத்துவைத்து மீட்டினாள். மீண்டும் அதிலும் லயித்து விடாமல் எடுத்து வைத்து விட்டுக் கனவுகள் காண உட்கார்ந்து விட்டாள்

முதல் நாளைய நிகழ்ச்சிகள் யாவும் அவள் கண்முன் ஓடிவந்து அவளை இன்புறுத்தின. அவளைப் 'பெண் பார்க்க' வந்த யுவன் நல்ல கட்டழகன். போலீஸில் பெரிய உத்தியோகமாம். அவனுடன் அவன் உறவினன் ஒருவன், அவன் தமக்கை, தந்தை, தாயார்-நால்வரும் வந்திருந்தனர். மஞ்சுளா வந்து, வீணையை வைத்துக் கொண்டு ஒரு பாட்டுப் பாடினாள். அதைக் கேட்டு விட்டு அவர்கள் ரசித்து, மேலும் ஒரு பாட்டு பாடச் சொன்னார்கள். அப்பொழுது தான் பார்க்காதது போலக் கண்ணை உயர்த்தி அந்த யுவனை அவள் பார்த்தாள். அவன் அழகு அவளைக் கவர்ந்தது; அதே சமயம் அவனும் அவளை விரும்பி அவள் அழகை மெச்சுவதையும் அவள் புரிந்து கொண்டாள்.

அவர்கள் எழுந்து போகும் முன்னமே தங்கள் சம்மதத்தைத் தெரிவித்து விட்டனர். வீட்டில் எல்லோருக்கும் ஒரே குதூகலம்.

"நம் மஞ்சுவின் அழகு அவர்களை அப்படிக் கவர்ந்துவிட்டது. வீட்டுக்குப் போய்த் தீர்மானிக்கக் கூடப் பொறுமை இல்லை" என்று மஞ்சுளாவின் தகப்பனார் பெருமைப்பட்டுக் கொண்டார்.

மஞ்சுளா மீண்டும் ஜன்னல்புறமாகப் போய் வெளியே நோக்கினாள். அவள் தகப்பனார் புன்னகை தவழ வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தார். அவர் பின்னால் தபால்காரன் சைக்கிளில் வந்து நின்று மணி அடித்ததும் திரும்பினார் அவர். மஞ்சுளாவின் கற்பனை அழகுக் காட்சிகளைத் தீட்டியது. 'இதே போல்தான் பிறகு எனக்குக் கடிதங்கள் வரும்' என்று அவள் தனக்குள் கூறிக் கொண்டாள். அவள் உள்ளும் புறமும் மகிழ்ச்சியில் விரிந்தன.

ஏதேதோ நினைத்தபடியே அவள் மெதுவாக மாடிப்படிகள் இறங்கிக் கீழே வந்தாள். அவளுடைய தகப்பனார் தம் கையிலிருக்கும் கடிதத்தைப் புரட்டிப் பார்த்தவாறே, நெற்றியில் சிந்தனைக் கோடுகளுடன் அவள் தாயாரைத் தேடிச் சமையற்கட்டுப் பக்கம் சென்றார். ஒன்றும் புரியாதவளாக ஒரு கணம் தன் கற்பனைகளுக்குக் கடிவாளம் போட்டுவிட்டு, தன் தகப்பனாரைப் பின்பற்றினாள் மஞ்சுளா.

"அதற்குள் என்ன தோன்றி விட்டதாம் அவர்களுக்கு? இங்கே வரும் முன் சகுனம் பார்ப்பார்களா? எல்லாம் முடிந்து வாக்குக் கொடுத்தபிறகு திடீரென்று சகுனம் பார்ப்பார்களா?" என்று தாயார் கூறிக் கொண்டிருந்தாள்.

"நமக்கு என்ன தெரியும்? நல்லவர்கள் மாதிரி தோன்றியது. உடனே சம்மதித்தார்களே என்று சந்தோஷப்பட்டேன். அவர்கள் மனம் மாறும்படி என்ன நேர்ந்து விட்டதோ? போகட்டும் போ" என்றார் தந்தை.

"நன்றாக, 'போகட்டும் போ' என்று கூறி விட்டீர்கள். மனம் அடித்துக் கொள்கிறதே? எந்தப் பாவிகள் அவர்களைக் கலைத்து விட்டார்களோ தெரியவில்லையே?" என்று பொருமினாள் மஞ்சுளாவின் தாயார்.

மஞ்சுளாவின் மனக்கோட்டை இடிந்து சிதிலமடைந்து அலங்கோலமாகி விட்டது; வெடிக்கும் இதயத்துடன் அவள் தன் அன்னையின் பொருமலுக்கு எதிரொலித்தபடியே






மீண்டும் மாடிப்படி ஏறினாள். ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு தெருவை வெறித்து நோக்கினாள். முன்னாள் காலை கல்யாணப் பிள்ளையுடன் வந்த தோழன் போய்க் கொண்டிருந்தான். மஞ்சுளா சட்டென்று தன்னை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள். அந்த வாலிபன் ஒரு முறை தலையை நிமிர்த்தி அவளைப் பார்த்தான். மறு விநாடியே தலையைக் கவிழ்ந்து கொண்டு போய்விட்டான். மஞ்சுளாவின் வேதனை தாங்க முடியவில்லை. அவள் தன் பெட்டி ஒன்றின்மீது தலை வைத்து, வரும் கண்ணீரைத் தடுக்காமல் சோக சித்திரமாகக் கிடந்தாள்.

அப்பொழுது அவள் பெயரை அழைத்தபடியே மஞ்சுளாவின் தோழி ரமா அங்கு வந்து சேர்ந்தாள். மஞ்சுளா தன்னைச் சமாளித்துக் கொண்டு முறுவலிக்க முயன்றாள்.

"ஏன், மஞ்சுளா? என்ன விசேஷம்? ஏன் இப்படி" என்றாள் ரமா திகைப்புடன்.

"ஒன்றுமில்லை......" என்றாள் மஞ்சுளா.

"எனக்குத் தெரியும். உன் அம்மா சொன்னார்கள். இதற்கு இப்படி அழுவாயா? ஏதோ உன் அதிர்ஷ்டம் உன்னை முதன் முதல் பார்த்த மனிதன் 'சரி' என்று கூறி விட்டார். அது இல்லை என்றதும் மனம் விண்டு போகிறாய். என்னை எத்தனை பேர்கள் பார்த்திருப்பார்கள். கடைசியில் 'பெண் கறுப்பு' 'பெண் படித்தவள்' 'சீர் பற்றாது' 'சகுனம் சரியில்லை' 'ஜாதகம் பொருந்தவில்லை' என்று எத்தனை மெய்ச் சாக்கும் பொய்ச் சாக்குமாகக் கூறி விட்டுப் போயிருப்பார்கள்! என்ன செய்வது, நம் சமூகத்தில் கல்யாணம் ஒரு லாட்டரி, ஒரு பேரம்—இப்படியாகி விட்டது!"

மஞ்சுளா கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள். ரமா அவளைத் தழுவிக் கொண்டு ஏதேதோ வேடிக்கையாகப் பேசி அவள் மனத்துயரை மாற்றினாள்.

"மஞ்சுளா! நீ யாரிடமும் சொல்லாமல் இருந்தால் நான் ஒன்று சொல்வேன்" என்று கூறினாள் ரமா.

"என்ன? சொல்லேன்."

"நீ உன் அப்பா அம்மாவிடம் கூடச் சொல்லக் கூடாது."

"இல்லை, சொல்."

"அவர்களைக் கலைத்தது யார் தெரியுமா? சற்றுமுன் தெருவில் போனாரே ராமநாதன்—அந்தக் கல்யாணப் பிள்ளையின் உறவினர், அவர்தான். ஒரேயடியாக இந்தக் கல்யாணம் நடக்கக் கூடாது என்று பிடிவாதம் பிடித்து நிறுத்தி விட்டார். எங்கள் வீட்டுக் கூடத்திலிருந்து நானே கேட்டேன்." மஞ்சுளா அதன்பிறகு அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை. ரமா போன பிறகு அவள் அதை நினைத்து நினைத்துப் பொருமினாள். தாயின் ஊகத்தை மிகவும் மெச்சினாள்.

அதன் பிறகு தெருவிலோ கோயிலிலோ மற்ற இடங்களில் எங்கேயாவது அந்த மனிதனைக் கண்டால் ஒரு முறை அவள் இதயம் வெகுண்டு எழும். சில நாட்கள் கழித்து அந்த மனிதன் மாற்றலாகி வேறு ஊருக்குப் போய் விட்டதாகக் கேள்விப்பட்டாள் மஞ்சுளா. 'சனி தொலைந்தது. இனிமேல் நல்ல காலம் பிறக்கும்' என்று அவள் மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள்.

சில மாதங்கள் சென்றன. ஒரு நாள் வெளியூரிலிருந்து ஒரு உத்தியோகஸ்தர் அவர்கள் வீட்டுக்கு வர நேர்ந்தது. அகஸ்மாத்தாகப் பார்த்த மஞ்சுளாவின் அழகையும் சாதுர்யத்தையும் மிகவும் மெச்சினார் அவர். பேச்சுக்கிடையில் அவருக்கு ஒரு மகன் இருப்பது தெரிந்தது. மஞ்சுளா அவருடைய மருமகளாக ஆகிவிட்டாள்.

மஞ்சுளாவின் கணவன் ராகவன் மிகவும் பெருந்தன்மை வாய்ந்த மனிதன். அவன் கண்ணுக்கும் லட்சணமாக இருப்பவன். மஞ்சுளாவின் மனம் அவனிடம் ஒன்றியது. புக்ககத்தில் அவளுக்கு நல்ல பெயர் இருந்தது.

அவர்களது இல்லறச் சோலையை மேலும் சோபிக்க வைப்பதற்கு இரண்டு குழந்தைகளும் பிறந்து விட்டன.

* * *

மஞ்சுளா ஜன்னலை விட்டு அப்பால் வந்தாள். பழைய நினைவுகளிலிருந்து விடுபட வேண்டும் என்று தன்னையே வலுக்கட்டாயப் படுத்துவது போல இருந்தது அவள் முகத்தில் தோன்றிய பாவம்.

ராமநாதன் தன் வீட்டுக்கு வந்தது முதல் அவள் உள்ளத்தில் கொந்தளிப்பு சிறிதும் அடங்கவில்லை.



திருமதி அநுத்தமா

'' மஞ்சுளா! ராமுவுக்கு ஹார்லிக்ஸ் கொடுத்தாயா?'' என்று கேட்டுக்கொண்டே மஞ்சுளாவின் கணவன் ராகவன் அங்கு வந்து சேர்ந்தான்.

'' இதோ கொண்டு வருகிறேன் '' என்று மெதுவாகக் கூறிவிட்டு அவள் சட்டென்று சமையலறைப் பக்கம் ஓடி மறைந்தாள். தன் முகத்தைப் பார்த்துக் கணவன் ஏதேனும் நினைத்துவிடக் கூடாதே என்று நினைத்தபடி தன்னைச் சமாளித்துக் கொள்ள அவள் அரும்பாடு பட்டாள்.

அவள் ஹார்லிக்ஸைக் கரைத்து எடுத்துக் கொண்டு முன் பக்கம் வந்தாள். ராகவன் அதை வாங்கி எடுத்துக் கொண்டு தன் நண்பன் இருக்குமிடம் சென்றான். மஞ்சுளா பாராதது போல மெல்லக் கண்ணோட்டம் விட்டாள். ராமநாதன் அவள் பார்வையை நேரே பார்த்தானே தவிர பழைய நினைவோ மற்றப்படி தன்னை இதற்கு முன் அறிந்ததாகவோ காட்டிக் கொள்ளவில்லை. மஞ்சுளாவும் திரும்பி வந்து விட்டாள்.

'நம்மை நினைவே இல்லை போல இருக்கிறது. ஓர் இளம் பெண்ணின் இன்ப நினைவுகளை அசுரத்தனமாகப் பிய்த்து எறிந்த நினைவு கூடவா இராது? கடினமான மனமோ?' மஞ்சுளாவின் மனத்தில் ராமநாதனின் போக்கு பலவிதமாக வேலை செய்தது.

ராமநாதன் வந்ததும் ராகவன் அவனை மஞ்சுளாவுக்கு அறிமுகப்படுத்தினான். அப்பொழுது மஞ்சுளாவுக்கு மிகவும் தர்மசங்கடமாகத் தான் இருந்தது. ஆயினும் அவள் தன் தற்போதைய நிலைமையை ஒட்டி அவனை இதற்கு முன் பார்த்திராதது போலவும் புதியதாகப் பார்ப்பது போலவும் நடித்தாள். அவளுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது என்னவென்றால், ராமநாதனும் புதியதாகப் பார்ப்பது போலவே இருந்தான். எப்பொழுது அவள் ஜாடை மாடையாகப் பார்த்தாலும் அவன் அதே களங்கமற்ற, சலனமற்ற தன்மையுடன் தான் விளங்கினான்.

'இந்த மனிதர் நம் தெருவில் எத்தனையோ முறை போயிருக்கிறார். கோயிலிலும் கடைத் தெருவிலும் பார்த்ததில் கணக்கில்லை. ஐந்து வருடம் ஐம்பது வருடமல்லவே; எப்படி மறக்கும், எப்படி மறக்கும்?' என்று மஞ்சுளா உளைந்து கொண்டாள்.

அவளை மீறிச் சினம் பொங்கியது. ராமநாதன் என்றைக்குத்தான் வீட்டை விட்டுப் போவானோ என்று ஏங்கினாள் அவள். மனத்தில் புயல் வீச மேலுக்குப் பசப்புப் பேச்சு பேசிப் போலிப் பரிவும் காட்ட அவளுக்கு மிகவும் சிரமமாக இருந்தது. அவள் உடலே பலவீனமாகத் தென்பட்டது.

''மஞ்சுளா! இதோ பார் முளைக்கீரை வாங்கி வந்திருக்கிறேன். மசித்து விடு. இலை போட்டு விட்டுக் கூப்பிடு'' என்று சொல்லிக் கொண்டே ராகவன் வந்தான்.

அவளுக்குச் சகாயமாக ஆய்ந்து, கழுவிக் கொண்டு கொடுத்தான் கணவன். ''நாளைக் காலை சமைக்கிறேனே! இப்பொழுது அடுப்பெல்லாம் அணைத்து விட்டேன். மேலும் குழந்தை எழுந்திருக்கிற நேரம் ஆகிவிட்டது'' என்று இழுத்தாள் மஞ்சுளா. ராமநாதனுக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் பணிவிடை செய்வது அவளுக்கு மிகவும் வெறுப்பாக இருந்தது. கணவன் கோபித்துக் கொண்டு விடுவானோ என்ற பயமும் உள்ளூற அரித்தது. பாதி பீதியுடன் கணவனை நோக்கினாள்.

ராகவன் அவள் அருகில் வந்து தணிவான குரலில் கனிவோடு பேசினான். ''ராமு வாங்கினான். அவனுக்குக் கீரை மசியல் என்றால் உயிர். குழந்தை எழுந்தால் நான் பார்த்துக் கொள்கிறேன். போ. சீக்கிரம் ஸ்டவ்விலாவது...'' என்றான்.

மஞ்சுளா எழுந்தாள். ஸ்டவ்வைப் பற்ற வைத்துக் கீரையைச் சமைத்து முடித்தாள். வேண்டா வெறுப்பாக.

''நண்பன் என்றால் இப்படி ஒரு பாசமா! வர வர...நன்றாகத் தானிருக்கிறது...'' என்று அவள் வெளியே கேட்காதவாறு முணுமுணுத்துக் கொண்டாள்.

சாப்பாடு முடிந்த பிறகு ராமநாதனும் ராகவனும் முதல் குழந்தை ரவியுடன் வெளியே சென்றனர். மஞ்சுளா தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, சமையலறை வேலையைத் தீர்த்து விட்டு வந்தாள். கைக் குழந்தையும் அப்பொழுதுதான் விழித்துக் கொண்டது. அதை எடுத்துக் கொண்டு போய்த் தன் படுக்கையில் விட்டுக் கொண்டாள். நண்பர் இருவரும் வெகு தூரம் போகவில்லை போலும். சீக்கிரமே திரும்பி விட்டனர். வழியில் உறங்கிவிட்ட மகனைத் தோளில் சாய்த்தபடி உள்ளே வந்தான் ராகவன். குழந்தையைத் தன் படுக்கையில் விட்டு விட்டு மீண்டும் நண்பனிடம் பேசுவதற்குப் போய் விட்டான்.

மஞ்சுளாவுக்கு அலுப்பும் சலிப்பும் மேலிட்டன. அதை அடக்கும் முயற்சியில் அவள் கண்களை இறுக மூடிக் கொண்டாள். நாளெல்லாம் நன்றாக உழைத்ததன் பயனாகவும், ஜன்னல் வழியே வந்த சுகமான காற்றினாலும் அவள் சீக்கிரமே உறங்கிவிட்டாள்.

ராகவன் அவளைத் தட்டி எழுப்பியதும் கண்ணைக் கசக்கிக் கொண்டே மெதுவாக எழுந்தாள் மஞ்சுளா.

''மஞ்சு! ஆபீஸிலிருந்து தகவல் வந்திருக்கிறது. நான் விடியற்காலை சீக்கிரமே கிளம்பிப் போக வேண்டும். திரும்பி வர இரண்டு நாட்களாகும்'' என்றான் அவள் கணவன்.

''அப்படியானால் உங்கள் நண்பர்?'' என்று கேட்டாள் மஞ்சுளா முழு விழிப்புடன்.

''நீதான் அவனுக்கு ஏற்றபடி செய்கிறாயே! இரண்டு நாட்கள்தானே? நான் அவனிடம் ஒன்றும் சொல்லவில்லை. நான் கிளம்பிப் போனபிறகு சொல்லி நான் வரும் வரையில் அவனை நிறுத்தி வை. என்ன?'' என்றான் ராகவன்.

''நீங்கள் சொன்னதைத் தட்டினதே இல்லை. ஆனால் அவருடன் நான் எப்படித் தனியாக இருக்க முடியும்? அவரிடம் சொல்லி விடுவது தான் மேல். எங்கேயாவது இரண்டு நாட்கள் போய் விட்டுப் பிறகு நீங்கள் வந்த பிறகு வரட்டுமே?'' என்றாள் மஞ்சுளா.

''உன் யோசனை மிகவும் அற்புதமாக இருக்கிறது. பேஷ்!'' என்று இகழ்ச்சியாகப் பேசினான் ராகவன்.

''அற்புதமொன்றுமில்லை. அவசியம் அதுதான். யாராவது...''

''மஞ்சு! வாழ்க்கையிலேயே ஒரு நாள். இந்த ஒரு தடவைதான் கேட்கிறேன். எனக்காக நீ அவனை உபசரித்துத்தான் ஆக வேண்டும்.''-ராகவன் குரலில் கண்டிப்பு இருந்தது.

''அதே போல்தான் என் வாழ்விலே. இந்த ஒரு தடவைதான் நானும் உங்களை மறுப்பேன்....''

''சரி, சரி!'' என்று எரிச்சலாக மொழிந்து விட்டு ராகவன் போய்ப் படுத்துக் கொண்டு விட்டான். மஞ்சுளாவுக்கு அதற்குப் பிறகு அவனை நெருங்கி ஒன்றும் பேச இயலவில்லை. இரவெல்லாம் உறக்கமின்றிப் புரண்டு புரண்டு தவித்தாள் அவள்.

விடியற்காலம் ராகவனை அழைத்துச் செல்ல 'ஜீப்' ஒன்று வந்து நின்றது. மஞ்சுளா கணவனை, எழுப்பி விட்டு அவசர அவசரமாக, குளிக்க வெந்நீர் போட்டுக் கொடுத்து, உடுப்பு எடுத்து வைத்து, அவன் பிரயாணத்துக்கு ஆயத்தங்கள் செய்வதில் முனைந்தாள்.

ராகவன் வாசற்புறம் போய் ஜீப் டிரைவரிடம் என்னவோ கூறி விட்டு வந்ததும் ''மஞ்சுளா!'' என்று கூப்பிட்ட போது, மஞ்சுளாவின் உடல் முழுவதும் பதறியது. தன் கணவன் அவ்வளவு கோபித்துக் கொண்டு அவள் பார்த்ததே இல்லை. அவள் நடுங்கிக் கொண்டே எதிரே வந்து நின்றாள்.

''ராமுவைக் காணோம்'' என்று ராகவன் கூறிய போது அவன் கோபம் மறைந்து ஒரு வித சோகமே மிஞ்சியது.

மஞ்சுளாவின் கண்களில் நீர் நிறைந்து கொண்டது. அடைக்கும் துக்கத்துடன் அவள் தன் கணவனை நோக்கினாள். அவன் முக வேதனை அவளை மிகவும் வாட்டியது. ராகவன் ஒன்றுமே கூறாமல் தன் பிரயாணத்துக்குத் தயாராகிவிட்டான்.

''நான் கூறினது அவர் காதில் விழுந்திருக்குமோ? தெரியாத்தனமாக நான்...... என்னை மன்னித்து விடுங்கள்......'' என்று மஞ்சுளா கணவன் அருகில் வந்து கதறி அழுது விட்டாள்.

ராகவன் அவள் கன்னத்தைத் தட்டினான். அவன் வாய் பேசவில்லை. அவன் கண்களில் நீர் தேங்கியிருப்பதை அவன் மனைவி மஞ்சுளா கண்டாள்.



''நான் மகா பாவி, உங்கள் அன்புக்குப் பாத்திரமானவரை.........'' மஞ்சுளாவினால் மேலே பேச முடியவில்லை.

''பரவாயில்லை, மஞ்சுளா! உனக்கு

# நான்கு மருந்துகள்



சேர்ந்துள்ள

# 'அனாஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்த

## துரித நிவாரணமளிக்கிறது.

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனாஸினைப்'போல் துரிதமாகவும் ... அபாயமின்றியும் நிச்சயமாகவும் குணமளிக்க இயலாது. லட்சோபலட்சம் ஜனங்கள் 'அனாஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும் பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள், எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.










® GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER    ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைசா

என்னதெரியும்? உண்மை அறிந்தால் நீ ஒன்றும் கூறியிருக்க மாட்டாய். எனக்குத்தான் முன்பே சொல்லத் தெரியவில்லை......''

ராகவன் ஒரு தரம் விழுங்கினுன். உணர்ச்சியைத் தொண்டைக்கும் கீழே தள்ளினுன் போலும்! மஞ்களா பேசாமல் ஆவலே உருவாகக் கணவன் முகத்தை அண்ணாந்து ஒரு தடவை பார்த்தாள்.

''மஞ்களா! ராமு ஒரு நோயாளி. அவனுக்குப் புற்று நோய் வந்து விட்டது. இனி ஒரு மாதம் இரண்டு மாதம்தான் உயிருடன் இருப்பான் என்று டாக்டர்கள் கூறி விட்டார்கள். அவனே நம்மிடம் சில நாட்கள் இருக்க இஷ்டப்பட்டான்......''

மஞ்களாவின் மனம் அவளைக் குத்திக் குத்திக் காட்டியது. எந்த விதமாகவும் தன்னைச் சமாதானம் செய்து கொள்ள முடியாமல் தவித்தாள் அவள்.

அப்பொழுது ஜீப் டிரைவர் வாசலில் வந்து, ''சார்!'' என்று அழைத்தான்.

''என்ன, அப்பா? இதோ கிளம்பி விட்டேனே?'' என்றுன் ராகவன்.

''அதற்கில்லை, சார். யாரோ கடிதம் கொண்டு வந்திருக்கிறுர்கள்.''

''கடிதமா?'' என்று ஏககாலத்தில் கேட்டுக்கொண்டு, மஞ்களாவும் ராகவனும் வாசற்புறம் சென்றனர்.

''நான் ஸ்டேஷனில் போர்ட்டர், சார்! விடியற்காலை மெயிலில் போகிற ஒருவர் இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னுர்'' என்று ஒரு கடிதத்தை நீட்டினுன் ஓர் ஆள்.

ராகவன் அவசர அவசரமாகக் கடிதத்தைப் பிரித்தான். ராமநாதனின் கையெழுத்தைக் கண்டதும் அவன் உடல் பதறியது. உள்ளம் தவித்தது. ஆனுல் முதல் வரியைப் படித்தான். ''இதைக் கொண்டு வருபவனிடம் எட்டணு கொடு'' என்று இருந்தது.

''சார், வரட்டுங்களா?'' என்றுன் கடிதம் கொண்டு வந்தவன்.

''இந்தாப்பா'' என்று அழைத்து அவனிடம் எட்டணுவைக் கொடுத்தாள் மஞ்களா.

ராகவன் அதற்குள் கடிதம் முழுவதையும் படித்து முடித்து விட்டு அதை மஞ்களாவிடம் நீட்டினுன்.

''இந்தா, மஞ்சு! என்னதுக்கோ நடந்ததை வைத்துக் கொண்டு தவித்தாயே, இதைப் படி!'' என்றுன் ராகவன்.

மஞ்களா தன் விரல்கள் தாளம் போட, கடிதத்தை வாங்கிப் படிக்கலானுள்.

''ராகவா, நல்லகாலம்! உன் மனைவி என்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. அது பெரும் நன்மை. இங்கே இருந்த நாட்கள் எத்தகையவை என்று எனக்கு விவரிக்கத் தெரியவில்லை. விலையுயர்ந்த ஒரு பொக்கிஷத்தை நீ எனக்கு அளித்ததுபோல. என் ஆருயிர் நண்பன் நல்வாழ்வு வாழ்கிறுன் என்கிற திருப்தி எவ்வளவு பெரிய ஆனந்தம் அளிக்க வல்லது! அதைவிட மேலானது இது தான். மஞ்களாவின் உயர் பண்புகளை நன்கு அறிந்த நான் நல்லதைக் கருதி இரண்டு காரியங்கள் செய்தேன். இரண்டாவது எப்படி முடிந்ததோ என்று ஒரு சந்தேகம் என்னை அரித்தபடியே இருந்தது. அதைத் தெளிந்து கொள்ளவே நான் வந்தேன். நீயும் அவளும் நடத்தும் அன்பு நல்லறம் எனக்கு அமிர்தம் வாய்த்தது போல அமைந்தது. இதைவிட மேலான ஒரு வெகுமதி ஒரு மனிதனுக்குக் கிடைக்க முடியாது. நீயும் மஞ்களாவும் குழந்தை குட்டிகளுடன் ஆனந்தமாக நெடு நாட்கள் வாழ வேண்டும். நான் எங்கு இருந்தாலும் என் ஆத்மா உன் அருகிலேயே இருந்து இன்புற்றபடி இருக்கும்.

''நான் திடீரென்று கிளம்பி விட்டதைத் தவருக நினைக்காதே. நீ படுக்கப் போன பிறகு எனக்கு வலி தாங்க முடியாமல் வந்தது. உன் வீட்டில் ஏதேனும் எக்கச்சக்கமாக நடந்துவிடக் கூடாது என்று கருதி மெல்ல எழுந்து வந்து விட்டேன். நான் வருவதைக் குறித்து என்தகப்பனுருக்குத் தந்தி கொடுத்து



விட்டேன். போய்ச் சேர்ந்து விடுவேன். போய்ச் சேர்ந்தவுடன் தந்தி அடிக்கிறேன். உன்னை இரவில் எழுப்பாததற்கு மன்னித்து விடு. உன் மனைவி இளம் குழந்தைக்காரி. விடியற்காலை எழுந்து வேலை செய்ய வேண்டும். ஒரு தங்கையின் அருமை அண்ணனுக்குத் தானே தெரியும்! அவளை இன்று போலவே என்றும் வைத்துக்கொண்டிரு. உடம்பு இடம் கொடுத்தால் மீண்டும் வருவேன்.''

மஞ்களா விக்கி விக்கி அழுதாள். ராகவன் அவளைச் சமாதானப் படுத்தினுன்.

''தெரியாமல் செய்ததற்கு அழுவார்களா? நீ சொல்வதைக் கேட்டு அவன் போகவில்லை, பார். அவனே தான் கிளம்பியிருக்கிறுன்.''

''என் பழைய கதை......அதெல்லாம் உங்களுக்குத் தெரியுமா?'' என்று ஈனமான குரலில் கேட்டாள் மஞ்களா. அவள் உள்ளத்திலே பழைய சம்பவங்களின் நினைவு அலைகள் எழுந்தன.

''தெரியும், மஞ்களா! ராமு உங்கள் ஊரில் வேலையாக இருந்தபோது உன் குணத்




தைப் பற்றியும் கேள்விப் பட்டானும். அப்பொழுதே அவனுக்கு உடம்புக்கு வந்து விட்டது. சிகிச்சை செய்து வந்தான். அதனால் தான் உன்னை மணக்க முடியாததால் உன்னை ஒரு தங்கையாகவே பாவித்து விட்டான் போலும். உன்னைப் பல முறைகள் பார்த்திருக்கிறானும். அவன் உறவினன் உன்னைப் பார்க்க வந்து சம்மதித்ததும் அவனுக்கு மிகவும் அதிர்ச்சியாகி விட்டதாம். அந்தப் பையன் குடிகாரனும். உன் வாழ்வு கெட மனமில்லாமல் அவர்களிடம் ஏதோ சொல்லி மணத்தை முறித்து விட்டானும். பிறகு தான் ,தான் செய்தது உன் பிற்கால வாழ்க்கையைப் பாதிக்குமே என்று தோன்றியதாம். என்னிடம் வந்து 'ஒரு உயர்ந்த ரத்தினம் இருக்கிறது. ஒரு விலை மதிப்பற்ற தங்கம் இருக்கிறது. என்ன செய்வது' என்று ஒரு நாள் கேட்டான். 'என்னடா செய்வார்கள். ரத்தினத்தைத் தங்கத்தில் புதைத்து அணிந்து கொள்ள வேண்டியது தான்' என்றேன் நான், இன்ன விஷயம் என்று அறியாமலே. பிறகு தான் அவன் உன்னைப் பற்றி என் பெற்றோரிடம் சொல்லி, அகஸ்மாத்தாக நேருவது போல உங்கள் வீட்டுக்கு என் அப்பாவை அனுப்பித் தயார் செய்து விட்டான்......"

"அவர் கல்யாணத்துக்கு வரவில்லையே?" என்று வியப்புடன் கேட்டாள் மஞ்சளா.

"அவன் அப்போது இந்தப் பக்கமே இல்லையே? எங்கோ அவன் வியாதிக்கு வைத்தியத்துக்காக இந்தியா முழுவதும் அலைந்து கொண்டிருந்தான்........."

"என்னை மன்னிப்பாரா அவர்? உங்களைக் கண் எடுத்துப் பார்க்கவே எனக்கு வெட்கமாக இருக்கிறது......மணமாகி இத்தனை நாட்கள் கழித்து......"

"அதெல்லாம் பரவாயில்லை, மஞ்சளா! அப்பொழுது இருந்த இளமைப் பருவத்தில் பட்ட அடி. அதன் வடுவை நெருடின போது ஏற்பட்ட பிரமை. அதனால் நீ மனசினால்கூடத் தவறு செய்தவள் ஆகமாட்டாய். அறியாமையினால் குழப்பம் ஏற்படாத அளவுக்கு நாம் முதிர்ந்து விட்டோமா? அசடு, தேற்றிக் கொள். எனக்கு நாழிகையாகி விட்டது. நான் வருகிறேன்" என்று கூறிவிட்டு ராகவன் கிளம்பி விட்டான்.

மஞ்சளா கணவனை வழியனுப்பி விட்டு வந்து அமர்ந்தாள். வீடே காலியாக இருந்தது அவள் கண்களுக்கு. மனமும் குழம்பிய படி இருந்தது. எப்படியோ மெள்ள இயந்திரம் போல எழுந்து நாளைக் கழித்தாள்.

"எவ்வளவு பெரிய மகானைத் தவறாக நினைத்து விட்டேன்! சிரமேற் கொண்டு செய்ய வேண்டிய பணிவிடைகளைக் கோணின இதயத்துடன் செய்தேனே? தவறோ என் மீது. அநீதி இழைத்ததோ அவர் மீது. கல்யாணமாகிச் சந்தோஷமாக இருக்கும் போது கணவனுக்குத் துரோகம் செய்வது போல என்றோ நடந்ததை நினைத்தது பெரிய குற்றம். அதை நியாயம் போலக் கொண்டாடி, அநியாயமாக அவரை நினைத்தேனே" என்று உளைந்து உளைந்து துடித்தாள் மஞ்சு.

* * *

"ஸார், போஸ்ட்" என்ற சத்தம் கேட்டுத் திரும்பினாள் அவள். வாசலில் தபால்காரன் கையில் கடிதத்துடன் நின்று கொண்டிருந்தான். அவன் கொடுத்த கடிதத்தை வாங்கிப் பார்த்தாள். அதில் தன் கணவன் பெயர் குறிப்பிட்டிருக்கவே பிரிக்காமலே மேஜைமீது வைத்தாள் மஞ்சளா.

அன்று பிற்பகல் ராகவன் திரும்பி வந்தான். கடிதத்தை மடித்தான். "ராமுவின் அப்பா எழுதியிருக்கிறார்" என்றான் ராகவன் கடிதத்தைப் பிரித்தபடியே.

மஞ்சளா அவன் முகக் குறியைப் பார்த்துக் கலங்கியவளாய் அந்தக் கடிதத்தை வாங்கிப் பிரித்துப் படித்தாள்.

"அண்ணா, அண்ணா! உங்களை அறிந்து கொள்வதற்குள் நீங்கள் போய் விட்டீர்களே!" என்று கலங்கினாள் மஞ்சளா.

"மஞ்சளா! அழாதே. ராமநாதன் வரையில் நீ நினைத்தது ஒன்றுமே தெரியாது. அவனை நீ அடையாளம் கண்டு கொள்ள வில்லை என்றே அவன் நினைத்தான். ஆத்ம திருப்தியுடன் சென்றான்."

"ஆனால் நான்..."

"அலட்டிக் கொள்வானேன்? அவன் எப்பொழுதும் நம் இதயத்தில் இருப்பானே!"

"ஆமாம். என்றும் நம்மிடம்தான் இருப்பார். நம் தெய்வம் அல்லவா அவர்?" என்றாள் மஞ்சளா நாத்தழுதழுக்க.

பொன்னி எங்கே?
தொடர் கதையும்
கல்கத்தா மகாநாடு
கட்டுரையும்
அடுத்த இதழில் வெளியாகின்றன

# அந்த வசீகரிக்கும் எழிலுக்கு...




ஒவ்வொரு கெஜத் துணி மீதும் இந்த அடையாளம் ஸ்டாம்பு செய்யப்பட்டுள்ளதாவெனக் கவனியுங்கள்

**ராஜலக்ஷ்மி 48"**

அல்லது

**ராஜ்ஜோபா 45"**

மிக நேர்த்தியான [illegible] தயாரிப்பாளர்கள்

**தி மப்பட்லால் பைன் மில்ஸ் லிமிடெட்**

நவஸாரி

மொத்த விநியோகஸ்தர்கள் :

**தி பயனியர் பீஸ்-குட்ஸ் கோ.,**

கௌராஜ் கல்லி, எம். ஜே. மார்க்கெட் பம்பாய்.2. போன் : 34292

MPS-TAM


கவிச்சக்கரவர்த்தி
தமிழ்த்தாயின் அரு
மைப் புதல்வர் கம்பர்.
கலைமகளின் அருட்பிர
சாதம் பெற்ற கவிஞர்
திலகம் கம்பர்.
கல்வியில்பெரியவர் கம்பர்.
உலக கவிஞர்களில் முன்ன
ணியில் நிற்கும் கவிஞர் கம்பர்!
அவர் இயற்றிய ராமாயணம்
தமிழ் உள்ளளவும், உலகம்
உள்ளளவும் இருக்கும். அவரைப்
பெற்ற நாம் பாக்கியசாலிகள்.
உலக இலக்கியங்களில் பயிற்சி
யும் தேர்ச்சியும் பெற்ற மகாகவி
பாரதியார், வ. வே. சு. அய்யர்,
ரஸிகமணி டி. கே. சி. முதலியவர்கள்
கம்பன் கவி இன்பத்தில் தங்கள் உள்
ளத்தைப் பறி கொடுத்தார்கள்.
இந்த மகாகவியைப் பற்றிக் கர்ண
பரம்பரையாக வழங்கும் சில வாழ்க்கை
நிகழ்ச்சிகளை இப்பகுதியில் காணலாம்.
மணியம்

## எழுத்தாணி அருள்!

ஆழியான் ஆழி. அரன்
மழுத்தான் என்பான்
கோழியான் குன்றெறிய
வேலென்பான்—பூழியான்
அங்கை எழுத்தாணி
அருள்என்பான், மாவண்டூர்ச்
சிங்கன் உலைக்களத்தே
சென்று!




இலைமேல் என்ன?
மூங்கில் இலைமேலே
தூங்கும் பனிநீரே
தூங்கு பனிநீரை
வாங்கு கதிரோனே!
மணியம்



மன்னவனும் நீயோ
வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை
ஓதினேன்—என்னைப்
பரிந்தேற்றுக் கொள்ளாத
பதியுண்டோ உண்டோ
விரைந்தேற்றுக் கொள்ளா
வேந்து.
— கம்பர்.




## 1. தாத்தாவும் பேரனும்

நிலவு பால் போல் காய்ந்துகொண்டிருந்தது. நட்சத்திரங்கள் 'பளிச் பளிச்' என்று மின்னிக் கொண்டிருந்தன. உலகமே ஒரு தனி அழகோடு விளங்கியது.

முன்னிரவு கழிந்து நடு இரவு ஆரம்பமாகிக் கொண்டிருந்த இந்த நேரத்தில் கபாடபுரத்தை நோக்கிச் செல்லும் இராஜ பாட்டையில் இரண்டு குதிரைகள் மெள்ள ஓடிக் கொண்டிருந்தன. அவை அழகாகவும் கம்பீரமாகவும் தோன்றின.

அவற்றின் மேல் அமர்ந்திருந்தவர்களைப் பார்த்தால் தொலை தூரத்திலிருந்து வருபவர்களைப் போல் காணப்பட்டார்கள். அவர்களில் ஒருவன் சிறுவன். அவன் சிறியவனாக இருந்தாலும் பெரிய வீராதி வீரனைப் போல் விளங்கினான். அவனுடைய முகக்களையே அவன் சகல கலைகளிலும் வல்லவன் என்பதை எடுத்துக் காட்டியது. மற்றொருவர் நரைத்த த[illegible]யோடு கூடிய வயோதிகராக இருந்தார். அப்படி வயதாகி இருந்தும்கூட வாட்டசாட்டமான கைகால்களோடு ஒரு பயில்வானைப் போல் தோன்றினார். அந்தச் சிறுவனுடைய தாத்தா அவர்.

அவர், தன் பக்கத்தில் குதிரையில் வந்து கொண்டிருக்கும் பேரனை நோக்கி, "வீராங்கா! உனக்குக் களைப்பாக இருக்கிறதா?" என்று கேட்டார்.

அதற்கு அவனுடைய பேரன் வீராங்கன், "இல்லை, தாத்தா! எனக்குக் களைப்பே ஏற்படவில்லை. என் குதிரைக்குத்தான் களைப்பாக இருக்கும் போலிருக்கிறது" என்றான். பிறகு அவனே தொடர்ந்து, "ஏன்,

தாத்தா! கபாடபுரம் இன்னும் எவ்வளவு தூரம் இருக்கும்?'' என்று கேட்டான்.

தாத்தா, ''அதோ தெரிகிறதே, அது தான் கபாடபுரம். இதே வேகத்தில் சென்றால்கூட இன்னும் அரை நாழிகை நேரத்தில் கோட்டைக்குள் போய்விடலாம்'' என்று கூறி எதிரே கையைச் சுட்டிக் காட்டினார்.

வீராங்கன், ''இவ்வளவு நேரமாகிவிட்டதே! கோட்டைக்குள் எப்படிப் போகமுடியும்?'' என்றான் வியப்போடு.

''சாதாரண நாளாக இருந்தால் போக முடியாதுதான். ஆனால் நாளைக்கு அரசரின் பிறந்த நாள் கொண்டாட்டம் அல்லவா? அதனால் கொண்டாட்டம் முடிகிற வரை யார் வேண்டுமானாலும் எந்த நேரத்திலும் கோட்டைக்குள் போகலாம்.''

இதற்குள் இரண்டு குதிரைகளும் கோட்டை வாசலை நெருங்கின. தாத்தா பேச்சை நிறுத்தி விட்டுக் குதிரையிலிருந்து கீழே இறங்கினார். வீராங்கனும் கீழே இறங்கித் தன்னுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டான். தாத்தா தம் குதிரையை அழைத்துக் கொண்டு வெளியூர்க்காரர்கள் தங்கும் விடுதியை நோக்கி நடந்தார். வீராங்கனும் அவர் பக்கத்தில் நடந்து கொண்டிருந்தான். இவ்வளவு நேரமாகியும் ஊரில் ஜன நடமாட்டம் அதிகமாக இருந்தது. மறுநாள் கொண்டாட இருக்கும் அரசரின் பிறந்த



நான் முன்னிட்டு மக்கள் தூக்கத்தைக் கூடப் பொருட்படுத்தாது தத்தம் வீடுகளை யும் வீதிகளையும் பிரமாதமாக அலங் கரித்து அழகுபடுத்துவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

இதை யெல்லாம் பார்த்து ரசித்துக் கொண்டே தாத்தாவும் பேரனும் விடுதியை அடைந்த பொழுது இரவு மூன்றும் சாமம் ஆரம்ப மாகிவிட்டது.

மறுநாள் சூரியன் தகதகவென்று கீழ்க் கடலின் அடியிலிருந்து எழுந்து கொண் டிருந்தான். அதே சமயத்தில் கபாடபுரத் தின் பேரரசர் தம் அரண்மனையை விட்டுப் புறப்பட்டு யானையின் மேல் ஏறி உட்கார்ந்தார்.



உடனே சங்கநாதம் எழுந்தது. முழவு ஒலித் தது. முரசு அதிர்ந்தது. தாரை முழங்கியது. சுற் றிலும் இருந்தவர்கள் பலவகை நறுமண மலர் களை வாரி வாரி அரசரின் மேல் தூவினார்கள். தூவிக்கொண்டே 'மன் னாதி மன்னர் நீடூழி வாழ்க' என்று வாழ்த் தொலி செய்தார்கள்.

வீராங்கன் தன் தாத் தாவின் கையைப் பிடித்தவாறே இந்தக் கோலாகலக் காட்சியை ஆனந்தமாகப் பார்த்துக் கொண்டு வந்தான்.

இது போன்ற கொண்டாட்டத்தை இப் பொழுதுதான் முதன் முறையாகப் பார்ப்ப தால் அவனுக்கு உண்டான மகிழ்ச்சியும் ஆச்சரியமும் கொஞ்சநஞ்சமல்ல.

திடீரென்று அவனுக்கு என்ன தோன் றியதோ, தெரியவில்லை. தன் தாத்தா விடம், "ஏன் தாத்தா! நானும் இதுபோல் யானையின்மேல் ஊர்வலம் வரமுடியாதா?" என்று ஆவலுடன் வினவினான்.

அதைக் கேட்ட தாத்தா கட கட வென்று சிரித்து விட்டு, "நீயும் ஒரு அரசனாக இருந் தால் இப்படி ஊர்வலம் வரலாம்" என்றார்.

தாத்தா அப்படிக் கூறியதும் வீராங் கனின் முகம் பெருவாரியாக மாற்றமடைந் தது. "நீயும் ஒரு அரசனாக இருந்தால்..." என்று தாத்தா கூறிய வாக்கியம் வீராங் கன் காதுகளில் தொடர்ந்து ஒலித்துக் கொண் டிருந்தது.

அப்பொழுது 'ஆ...' என்று எழுந்த பயங்கரமான, பரிதாப ஓசை வீராங்கனையும் அவன் தாத்தாவையும் தவிர கபாடபுரத்து மக்கள் அனைவரையுமே நடுங்க வைத்தது.

அப்படி எல்லோரையும் நடுநடுங்க வைக் கும்படியான 'ஆ' என்ற ஓசை அறுபது வயதான சக்கரவர்த்தியின் வாயிலிருந்து தான் எழுந்தது! சத்தம் வருவதற்கு என்ன காரணம் என்பதை எல்லோரும் நொடியில் அறிந்து கொண்டார்கள்.

அரசரின் மார்பில் ஒரு அம்பு பாய்ந்து நின்றது. இரத்தம் இலேசாகக் கசிந்து பரவி இருந்தது. அந்தக் கூர்மையான அம்பின் தாக்குதலை அரசர் தாங்க முடி யாது போனதில் வியப்பொன்றும் இல்லை. பாவம், வயதான மன்னர் வாய்விட்டுக் கதறி யழுதார்.

அரசரை மெதுவாக யானையின் மீதிருந்து இறக்கி அரண்மனைக்குக் கொண்டு வந் தார்கள். அரண்மனை வைத்தியர்களைத் தவிர இன்னும் ஊரில் இருந்த நூற்றுக் கணக்கான வைத்தியர்கள் அரசரைச் சூழ்ந்து நின்றார்கள். தாங்கள் கற்ற வித் தையை ஒவ்வொருவரும் காட்டினார்கள். அம்பு மெதுவாகப் பிடுங்கப் பட்டது. இரத்தம் பீறிட்டு அடித்தது. அதை நிறுத்திப் புண்ணில் மருந்து வைத்துக் கட்டி னார்கள். நொடிக்கு ஒரு மருந்து வீதம் மாற்றி மாற்றி வைத்துக் கட்டிய படி இருந்தார்கள்.

அரசரின் மேல் அம்பு பாய்ந்ததைப் பார்த்த வீராங்கனுக்குத் தன் மேல் அம்பு பாய்ந்த தைப் போலவே இருந்தது. அவன் உடல் முழுதும் படபட வென்று நடுங்கியது. குப் பென்று வியர்த்துக் கொட்டியது. அவன் உள்ளம் எதை எதையோ எண்ணியது. உடனே தாத்தாவிடம் கேட்டான்:

"ஏன் தாத்தா! உலகமெல்லாம் உத்த மர் என்று போற்றும் நம் அரசருக்குக் கூடவா எதிரிகள் இருக்கிறார்கள்?"

வீராங்கன் இவ்வாறு கேட்டதும் தாத்தா அவன் வாயைப் பக்கென்று அழுத்தி மூடி விட்டு, "இங்கே எதுவும் பேசக் கூடாது. விடுதிக்குப் போய் எல்லாவற்றையும் உனக்கு விவரமாகச் சொல்கிறேன்" என்று மெல்லிய குரலில் கூறி, அவனைப் பரபர வென்று இழுத்துக் கொண்டு விடுதியை நோக்கி வேகமாக நடந்தார்.

விடுதியை அடைந்ததும் இருவரும் ஒரு ஒதுக்குப்புறமான இடத்தில் சென்று அமர்ந் தார்கள். வீராங்கன் தாத்தா சொல்லப் போவதைக் கேட்க ஆவலோடு காத் திருந்தான். தாத்தாவும் அதை அறிந்து கொண்டவரைப் போல் சீக்கிரமாகவே சொல்லத் துவங்கினார். (தொடரும்)

# தாத்தாவின் பரிசு

ஸ்ரீமதி ஏ. வி. ஆர். சுந்தரம்

"அம்மா! எப்பொழுது தாத்தாவும் பாட்டியும் வரப் போகிறார்கள்? இன்று வருவார்களென்று நீ சொல்லிக் கொண்டிருந்தாயல்லவா?" என்று பத்து வயது ராமு கேட்டான்.

"இன்றைக்குச் சாயங்காலம் ஆறு மணிக்கு ரயில் வருகிறதாம். அதில்தான் வரப்போகிறார்கள். நாம் எல்லோரும் ரயிலடிக்குப் போய் அவர்களை அழைத்து வருவோம்" என்று பதிலளித்தாள் அவனுடைய தாயார்.

"அம்மா! தாத்தா எனக்கு என்ன வாங்கிக்கொண்டு வருவார்? எனக்கு செண்ட், சோப்பு, அல்லது ஏதாவது வாசனைச் சாமான் பிடிக்கும் என்று தாத்தாவுக்குத் தெரியும் அல்லவா?" என்று கேட்டான் ராமுவின் தம்பி கிட்டு. அவனுக்கு வயது எட்டு.

"போடா கிட்டு! உனக்கொன்றும் கொடுக்கக்கூடாது. நீ எப்பொழுதும் எல்லாருடனும் சண்டை போடுகிறாய். குழந்தை ரமாவை அடிக்கடி அழவிடுகிறாய். ஆதலால் உனக்கொன்றும் கொடுக்க வேண்டாம் என்று நான் சொல்லப் போகிறேன்" என்றான் ராமு.

"எனக்குத்தான் தாத்தா பொம்மை கொடுப்பார்!" என்று ரமா நிச்சயமாய்த் தன் மழலைச் சொல்லால் சொன்னாள். அவளுக்கு வயது நாலுதான்.

இப்படிக் குழந்தைகள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டு தன் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அவர்கள் தாயார். "சமர்த்தாயிருப்பவர்களுக்கு எல்லாம் கிடைக்கும்" என்று பொதுவாக ஒரு வார்த்தை சொல்லிவிட்டு அவள் போய் விட்டாள்.

* * *

மறுநாள் மாலை தாத்தா, பாட்டி, அப்பா, அம்மா எல்லோரும் ஊர்க்கதைகள் பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அந்தச் சமயம் அங்கே கிட்டு ஓடோடியும் வந்தான். "தாத்தா! பரிசுப் போட்டி ஒன்று வைக்கப் போகிறேன் என்று நேற்று நீங்கள் சொன்னீர்களே! எப்பொழுது நடக்கப் போகிறது? அதனுடைய விவரங்களைச் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

தாத்தா சொன்னார்: "ஆம்! பத்துக் குழந்தைகள் சேர்ந்தால் போதும். அக்கம் பக்கம் இருக்கும் உங்கள் சிநேகிதர்களையும் கலந்து கொள்ளச் சொல்லு. வயது ஆறுக்கு மேல் பன்னிரண்டுக்குள் இருக்க வேண்டும். நான் வைக்கப் போகும் போட்டியின் மாதிரியே புதிது. நாளை ஒரு நாள் சாவகாசம் கொடுக்கிறேன். நாளைக்கு மறுநாள் சாயங்காலம் இதே சமயத்தில் நாம் இங்கே கூடுவோம். அப்பொழுது நீங்களும் மற்றக் குழந்தைகளும் இங்கே வரவேண்டியது. யார் மிகவும் சுத்தமாகவும், வாசனையாகவும் இருக்கிறார்களோ, அவர்களுக்குத்தான் முதற் பரிசு. ஒரு பெரிய ஸெண்ட் புட்டியும் புஸ்தகமும்" என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த குழந்தை ரமா, "தாத்தா! நான் சேரக் கூடாதா?" என்று கேட்டாள்.

"இல்லை, குழந்தாய்! நீதான் எல்லோருக்கும் தீர்ப்பு சொல்லிப் பரிசு வழங்க வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்; நீ ரொம்பப் பெரியவள் மாதிரி நடந்து கொள்ள வேண்டும்" என்றார் தாத்தா; குழந்தை ரமாவுக்கு மிகவும் சந்தோஷம். அம்மாவைக் கட்டிக் கொண்டு 'நான் பெரியவள்' என்று குதித்தாள்.

கிட்டுவுக்கு இதைக் கேட்டவுடன் ரொம்ப வியப்பாய்ப் போய் விட்டது. "என்ன தாத்தா! இவ்வளவுதானா? ரொம்பச் சுலபமாய்ப் போய்விட்டது. நிச்சயம் எனக்குத்தான் கிடைக்கும் பரிசு!" என்று சொல்லிக் கொண்டான்.

அக்கம் பக்கத்திலுள்ள குழந்தைகளின் பெற்றோர்கள் இதைக் கேட்டவுடன், "இது என்ன, வேடிக்கையான போட்டியாக இருக்கிறதே. ஒரு வேளை தாத்தாவுக்கு மூளைக் கோளாறோ என்னவோ?" என்று நினைத்தார்கள். எதற்கும் குழந்தைகளின் உற்சாகத்தைக் குறைக்க வேண்டாம் என்று பேசாமல் இருந்து விட்டார்கள்.

* * *

போட்டி தினம் வந்தது. மாலையில் தாத்தாவும் குழந்தை ரமாவும் ஒரு பெரிய மேஜையின் அருகில் உட்கார்ந்திருந்தார்கள். மேஜைமேல் புஸ்தகங்கள், சோப்புப் பெட்டிகள், ஸெண்ட் புட்டிகள் முதலியன அழகாய் அடுக்கி வைத்திருந்தன. சுவரில் கலைமகள் படம், தூய்மையான வெள்ளை பட்டு உடுத்தி, கையில் வீணையும் புத்தகமும் வைத்துக் கொண்டிருந்த சரஸ்வதி படத்துக்குக் கதம்பமாலை சூட்டித் திவ்ய மணமான ஊதுபத்திகளையும் ஏற்றி வைத்திருந்தது.

பளிச்சென்று தேய்த்த குத்து விளக்கு ஒன்று பக்கத்தில் முத்துப் போல் எரிந்து கொண்டிருந்தது.

மணி ஆறு அடித்ததும் குழந்தைகள் ஒவ்வொருவராக வந்தார்கள். கிட்டுவின் வாசனை சொல்லி முடியாது. பத்து தினுசு சோப் தேய்த்து, பதினைந்து வகை ஸெண்ட் பூசியிருப்பானோ என்று நினைக்கும்படி இருந்தது. மற்றக் குழந்தைகளும் பலவித வாசனைகளுடன் வந்தார்கள். ஒரு குழந்தை துல்லியமான சாதாரணப் பாவாடை சட்டை உடுத்தி, தலையில் கொஞ்சம் மல்லிகைப் புஷ்பம் மட்டும் வைத்திருந்தாள். சாந்தமான முகத்தில் திருப்தியான புன்னகை மட்டும் இருந்தது.

கிட்டுவுக்கு மற்றக் குழந்தைகளைப் பார்த்தவுடன் மிகவும் திருப்தி. தனக்குத்தான்

முதற்பரிசு என்று முன்னமேயே அவன் நிர்மானித்து விட்டான்.

போட்டி ஆரம்பித்தது. தாத்தா முதலில் பத்து வயது லட்சுமியைக் கூப்பிட்டார். "லட்சுமி! முதலில் இங்கே வா! நேற்று பள்ளிக்கூடம் போயிருந்த பொழுது உன் தங்கையின் புத்தகத்தைப் பிடுங்கினாயா? பிடுங்கிய பிறகு அவளைக் கிள்ளிவிட்டு அம்மாவிடம் இல்லை என்று பொய் சொன்னாயா?" லட்சுமிக்குத் தாத்தா என்ன ஜோஸியர் மாதிரி பேசுகிறாரே என்று முதலில் பயமாய்ப் போய் விட்டது. மிகவும் தணிந்த குரலில், "ஆமாம், தாத்தா! என்னவோ செய்து விட்டேன். மன்னியுங்கள். நான் வாசனையாக வந்திருக்கிறேனே! எனக்குப் பரிசு உண்டா?" என்று லட்சுமி கேட்டாள்.

கிட்டு எழுந்திருந்து, "தாத்தா! இது என்ன கேள்விகள் கேட்கிறீர்கள்? வாசனையுள்ளவர்களுக்குப் பரிசு என்றுதானே சொன்னீர்கள்? இதற்கும் வாசனைக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டான்.

"பெரியவர்கள் பேசும் போது குறுக்கிடாதே!" என்று சொல்லி விட்டுத் தாத்தா அடுத்த குழந்தையை அழைத்தார். "பாபு, இங்கே வா! இன்று இவ்வளவு வாசனையாக வந்திருக்கிறாயே! நேற்று சகதியில் உன் சிநேகிதனைப் பிடித்துத் தள்ளி விட்டு நீயும் உன் தாயார் சொல்லுக்குக் கீழ்ப்படியாமல் ஓடினாயல்லவா?"

பாபு மௌனம் சாதித்தான். எப்படி இவ்வளவு சரியாகச் சொல்லுகிறார் என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

இதற்குள் கிட்டுவுக்கு மிகவும் கலக்கமாகி விட்டது. "கிட்டு! நேற்று பள்ளிக்கூடம் போகிறேன் என்று சொல்லி விட்டுத் தங்கதின் வீட்டுக் கண்ணாடி ஜன்னல் மேல் பந்தை எறிந்து உடைத்தாயல்லவா? அவர்களிடம் மன்னிப்பும் கேட்காமல் அம்மாவிடமிருந்து அந்தச் செய்தியைச் சொல்லாமல் இருந்தது உண்மைதானே?"

கிட்டு பதில் சொல்லவில்லை. அவனுக்குக் கோபமும் அழுகையும் வந்து விட்டன.

இப்படியே மற்றக் குழந்தைகளையும் விசாரித்து முந்திய தினம் அவர்கள் நடந்து கொண்டதைக் கண்ணாடி போல் சொல்லி விட்டார் தாத்தா.

கடைசியில் குழந்தைகள், 'தாத்தா! என்ன பரிசு யாருக்குக் கொடுக்கப் போகிறாரோ' என்று நினைத்துக் கொண்டு ஆவலாக இருந்தார்கள்.

"சரஸு! இங்கே வா!" என்று அழைத்தார் தாத்தா. எட்டு வயது சரஸு மிகவும் பயந்து கொண்டு வந்தாள். அவள் முகத்தில் சாந்தம் நிலவியது. அவள் மூன்றாவது வீட்டுக் குழந்தை. அவள் தகப்பனார் ஒரு ஏழைக் குமாஸ்தா. சீட்டிப் பாவாடையானாலும் சுத்தமாய்க் கட்டியிருந்தாள். முகத்தை வாசனைப் பொடிபோட்டுத் தேய்த்துக் கழுவி, சாந்துப் பொட்டு இட்டுக் கொண்டிருந்தாள். தலையில் கொஞ்சம் மல்லிகைப் புஷ்பம் கட்டியிருந்தாள். முகத்தில் பவுடரோ 'ஸ்நோ'வோ போடவில்லை. அதற்கெல்லாம் அவள் தாயாரிடம் பணம் கிடையாது. ஆனால் சரஸுவிடம் குணம் என்பது அளவுக்கு மிஞ்சி இருந்தது. ஒரு பொய்கூடச் சொல்ல மாட்டாள். தன் பெற்றோரின் ஏழைமையை அந்தச் சிறிய வயதிலேயே அறிந்து கொண்டு தன் தாயாருக்கு அளவற்ற உதவி செய்து வந்தாள். பள்ளிக்கூடத்துப் பாடங்களையும் நன்றாகப் படிப்பாள். ஒருவருடனும் சண்டை போட மாட்டாள்.

"சரஸு! உனக்குத்தான் இந்தப் போட்டியில் முதல் பரிசு! நீதான் எல்லாரையும்விடச் சுத்தமாகவும் மணமுமாக இருக்கிறாய்!" என்று சொல்லி, 'சக்கரவர்த்தித் திருமகன்' என்ற புத்தகத்தையும் ஒருஅழகான செண்ட் புட்டியையும் ரமாவிடம் கொடுத்து, அவளுக்குக் கொடுக்கச் சொன்னார்.

குழந்தை சரஸு அவைகளை மிகவும் வணக்கத்துடன் பெற்றுக் கொண்டு சரஸ்வதியின் படத்துக்கும் தாத்தாவுக்கும் நமஸ்காரம் செய்தாள்.

'குழந்தைகளே! வாசனையென்பது வெளியில் பூசிக்கொள்வதினால் மட்டும் ஏற்படவில்லை என்பதை உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கத்தான் இந்தப் போட்டியை ஏற்படுத்தினேன். தேகத்தின் மேல் இருக்கும் அழுக்கைக் கழுவுவது போல் உங்கள் மனத்தையும் கழுவி, சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். அப்படியென்றால், பொய் சொல்லாமல் முதலில் இருக்க வேண்டும். தப்பு செய்தாலும் பரவாயில்லை. தாயாரிடம் ஒப்புக் கொண்டு மன்னிப்பு கேட்டுவிட வேண்டும். நீங்கள் ஒருவரோடொருவர் அன்புடன் பழக வேண்டும். பொறாமை என்பதை அழித்துவிட வேண்டும். அப்பொழுது மிகவும் வாசனையுள்ளவர்களாக இருப்பீர்கள்" என்று சொன்னார்.

குழந்தைகளுக்கு சந்தோஷம் ஏற்படுவதற்காக, எல்லோருக்கும் கதை புஸ்தகங்களும் சோப்பு, செண்ட் முதலியவைகளும் கொடுத்தார்.

குழந்தைகள் சந்தோஷத்துடன் தாத்தாவை நமஸ்கரித்து, சமர்த்தாய் இருப்பதாக வாக்களித்து விட்டுச் சென்றார்கள்.

"தாத்தாவுக்கு அல்ல மூளைக் கோளாறு! நமக்குத்தான்" என்று சொல்லிக் கொண்டார்கள் பெற்றோர்கள்!






'அரட்டை'ப் பத்திரிகையின் தலைமை ஆசிரியர் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு தீவிர யோசனையில் ஆழ்ந்திருந்தார். அவர் தீவிர யோசனையில் ஆழ்ந்திருந்தார் என்பதற்கு அத்தாட்சி அவர் காலடியில் குவிந்திருந்த சிகரெட்டு அடித்துண்டுகளும், அவரது திருமுகத்திலிருந்து, ஸ்ரீமகாவிஷ்ணு ஏவிய சக்கரம்போல், அடுக்கடுக்காக வெளி வந்த புகை வளையங்களும்தான்.

'அரட்டை'ப் பத்திரிகையின் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் அல்டாப் அவர்கள்தான். அதன் முக்கிய ஆசிரியரும் அவர்தான். அதன் துணை ஆசிரியரும் அவரே; அதன் உதவி ஆசிரியரும் அவரே; அதன் உதவிதுணை ஆசிரியரும் அவரே. அதன் உப ஆசிரியக் குழுவும் அவரே.

'அரட்டை'ப் பத்திரிகை வெற்றிகரமாக நடந்துவந்து, லக்ஷத்துக்கு மேல் பிரதிகள் அச்சாகி, விநியோகிக்கப்பட்டு, ஜீரணிக்கப்படுகிறதென்றால் அதற்குக் காரணம் ஸ்ரீ அல்டாப் அவர்கள் தலைமுதல் கால் வரையில், மேற்கூறியபடி சகல பொறுப்புகளையும் ஏற்றுத் திறமையாக நிர்வகித்து வந்ததுதான். முகப்புப் படம், தலையங்கம், தலைப்பு, இடைப்பகுதிகள், நடுப்பக்திகள், அந்திமக் குறிப்புகள் எல்லாவற்றிலும் ஸ்ரீ அல்டாப் அவர்களின் கைவரிசைகளும் அடிச்சுவடுகளும் காணப்பட்டன.

இப்படித் துணிகரமாகப் பத்திரிகைத் தொழில் கோலையில் ஸ்ரீ அல்டாப் ஈடுபட்டிருக்கமாட்டார்—தானாக. அவரை இந்தப் புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபடும்படி தூண்டி, பக்கபலமாக, நின்று, கையாளாகப் பணி புரிந்து, அவருக்கு இன்றியமையாத உயிர்த்தோழராக நின்றவர் அவரது அத்யந்த, அந்தரங்க, விசுவாச, விசேஷ நிருபர் திருவாளர் கப்ஸாதான். திரு கப்ஸா இல்லாதிருந்தால் 'அரட்டை' அன்றைக்கே ஓய்ந்திருக்கும். 'அரட்டை'க்கு ஆணிவேராகத் திரு கப்ஸாவின் விசேஷப் பத்தி அமைந்தது.

அதற்குத் தினந்தோறும், எங்கெங்கோ ஓடியாடிச் சென்று, தோண்டி, ஊற்றெடுத்துத் தண்ணீர் மொண்டு வந்து, வார்த்துப் பேணி வளர்க்கும் பொறுப்பு திரு கப்ஸாவின் பிரத்தியேக உரிமை. கப்ஸா தன் மூட்டையைக் கொண்டு வந்து அவிழ்த்துக் கொட்ட வேண்டியது. அல்டாப் அலசிப் பார்த்து உருக்கொடுத்து மெருகேற்றி அச்சுக் கோத்து மெஷினில் ஏற்ற வேண்டியது.

ஆகவே, ஸ்ரீ அல்டாப்பும் திரு கப்ஸாவும், ஆலும் வேலும் போல், அரசும் வேம்பும் போல், கம்பும் கோலும்போல், சதையும் தோலும்போல், ஒருவர்க்கொருவர் தத் தம் தனி சாமர்த்தியத்தைப் புனைந்து பின்னி முறுக்கேற்றி 'அரட்டை' மூலம் சமர்ப்பித்து வந்தார்கள்.

* * *

அரட்டையின் பிரதாபம் வடதுருவம் முதல் தென்துருவம் வரையில் எட்டியிருந்தது என்றால் மிகையாகாது.

எவரெஸ்டை எட்டிப் பிடித்த டென்ஸிங் என்ன செய்திருப்பார், அரட்டை இல்லாதிருந்தால்? அந்த எவரெஸ்ட் உச்சியில் குளிர் காய்வதற்காக அவர் பையில் போட்டுக் கொண்டு போன 'அரட்டை' இல்லாதிருந்தால் தெரிந்திருக்கும்; அரட்டையிருந்ததோ அதைப் பற்ற வைத்துச் சூடாகத் தேநீர் போட்டுச் சாப்பிட முடிந்தது.

ஹில்லரி மட்டும் என்ன? தென் துருவத்தில் சமீபத்தில் என்ன செய்தார்? அவருடைய சிகரெட் 'லைட்டரி'ல் உள்ள திராவகம் குளிரில் உறைந்து விட்டது; உடனே கடச்சட அன்று கிடைத்த 'அரட்டை'யைப் பற்ற வைத்துத் தான் சிகரெட் பற்ற வைக்க முடிந்தது.

வடதுருவத்தில் நடந்தசங்கதி உங்களுக்குத் தெரியுமா? ஸோவியத் ஆராய்ச்சி நிபுணர் டாக்டர் ரோவிச் கப்ரோஸ்கி அரட்டை இல்லாமல் ஒருகணம் கூடத் தமது ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தி இருக்க முடியாது. அவர் கைக்குட்டை யை மாஸ்கோவில் மறந்து வைத்து வந்து விட்டார். கை துடைத்துக் கொள்ள அரட்டை உதவியது போல் அவர் கைக்குட்டை கூட உதவியிருக்காது. இன்று ஸ்புட்னிக் நெ. 2 வான மண்டலத்தில் சுற்றுகிறதென்றால் (இன்னும் சுற்றுகிறதா பாருங்கள்!) அதற்கு அரட்டைதான் காரணம். 'அரட்டை' இல்லாதிருந்தால் டாக்டர் ரோவிச் கப்ரோஸ்கி கை துடைத்திருக்க முடியாது; அவர் கை துடைத்திருக்கா விட்டால், அவரது விஞ்ஞானக் கண் திறந்திருக்காது; அவரது விஞ்ஞானக் கண் திறந்திருக்காவிட்டால் ஸ்புட்னிக் நெ. 2-க்கு வானவீதி திறந்திருக்காது. இது வெறும் அரட்டையல்ல; அளப்பல்ல; கலப்பல்ல; உண்மை கலக்காத அப்பட்டமான கப்ஸாதான். ஆம்! இதைப் பற்றி அவரையே கேட்டுப் பாருங்கள்! நீங்கள் அப்படிக் கேட்பதற்குச் சங்கோஜப்பட்டால் திரு கப்ஸாவே, ஸ்புட்னிக் நெ. 2 விஷயத்தை அடுத்த 'அரட்டை' புத்தாண்டு மலருக்கு, பலவிதமான பிறவிகளையும் கேட்டுத் தெரிந்து, கடைந்தெடுத்து வெண்ணெய் போல் உருட்டிக் கொடுத்திருக்கிறார். அதைக் கீழே தருகிறேன். படித்துப் பாருங்கள்.

* * *

கீட்ஸா தமது விசேஷ ஆராய்ச்சிப் பேட்டியில் முதலில் கண்டவர் அமெரிக்க அரசியல் தத்துவஞானி மிஸ்டர் மட்ஸ். அவர் பேட்டியில் கூறியதாவது:

"ஓ! ஸ்புட்னிக் டுவோ? ஸோவாட்? பூ!"

அமெரிக்காவின் ஆகாயக்கோட்டை நிபுணர் புஸ்வாணஸன்: "ரஷ்ய ஸ்புட்னிக் நம்பர் டூதானே! 'ஹே! அமெரிக்க 'புஸ்புஸ்' இது வரை ஆறு செய்து ஓசைப்படாமல் பிசுபிசுத்ததே! ஹெ ஹே ஹே!"

அமெரிக்க விஞ்ஞானி புரொபஸர் டென்டர் ஹெட்: "ஹூம்! இந்த ஸ்புட்னிக் நெ. 2 எத்தனை நாள் சுற்றும் பார்க்கலாம். அது கீழே எரிந்து விழுந்ததும்தான் நம்முடைய ஸைபர் டூபர் வானசஞ்சார ரகசியத்தைப் பறக்க விடுவோம்."

அமெரிக்க பிரஜை ஜான்ஸ்மித்: "ஓகே டோக்."

பிரிட்டிஷ் வர்த்தகர்: "நம்ம சாம்ராஜ்ய மார்க்கெட்டெல்லாம்தான் இந்தப் பூமியிலே நாசமாகப் போய் விட்டது. புதுக் கிரகங்களிலேயாவது போய் நாம் கடை வைக்க இது சாதகமாகும் என்று நம்புகிறோம். முதன் முதலில் சந்திர மண்டலத்தில் 'செயின் ஸ்டோர்' ஆரம்பிக்கலாம்."

பிரிட்டிஷ் ராஜதந்திரி: "அமெரிக்காவும் ரஷ்யாவுடன் போட்டி போட்டால்தான் நல்லது. இரண்டு கிரகங்கள் மோதிக் கொண்டால் அதைவிட நல்லது."

ரஷ்யாவின் பூலோக உபகிரகங்கள்: "பேஷ்! பேஷ்!"

ரஷ்யாவின் தலைவர்கள், தலைவிகள், தலையில்லாதவர்கள், குழவிகள், பெருமக்கள் (காம்ரேட் குருஷேவ் குரலில் பலமாக): "குஷியோவ்!"

ஸ்புட்னிக் 2-ல் இருந்த லைகாவின் ஆவி, "ஊ...ஊ...ஊ...ஊ...ஊங்..."

லைகாவின் காதலன் மைகா: "ளொள், ளொள், ளொள்!"

நாய் உலக மகாநாடு: "வவ் வவ்வவ் வவ்!"

இந்தியாவில் ஒரு தலைவர்: "உலகம் முன்னேறுகிறது! விஞ்ஞானம் வளர்கிறது! ஸ்புட்



னிக் பறக்கிறது! நாமோ! நின்ற இடத்தில் நின்று கொண்டிருக்கிறோம்!"

மற்றொரு தலைவர்: "ஸ்புட்னிக்கின் நாயைத் திணிப்பது, இந்தியைத் திணிப்பது போல் தான்!"

ஒரு தீவிர மொழிவாதி: "ஸ்புட்னிக் என்பதே அன்னிய மொழி. அதை விளம்பலாகாது; அதைக் கண்ணெடுத்தும் பார்க்கலாகாது, ஸார்!"

ஒரு தீவிர தேசபக்தர்: "நம் நாட்டின் எல்லை செயற்கைக் கிரகம் மட்டுமல்ல, இயற்கை சந்திர சூரிய மண்டலங்களையே தாண்டிச் செல்கிறது. அந்தக் கிரகங்களை நம் நாட்டுடன் இணைத்தால்தான் நம் அன்னையை நாம் காப்பதாகும்."

அரசியல்வாதி(சட்டசபையில்): ''இந்தியாவில் இதுவரை ஏன் ஸ்புட்னிக் செய்ய முடியவில்லை என்பதற்கு வான உலக மந்திரியார் தக்க காரணம் கூற முடியுமா?''

சட்டசபைத் தலைவர்: ''இந்தக் கேள்வி இந்தச் சபை லோகத்துக்கு அப்பாற்பட்டது. ஆகையால் இதை அனுமதிக்க முடியாது.''

அடுக்கம்பலவாணர்: ''இயற்கையைச் செயற்கையில் வெல்லுகிறான் அன்னியன்; நாமோ? தயக்கத்தினால் மயக்கமடைகிறோம். வானத்திலே தொலைவு கரைகிறது; பூமியிலே நினைவு மறைகிறது. ஆகாயத்திலே சந்திரன் நெருங்குகிறான்; பூலோகத்திலே தந்திரம் மந்திரமாகிறது!''



வான சாஸ்திரி வாஞ்சிநாத்: ''வானத்தில் காணப்படும் அந்த விசித்திர ஒளி ரஷ்யாவின் ஸ்புட்னிக்குமல்ல. அமெரிக்காவின் புஸ்புஸ்ஸாமல்ல. பனியும் புகையும் சேர்ந்து மேகம் போல் ஒளி வீசுகிறது. அவ்வளவு தான்!''

பஞ்சாங்க சாஸ்திரி பஞ்சாபகேச தீக்ஷிதர்வாள்: ''இந்த மாதிரி உலகத்திலேயிருந்தே புதுசு புதுசா கிரகசாரங்கள் ஏற்பட்டால் அடுத்த வருஷத்துப் பஞ்சாங்கத்துலே புதுசா கிரகணங்களையும் சேர்க்க வேண்டியதுதான்......''

புரோகிதர் மந்திரேசுவர சாஸ்திரி: ''பேஷா சேருமே ஐயா! சேர்ந்தா நல்லது தான்! கிருகசாந்தி செய்தால் எல்லாருக்கும் நல்லதுதானே! நமக்கும் அதனால் பிரயோசனம் உண்டு!''

பிரபல (ஸினிமா) நக்ஷத்திரம்: ''செயற்கைக் கிரகத்துலே ஏறிச் சந்திரமண்டலத்துலே போய், நந்தவனம் ஸீன்லே, நீராழி மண்டபத்திலே, இயற்கை எழிலுடையிலே நடனமாடிச் சந்திரகாந்தனை வசியப்படுத்தற 'அவுட் டோர்' ஸீன்லே ஆக்ட் பண்ணச் சொன்னால் நான் ரெடி ஸார்! அந்த ஸீனை இப்பவே எடுத்துடலாம் ஸார்!''

டைரக்டர் டமாரம் (ஸீன் ஜோடனை டைரக்டரிடம்): ''அடுத்த ஸெட் சந்திர மண்டலம். கதாநாயகனும் கதாநாயகியும் ஸ்புட்னிக் காஸ்ட்யூம்லே ஒருத்தரை ஒருத்தர் சுற்றிச் சுற்றி வந்து டான்ஸ். கலர் ஸீக்வன்ஸ் புகைப் படலம்......''

* * *

ஆசிரியர் அல்டாப் திஷ்டை கலந்து புகைப்படலத்திலிருந்து வெளியேறி, நிமிர்ந்து உட்கார்ந்தார். ஒரு தடவை தம் நெற்றியைத் தடவி விட்டுக் கொண்டார். கையை ஒரு தரம் சொடுக்கினார். ''ஐடியா!'' என்ற ஏக வசனம் அவர் திருவாயிலிருந்து மலர்ந்தருளியது. 'அரட்டை' அடுத்த இதழ், நவீன 'கிரக'ச்சார விசேஷ மலராக மிளிர்ந்து திகழ்ந்தது. எண்பத்து ஆறு பக்கங்கள் அடங்கிய இந்த விசேஷ மலரில், ''ஸ்புட்னிக் ஆராய்ச்சி'' ''புது கிருகபலன்'' போன்ற பல விசேஷ கட்டுரைகளுடன் மேலே கண்ட கப்ஸாவின் பேட்டி விவரங்களும், சித்திரப் படங்களுடன் கண் கொள்ளாக் காட்சியளித்தது. அதில் எழுபத்தெட்டு பக்கங்கள் ''ஸ்புட்னிக் ரஸாயன லேகியம்'' ''ஸ்புட்னிக் டிரெஸ்கள்'' ''ஸ்புட்னிக் ஹல்வா'' ஸ்புட்னிக்டானிக்'' போன்ற பல விளம்பரங்களாலும், இன்னும் ''சந்திரதாரா'' ''பூனை பிடித்தவனின் கிரகச்சாரம்'' ''சுற்றிச் சுற்றி வந்தாலும் பழைய கிரகம் தான்'' ''லைகாவும் அவள் காதலன் மைகாவும்'' போன்ற ஸினிமாப்பட விளம்பர விமரிசனங்களாலும் அலங்கரிக்கப் பட்டன.

'அரட்டை' விசேஷ மலர்ப் பிரதிகள் அத்தனையும் வந்த அன்றைக்கே கடகட அப்படியே தீர்ந்து போய் விட்டதில் சிறிதும் ஆச்சரியமில்லை.

## அதன் மதிப்பே அலாதி ✳

நியூ ஷொராக்கின்

# பாப்லின்

வெண்மையான, கலருள்ள மற்றும் கோடிட்ட துணிகள்

நன்கு புகழ் பெற்ற பிராண்டுகளில் கிடைக்கின்றன —

பிளாட்டிக்னம் டச்




தி நியூ ஷொராக் ஸ்பின்னிங் அண்ட் மான்யுபாக்சரிங்
கம்பெனி லிமிடெட், நடியாட்.

SISTA'S-NS-14-TAM




சிங்கள ராஜவம்சத்தின் முதல் வனை விஜயன் சந்ததியில் வழி வழியாக வந்த புத்ததாசன் பட்டத்து யானையில் பவனி வந்து கொண்டிருந்தான்.

நகர எல்லையைத் தாண்டிச் சிறிது தூரம் சென்றதும் ராஜ பவனி ஒரு திருப்பத்தை யடைந்து தென் திசையில் திரும்பியது. திரும்பியதுதான் தாமதம்; எதிரே பிரும்மாண்டமான கடலெறிவைப் போல் தீசவாவி என்ற தடாகம் மன்னன் திருஷ்டியில் விழுந்தது. 'ஆஹா! நிர்மலமான நீரைத் தாங்கி நிற்கும் அந்தத் தடாகத்தின் பெருமைதான் என்னே! அதைக் கண்ட மாத்திரத்தில் மனத்தடத்தில் மோதும் எண்ண அலைகள்தான் எவ்வளவு!'

இலங்கையில் முறையான சிங்கள ராஜ்யத்தை ஸ்தாபித்த பெருமை விஜயன் என்ற இந்தியச் சிற்றரசனைச் சேர்ந்ததென்றாலும் முறையாக முடி சூட்டிக்கொண்ட முதல் மன்னன் தேவனும்பியதீசன் என்பவனாகும். அசோகன் காலத்தில் இலங்கையை அரசாண்ட தேவனும்பியதீசன் அசோகனின் ஆத்மார்த்தமான மானசீக நண்பன். அந்த நண்பனுக்கு வேத சாஸ்திரப் பிரமாணங்களின்படி முடி சூட்டு விழாவை நடத்த மணிமுடி, முத்தும் மணியும் வைத்து இழைத்த உடைவாள் முதலான சகல ராஜ விருதுகளையும் பாடலீபுரத்திலிருந்து அசோகன் அனுப்பி வைத்தான். அதோடு வேத சாஸ்திரங்களைக் கரைகண்ட சில அந்தணர்களையும் அனுராதபுரிக்கு அனுப்பி வேதப் பிரமாணங்களின்படி தேவனும்பியதீசனுக்கு முடிசூட்ட அசோகன் ஏற்பாடு செய்தான்.

இதற்கு இரண்டரை நூற்றாண்டுகளுக்கு முன்னரே இலங்கையில் முடியாட்சி ஏற்பட்டு விட்டதென்றாலும் முறையான முடியாட்சி தேவனும்பியதீசன் காலத்திலிருந்து ஏற்பட்டதாயும் இதை ஆரம்பித்து வைத்த பெருமை அசோகனுடையதென்றும் சிங்கள வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவர்.

இலங்கையில் பௌத்த மதத்தை முதல் முதலாகப் பரப்பியதும் இதே தேவனும்பிய தீசன்தான். அவன் வெட்டிய தீசவாவி என்ற பிரும்மாண்டமான தடாகத்தைப் பார்க்கும் பொழுது சிந்தனை சரித்திர வரலாற்றில் புரண்டோடுவது இயற்கைதானே!

தீசவாவியைக் கண்டவுடன் மன்னனுக்கு அதில் நீந்தி விளையாட வேண்டும் போலிருந்தது. பொசுக்கும் வெய்யிலும் அவனுடைய ஆவலைத் தூண்டி விட்டதென்று கூற வேண்டும். யானையிலிருந்து இறங்கி மளமளவென்று வாவியை நோக்கிப் புத்ததாசன் நடக்கவே மற்றவர்களும் கால் நடையாக அவனைப் பின் தொடர்ந்தார்கள்.

வாவியின் அருகில் ஒரு பெரிய பாம்புப் புற்று. சுமார் இருபது அடி தூரத்திலிருந்து அந்தப் புற்றைக் கவனித்த மன்னன் திடுக்கிட்டு ஒரு கணம் நின்றான். பிறகு வாவியை நோக்கிச் செல்லுவதற்குப் பதிலாக அந்தப் பாம்புப் புற்றை நோக்கி அவன் மெதுவாக நடந்தான். இதற்குள் மன்னன் செய்யப் போகும் ஆபத்தான காரியம் மந்திரிகளுக்குப் புரிந்து விட்டது.

''அய்யய்யோ, மகாராஜா! நில்லுங்கள். தயவுசெய்து புற்றின் அருகில் போகாதீர்கள்'' என்று கூக்குரலிட்ட வண்ணம் அவர்கள் வேகமாக ஓடி வந்தார்கள்.

மன்னனோ முன் வைத்த காலைப் பின்வாங்கத் தயாராயில்லை. திரும்பிக்கூடப் பாராமல், ''ஏன் என்னைப் பாம்பு தீண்டி விடுமென்று பயப்படுகிறீர்களா?'' என்று கேட்டான்.

''அசட்டுத் துணிச்சல் ஆபத்தானது மன்னவா? பகுத்தறிவற்ற பாம்புக்கு நல்லவர், கெட்டவர் என்ற பாகுபாடு தெரியாது. பாம்புக்குப் பால் வார்த்தவன் கதையைக் கேட்டதில்லையா? தயவுசெய்து திரும்பி விடுங்கள்'' என்றனர் மந்திரிகள்.

அவர்கள் முறையீடு மன்னன் காதில் ஏறவில்லை. ''பாம்பு தீண்டிப் பிராணன் போக வேண்டுமென்று என் தலையில் எழுதியிருந்தால் அதைத் தடுக்க நீங்களும் நானும் யார்? பணி செய்வது நம் கடன். பலன் கொடுப்பது இறைவன் பொறுப்பு!'' என்று சொல்லிக் கொண்டே புற்றை நெருங்கினான்.

புற்றுக்கு வெளியில் பார்த்த மாத்திரத்தில் மனத்தைப் பதைபதைக்கச் செய்யும் ஒரு பெரிய சர்ப்பம் முதுகுப்புறமாகக் குப்புறக் கிடந்தது. அதன் நடு வயிற்றிலே ஒரு பெரிய கட்டி. சிறிய புற்றுக்குள் நுழைய முடியாதபடி பெரிதாக வீங்கியிருந்த கட்டியின் வேதனை தாளாமல் துவண்டு துவண்டு சர்ப்பம் துடித்துக் கொண்டிருந்தது. அதைக் கண்டதும் மன்னனின் கருணையுள்ளம் கசிந்தது. எப்பொழுதும் எங்கு சென்றாலும் கூடவே எடுத்துச் செல்லும் மருந்துப் பெட்டியை அவன் திறந்தான். சஸ்திர சிகிச்சைக்குரிய உபகரணங்களை வெளியிலெடுத்துக் கொண்டு சர்ப்பத்தை நெருங்கினான்.

அடுத்த கணம் என்ன நடக்குமோ என்று அஞ்சிய மந்திரிகளுக்கு மன்னனைத் தடுக்கத் துணிவில்லை. அவர்கள் செயலற்றுப் போயிருக்கையில் புத்ததாசன் சர்ப்பத்தின் முன்னால் இரு கரங்களையும் குவித்து நின்றுகொண்டு, ''நாகராஜா! உன் வேதனையைப் பார்த்துக் கொண்டு என்னால் போகமுடியவில்லை. உன்னைத் தீண்டிச் சிகிச்சை செய்யவும் பயமாயிருக்கிறது. சற்றே பெரிய மனம் வைத்து உதவ மாட்டாயா?'' என்று வேண்டினான்.

மனிதர்களுக்கு உள்ள நுண்ணறிவு சர்ப்பங்களுக்கும் உண்டு என்பார்கள். அரசனின் அகண்ட மகா சமுத்திரத்தைப் போன்ற



கருணை உள்ளத்தையும் அவன் கோரும் உதவியையும்' சர்ப்ப ராஜன் புரிந்து கொண்டிருக்க வேண்டும். சர்ப்பம் கொஞ்சம் கொஞ்சமாக வேதனையுடன் நகர்ந்து வயிற்றிலிருந்த கட்டி மாத்திரம் வெளியே தெரியும் படி புற்றுக்குள் பாதி உடலை நுழைத்துக் கொண்டது.

ஆச்சரியமும் ஆனந்தமும் கொண்ட அரசன் தனது மந்திரிகளைப் பார்த்து, ''பாம்பின் நல்லறிவைப் பார்த்தீர்களா?'' என்று சொல்லி வியந்தான். பிறகு பாம்பின் வயிற்றைக் கீறிக் கட்டியை அப்புறப்படுத்தி மருந்து வைத்துக் கட்டினான்.

சஸ்திர சிகிச்சை பாம்பின் வேதனையை ஓரளவு குறைத்திருக்க வேண்டும். சிகிச்சை முடிந்ததும் பாம்பு புற்றிலிருந்து வெளியே வந்து தலையைத் தூக்கி நன்றி தெரிவித்தது. நன்றியின் அடையாளமாக ஒரு நாகரத்தி னத்தை அது கக்கியது. அந்த ரத்தினம் அங்கிருந்தவர்களின் கண்களை கூசச் செய்தது.

''விலைமதிக்க முடியாத இந்த நாகரத்தினம் பகவானுக்கு அர்ப்பணிக்கப்பட வேண்டியது. அபய உத்திர விஹாரையிலிருக்கும் புத்த பகவானின் கண்களில் ஒன்றிலே இதைப் பதித்து விடுங்கள்'' என்று புத்ததாஸன் உத்தரவிட்டான்.

இந்த அற்புதத்தைச் செய்த புத்ததாசன் இலங்கையிலே புத்தபகவானின் புனித தந்தத்தைப் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ கீர்த்தி ஸிரிமேக வர்ணன் என்ற மன்னனின் சகோதரர் புத்திரனுவான். பண்பட்ட வாழ்க்கைக்கு மனத் தூய்மை மட்டுமிருந்தால் போதாது; உடல் தூய்மையும் இன்றியமையாததென்பது அவன் சித்தாந்தம். உள்ளத் தூய்மைக்கு ஆத்மீகத் துறையில் அவன் எவ்வளவு ஈடுபாடுடையவனாக இருந்தானோ, அதேபோல் உடல் தூய்மைக்கு வைத்திய சாஸ்திரத்தை அவன் கரைகண்டவனாகவுமிருந்தான். தனது அறிவைப் பலருடனும் பகிர்ந்து கொள்ள நூற்றுக்கணக்கானவர்களுக்கு மருத்துவத்தை முறையாகப் பயிற்றுவித்துக் கிராமங்கள் தோறும் வைத்தியசாலைகளை ஏற்படுத்தினான்.

வைத்திய முறைகளைச் சகல ஜனங்களும் தெரிந்து கொள்ள எளிய நடையில் 'ஸார அர்த்த சங்கிரஹம்' என்ற ஒரு வைத்திய நூல் அவன் எழுதினான். சிங்கள மொழியில் முதன் முதலாக எழுதப்பட்ட இந்த வைத்திய நூல் இன்றைக்கும் சிங்கள நாட்டு வைத்தியர்களால் விலைமதிப்பற்ற பொக்கிஷமாக மதித்துப் போற்றப்பட்டு வருகிறது.

இது மாத்திரமல்ல; மண்டலம் ஆளும் மன்னனே ஒரு சாதாரண வைத்தியனைப்போல நோய் நொடியென்று வருகிறவர்களுக்கெல்லாம் தன் கையினாலே சிகிச்சை செய்வதென்றால் வைத்தியத் தொழிலுக்கு ஒரு தனிமதிப்பு ஏற்படுவது இயற்கைதானே! படைவீரர்கள் நிறைந்திருக்க வேண்டிய அனுராதபுர அரண்மனை மருந்துகளுக்கும் மூலிகைகளுக்கும் இருப்பிடமாக, ஒரு பெரிய ஆஸ்பத்திரியாக மாறியிருந்தது. கவிவாணர்களும்கலா விற்பன்னர்களும் வந்து போகவேண்டிய தர்பார் மண்டபம் நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யும் இடமாக விளங்கியது.

மன்னன் எங்கு சென்றாலும் மருந்துப் பெட்டியும் அவன்கூடவே செல்லும். ஏழை எளிய ஜனங்களின் குடிசைகளுக்கெல்லாம் அவன் நேரில் சென்று சிகிச்சை செய்வான். இதமான அவனுடைய இந்தச் சேவை இலங்கை சரித்திரத்தில் வேறு எந்த மன்னர்களுக்கும் கிடைத்திராத அளவு மக்களின் அமோகமான அன்பை அவனுக்குச் சம்பாதித்துக் கொடுத்திருந்தது.

புத்ததாஸனின் ஆச்சர்யமான வைத்திய சிகிச்சை முறைகளைப் பற்றித் தர்மகீர்த்தி என்ற பௌத்த பிக்ஷு எழுதிய சூளுவம்ச வரலாற்று நூலில் பல ருசிகரமான கதைகள் உண்டு. அந்தக் கதைகள் எவ்வளவு தூரம் உண்மையானவைகளாயிருக்க முடியும் என்பது தற்காலத்தில் சர்ச்சைக்குரிய விஷயமாயிருந்தாலும் அவை வைத்திய சாஸ்திரத்தில் புத்ததாஸனுக்கு இருந்த ஆர்வத்தையும் அக்கறையையும் குறிப்பதாகக் கொள்ளுவது சிறிதும் தவறாகாது.

ஒருசமயம் ஒரு பௌத்த பிக்ஷு பொறுக்க முடியாத வயிற்று வலியுடன் துடியாய்த் துடித்துக் கொண்டு மன்னனிடம் மருந்து கேட்க வந்தார். நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கும் பிக்ஷுவுக்கு வயிற்றில் ஏன் கோளாறு ஏற்பட வேண்டுமென்று மன்னனுக்குப் புரியவில்லை. மன்னன் குடைந்து குடைந்து விசாரித்தான். புழுக்கள் நிரம்பிய பாலைத் தானமாகப் பெற்றுப் பருகியதினால்

பிக்ஷுவின் வயிற்றில் புழுக்கள் பல்கிப் பெருகி யிருப்பதாக மன்னன் தெரிந்து கொண்டான்.

அதே சமயம் இடறி விழுந்து காயம் பட்ட ஒரு குதிரையும் சிகிச்சைக்காக வந்திருந்தது. குதிரையின் காயத்தைக் கீறி ஒரு கோப்பை உதிரத்தை எடுத்துப் பிக்ஷுவிடம் குடிக்கக் கொடுத்தான். அதைப் பிக்ஷு குடித்த பிறகு அவர் குடித்தது மருந்து அல்ல, குதிரை ரத்தம் என அவன் அறிவித்தான். இதைக் கேட்டதுதான் தாமதம், பௌத்த பிக்ஷு மனம் வருந்திக் குடம் குடமாக வாந்தி யெடுத்தார். அத்துடன் அவர் வயிற்றிலிருந்த புழுக்களெல்லாம் வெளியே வந்து விட்டன. அவர் குணமடைந்தார். குதிரையும் குணமடைந்தது. கத்தியின் ஒரே கீறலினால் இருவரை மன்னன் குணப்படுத்தினானென்று ஒரு கதை.



இன்னொரு சமயம் ஒரு ஏழை தண்ணீர்ப் பாம்பின் முட்டையைத் தெரியாமல் விழுங்கி விட்டான். அவன் வயிற்றில் முட்டை பாம்பாகி இடைவிடாமல் துன்புறுத்தி வந்தது. வயிற்றிலிருந்து கொண்டு வெளியே வர மறுக்கும் பாம்பை எப்படி அகற்றுவது? இது மன்னனுக்குப் பெரிய பிரச்னையாயிருந்தது. அம்மனிதனை ஒரு வாரம் ஜலபானமும் இன்றிப் பச்சைப் பட்டினியாக விரதம் இருக்கச் செய்தான் மன்னன். களைப்பில் வாயைத் திறந்துகொண்டு அம்மனிதன் மெய்மறந்து உறங்குகையில் ஒரு இறைச்சித் துண்டை அவன் வாய்க்கு நேரே கட்டித் தொங்க விட்டான். ஒரு வாரமாகப் பட்டினி கிடந்த பாம்பு இறைச்சி வாசனையை உணர்ந்து, தூங்கும் மனிதனின் வயிற்றை விட்டு வாய் வழியாக மெதுவாக வெளியே வந்தது. மன்னன் சரேலென்று அதைப் பற்றி வெளியே வீசி யெறிந்தான்.

இன்னொரு நாள் தவளை முட்டை ஒரு மனிதனின் நாசி வழியாக மண்டையோட்டுக்குள் புகுந்து தவளையாக உருவெடுத்தது. மழைக் காலங்களில் அவன் தலைக்குள்ளிருந்த தவளை ஓயாமல் கத்தி உபத்திரவம் செய்து வந்தது. இதையறிந்த அரசன் அம்மனிதனின் மண்டையோட்டைப் பிளந்து தவளையை அப்புறப் படுத்தி மனிதனையும் குணப்படுத்தினான்.

இவ்விதம் வைத்தியம், ரணசிகிச்சை ஆகிய வற்றிலெல்லாம் ஜீவகன் என்ற இதிகாச வைத்திய மகாமேதைக்கு நிகரான திறமையுடன் புத்ததாசன் விளங்கியதாகப் புராதன பாலி வரலாற்று நூல்கள் கதை கதையாகச் சொல்லுகின்றன.

நோய் நொடி, மூப்பு, மரணம் ஆகியவைகளைக் காணச் சகியாமலே சித்தார்த்தர் வாழ்வை வெறுத்தார். இரவோடு இரவாக மனைவியும் மகனும் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுது சொல்லாமல் கொள்ளாமல் அரண்மனையை விட்டு வெளியேறினார். துறவறத்தை மேற்கொண்டு பல காலம் கடுந்தவம்இயற்றி ஆன்மீக ஒளி பெற்றுப் புவியோரால் புத்தர் என்று போற்றப் பட்டார். புத்த தாசனோ நோய் நொடிகளைக் கண்டு பயந்து வாழ்க்கையை வெறுக்கவில்லை. துறவறத்தைமேற்கொள்ளவுமில்லை. இதற்கு மாறாக, பிரார்த்தனைக் கூடங்களையும் வைத்திய சாலைகளையும் ஸ்தாபித்து பிரஜைகளின் உளத் தேவையையும் உடல் தேவையையும் பூர்த்தி செய்து ஆத்மீகத்தையும் ஆரோக்கியத்தையும் ஒருங்கே வளர்த்தான். வாழ்க்கையின் துன்பங்களுக்கு அஞ்சி ஓடாமல் இல்லறத்தில் எவ்வளவு தூரம் அவன் ஈடுபாடுடையவனாயிருந்தானென்பதற்கு அவனுடைய சந்ததிகளை ஒரு உதாரணமாகச் சுட்டிக் காட்டுவது வழக்கம். அவனுக்குப் பல மனைவிகளும் திடகாத்திரமான எண்பது பிள்ளைகளும் இருந்தார்கள். இந்த எண்பது பிள்ளைகளுக்கும் புத்தர் பிரானின் முக்கிய சீடர்களான எண்பது பேர்களின் பெயர்களை அவன் வைத்திருந்தான். இருபத்தொன்பது ஆண்டுகள் வரையில் நல்லாட்சி நடத்திவிட்டுப் புத்ததாசன் இயற்கையை எய்திவிடவும் அவனுடைய மூத்த மகனான உபதிஸ்ஸன் பட்டத்துக்கு வந்தான்; அன்று முதல் சதிகளும் சூழ்ச்சிகளும் அவைக்களத்தில் தலை யெடுத்தன. இலங்கை அரசியலிலும் ஒரு புதிய பெரிய திருப்பம் ஏற்பட்டது.



# கனிவுடைமையே பண்புடைமை

பஸ் பிரயாணிகள் பல ரகம். ஜன்னலருகே உட்கார்ந்து பல காட்சிகளைக் கண்டு ஆனந்திக்கும் குழந்தை; வேலை தேடும் தாபத்துடன் செல்லும் யுவர், யுவதிகள்; கலியாண மோகத்தில் மூழ்கும் இளம் தம்பதிகள். இவர்கள் ஆனந்த வாழ்வில் குதூகலிப்போர்கள்.

மற்றொருபுறம் வயோதிகர்களும், பிணியால் வாடும் தங்கள் உறவினரைப் பார்க்கத் துடிப்போர்களும். சுக துக்கங்களில், பஸ் பிரயாணம் இவ்வாறு இழைந்திருக்கிறது.

"அப்பனே, திருச்சிக்கு எப்பதாம்பா போய்ச் சேருவோம்?" என்று கண்டக்டரை அடுத்து-அடுத்து கேட்டுக்கொண்டே வந்தாள் அந்தப் பாட்டி. "அப்பனே, என் பேரன் சீக்கா யிருக்கிறான். ஊருக்குப் போக இன்னும் எவ்வளவு நேரந்தானாகும்பா, சொல்ல மாட்டியா?" என்று மீண்டும் அவள் கேள்வி எழுந்தது. இந்த பஸ் இன்னும் வேகமாகப் போகாதா என்பது போன்று பாட்டி குரல் ஒலித்தது.

"பாட்டி, கவலைப்படாதிங்க; இன்னும் ஒரே மணி நேரத்துக்குள் திருச்சி சேர்வோம். நம்ம சின்னதுரையை உங்க வீட்டுக்கு வழிகாட்ட வேண்டி யிருக்கேன்" என்றார் கண்டக்டர். வினயமும் அன்பும் கலந்த இப்பதில் பாட்டியை மனங்குளிரச் செய்தது. இவ்வித உருக்க மான அனுபவங்களே எங்கள் வாழ்க்கை.

பஸ்கள் பல ஓட்டுகிறோம். 41,929 மைல்கள் பிரயாணிகளைக் கொண்டு செல்கிறோம். ஆயிரக்கணக்கான நபர்களுக்கு ஊழிய, ஊதிய வசதி யளிக்கிறோம். இவை பெருமைப்படக் கூடிய சாதனைகளே. ஆனால் நாங்கள் போற்றுவது ஒரு பிரயாணியின் சிறப்புரையே — "டி. வி. எஸ். பஸ் கட்டணம் வாங்குவதில் மட்டும் குறியில்லை. நம்மை, அண்டை வீட்டார்போல அன்புடனும், ஆதரவுடனும் நடத்துகிறார்கள்."

வினயத்துடன், பிரயாணிகளின் சௌகரியத்தை வளர்ப்பதே எங்கள் சுபாவம்.



சதர்ன் ரோட்வேஸ்




செந்தமிழ்ச் செல்வரும் கவிஞருமான ராவ்சாகிப் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழ் மக்களுக்கு அளித்துச் சென்ற கருத்துப் பொதிந்த கருவூலம் போன்றது மனோன்மணி; மேடையில் நாடகமாக நடிப்பதற்கு ஏற்ற நல்ல கதைப்போக்கும் உத்திகளும் கொண்டது. கனவிற் கண்ட காதல் கனவாகப் போய் விடாமல், நனவில் உருப்பெற்று, உரம் பெற்று, கடைசியில் பூர்த்திபெறும் உன்னதமான கதை. அக்கவினுறு காவிய நாடகத்தை நயமிகு தமிழ்க் கவிதையில் இயற்றியவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள். அக்காவியத்தின் அருமையும் பெருமையும் அறியாத தமிழ் மக்களே இல்லையெனலாம்.

ஜீவக பாண்டியனின் மகள் மனோன்மணி; அவள் கனவிற் கண்ட காதலன் சேர மன்னன் புருஷோத்தமன். அவனையே நினைத்து மனம் உருகுகிறாள் மனோன்மணி. புருஷோத்தமனும் அவளைக் கனவில் கண்டு காதல் கொள்கிறான். இந்தக் காதல் வெற்றி பெறுவதற்குப் பாண்டிய நாட்டு மந்திரி குடிலன் குறுக்கே நிற்கிறான்; அவன் மகன் கோழை பலதேவனுக்கு அரசிளங்குமரி மனோன்மணியைமணம் முடித்துவைக்க முயல்கிறான். அதற்காக அவன் செய்யும் சூழ்ச்சிகள் பயங்கரமானவை. மனோன்மணியின் குருநாதரான சுந்தரமுனிவர் குடிலனின் சதித்திட்டங்களை யறிந்து அவைகளைத் தகர்த்தெறிய முற்படுகிறார். பாண்டியமன்னன் குடிலனின் கைப்பதுமையாகி அவன் ஆட்டி வைத்தபடி ஆடுகிறான்.



இது ஒரு சிறு கதை மாதிரி யிருந்தாலும் குழப்பம் இல்லாத கதை. சுவையுள்ள கதைப் போக்கு கொண்டது. சமீபத்தில் திருவல்லிக்கேணி தேசியப் பெண்கள் உயர்நிலைப் பள்ளியைச் சேர்ந்த கலா மண்டபத்தில் ''மனோன்மணி'' நாடகத்தை ஓ. ஏ. கே. தேவர் நாடக மன்றத்தினர் சிறப்பாக நடித்துக் காட்டினர்.

மனோன்மணியாக நடித்த எம். எஸ். ஐயா தன் பாத்திரத்தை உணர்ந்து, உருகவேண்டிய இடத்தில் உருகி, கொஞ்ச வேண்டிய இடத்தில் கொஞ்சி மிகவும் நன்றாய் நடித்தார். கள்ளமற்ற உள்ளத்துடன் தோழியிடம் காதலைப் பற்றிப் பரிகசித்த போது, மந்தஹாஸத்தோடு விளங்கிய அவர் முகம், கனவில் கண்ட காதலனை நினைந்து உள்ளம் கரைந்த போது தாங்கொணாத சோக நிலையை எய்தியிருந்தது. அத்தகைய மாறுபட்ட முகபாவங்கள் நடிகையின் திறமையை விளக்குவதற்குப் போதுமானவையா யிருந்தன.

மனோன்மணியின் தோழி வாணியாக வந்த டி. பி. காமாட்சி நன்றாய் நடித்தார்.

சேர மன்னன் புருஷோத்தமனாக வந்த ஓ. ஏ. கே. தேவர் பாத்திரத்துக்கு ஏற்ற நல்ல தோற்றமும், கம்பீரமான குரலும் கொண்டவர். பல தமிழ்ப் படங்களில் நடித்திருக்கிறார். இளமை மிக்கும் வீரத் துடிப்பும் கொண்ட அவர் நடிப்பும் பேச்சும் நன்றாயிருந்தன. பாண்டிய நாட்டு மந்திரி குடிலனின் வஞ்சகப் பேச்சைப் பொறுமையாகக் கேட்டு, திடீரென்று அவனைக் கைது செய்ய உத்தரவிட்டுப் பிறகு சுரங்கப்பாதைக்கு அவனை வழிகாட்டச் செய்து அரண்மனையில் புகுந்த காட்சியைப் பார்த்ததும் அவருக்குச் 'சபாஷ்' போடத் தோன்றியது.

மந்திரி குடிலன் பாத்திரம், இந்நாடகத்தில் மிகமிக முக்கியமான பாத்திரம். வினை விளைக்கும் வில்லன் பாத்திரம். அந்தப் பாத்திரத்தை ஏற்று எம். கே. கிருஷ்ணமூர்த்தி சக்கைப் போடு போட்டு விட்டார்.

எஸ். ஏ. ஜி. சாமி பாண்டிய மன்னன் பாகத்தை ஏற்றுச் சிறப்பாக நடித்தார்.

சுந்தர முனிவராக நடித்த எம்.எம். ரமணன், ஹாஸ்ய விருந்தளித்த (தேங்காய் ஜோடி!) கே. ஆர். பக்கிரிசாமி, ராஜேசுவரி, பலதேவனாக நடித்த டி. வி. வேலையா எல்லோரும் நாடகத்துக்கு எல்லா விதத்திலும் களை யூட்டினர்.

நாடக ஆரம்பத்தில் சேர, பாண்டிய ஐக்கியத்தைக் காட்டும் தந்திரக் காட்சி பிரமாதம். நாடக வசனத்தை, த. சோமநாதன் எழுதியிருக்கிறார். நல்ல தமிழில் நன்றாய் எழுதி யிருக்கிறார். பின்னணி சங்கீதமும், ஒளி அமைப்பும் நாடகத்துக்கு உயிரூட்டின.

# இக்கிருமிநாசினியை
## பல வருடங்களாக டாக்டர்கள்
## உபயோகித்து
## வருகின்றனர்

25 Grammes
CETAVLEX
CREAM
A New Advance
in Antiseptics

**'ஸெடாவ்லெக்ஸ்'**
ஆண்டிஸெப்டிக்
**க்ரீம்**

வெட்டுக்காயங்கள்,
சுட்ட புண்கள், சாதாரண சர்ம
ரோகங்கள் முதலியவைகளுக்கு

ஒரு ட்யூப் எப்பொழுதும் உங்கள்
வீட்டில் வைத்திருக்கவும்

எல்லா மருந்துக் கடைகளிலும்
கிடைக்கும்




இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட்

ICP 710

# புத்தாண்டு தினத்தில்!




யெஸ்! யெஸ் எப்படிக் கண்டு பிடித்தீர்கள்!


பலே! பலே! வருஷப்பிறப்பும் அதுவுமா மணியார்டர் வந்திருக்கே!
வருஷப் பிறப்பு அன்றைக்கு வந்தா வருஷம் பூராவும் மணியார்டர் வரும்னு நானே என் பேருக்கு மணியார்டர் பண்ணி இருக்கேன்!


வருஷப்பிறப்பு ஏன்டா வருஷா-வருஷம் வர்றது?
இது தெரியாதா... வருஷப்பிறப்பு அன்றைக்கு வருஷப்பிறப்பு வர்றதாலே வருஷா-வருஷம் வர்றது!


ஏன்டா அசடு! வருஷப்பிறப்பன்றைக்கு இரட்டைப்பெண் குழந்தை பிறந்துட்டா அடுத்த வருஷமும் இதே மாதிரி இரட்டைப்பெண் குழந்தை பிறக்கும்னு என்ன நிச்சயம்! அப்படியே பிறந்தாலும் குடி முழுகியா போயிடும்.


நல்ல ஆர்ட் காகிதம்! ஐயாயிரம் பக்கம்! மூவர்ண அட்டைப்படம்! மலிவுப் பதிப்பு! பஞ்சாங்கம் ஸார்!

# பாவிச் சிறு உலகே!

கவி பாரதியார் பாடல்கள் இக் காலம் பெரிதும் பரவி வருவது மகிழ்ச்சிக்கு உரியது. நாட்டு விடுதலைக்குரிய பாட்டுக்கள் மட்டுமே பாடிய புலவராக அவரைக் கொண்டது தவறு என்பதைத் தமிழ் மக்கள் உணர்ந்து வருகிறார்கள். உணர்ச்சியைத் தட்டி எழுப்பி, காலத்துக்கு ஏற்ற நாட்டுப் பாடல்களால் பாரதியார் புகழ் பெற்றது உண்மை. ஆனால், 'மகாகவி' எனப் பெயர் கொள்ளுதற்குரிய பண்புகள் பல அவர் பாக்களில் பரக்க மிளிர்வதை அறிவுடையார் அறியலாகும். கவிதையைச் சரிவரச் சுவைப்பதற்கும், சுவைப்பவர்களிடத்தும் ஓரளவு கவிதை மனப்பாங்கு – கவிதைப் பண்பு – இருத்தல் வேண்டும். 'உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே' — என்று இரண்டு மூன்று ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தொல்காப்பியனார் எழுதி வைத்துள்ள அருமைச் சூத்திரம் எண்ணும் தோறும் வியப்பளித்து வருவதோடு, சுவையும் பொருளும் ஒருங்கே பொருந்தியதாக அமைந்துள்ளது. வீரர்களே வீரர்களின் வீரத்தை மதிப்பிட்டுப் பாராட்ட இயலும். பாடகர்களே பாட்டின் தரத்தைச் சுவையோடு பாராட்ட இயலும். கவிதைக் கலையும் இத்தகையதே. கவி உள்ளம் படைத்தோரே, ஒரு கவிஞனின் உள்ளத்தை உள்ளபடி ஓரளவு உணரலாகும்.

ஈண்டு நான் குறிக்க வந்தது, இதுவரை அச்சில் வெளிவராத மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாக்கள் சில இருக்கின்றன: அவைகளையும் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்யத்தான்.

கீழே வரும் பாக்கள் இதுவரை வெளிவராத பாரதியார் பாடல்கள். இப்பொழுது எட்டயபுரத்தில் இருக்கும் 'சமஸ்தானப் புலவர்', நாகூர் முத்துப் புலவரிடம் பாரதியார் நேரில் பாடியவை; இது அவரே சொன்னது. இருவரும் புலவர்: ஆனால் வறுமையில் ஒருவர். வறுமையும் பிறர் அவமதிப்பும், உடலையும் உயிரையும் ஒருங்கே வருத்திடப் பாரதியார் உள்ளம் உருகி, மனம் கசந்து உலகை வெறுத்து வைது பாடியதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. தமிழ்ப் பாவலர் நிலை பரிதாபத்துக்கும் அனுதாபத்துக்கும் உரியது. அக்காலம் மட்டுமல்ல; இக்காலத்தும் அப்படியே. இந்நிலை மாறுவது எக்காலமோ?

இனி, அப்பாடல்களைப் பார்ப்போம்:—

செல்வத்துள் பிறந்தனமா? அதுபெறுவான்
　சிறு தொழில்கள் பயில்வல்லேமோ?
வில்வைத்த நுதல்விழியார் கண்டு மையல்
　உற வடிவம் மேவினேமோ?
பல்வித்தையிலும் சிறந்த நீங்கானப்
　பெருவித்தை பயின்றிட்டேமா?
கோல்வித்தை, இசைவித்தை மருள்வித்தை
　பயிலுமனம் குறைக்கின்றேமால்,

காவித்திருவிழி
　மாணர் தம்மையக்
　　கடுவிஷமாம்
கூவிச் சமயர்
　குரைப்பன போம்,
　　இக்குவலயத்தில்
ஆவிச் சுகமென்
　றறிந்த தெல்லாம்
　　துன்பம் அன்றியிலே,
பாவிச் சிறு உலகே! உன்னை
　யாவன் கோல்
　　பண்ணியதே!

கடைசி அடியை ஊன்றிப் படியுங்கள்! என்ன கோபம்! என்ன வேகம்!! உலகைப் பார்த்துப் 'பாவி உலகம்', 'சிறு உலகம்' என்றெல்லாம் பகர்வதற்கு எவ்வளவு மனத்திண்மை வேண்டும்! மனம் எவ்வளவு நொந்து கசந்து போயிருந்தால், இச் சொற்கள் வெளி வரும்! உண்மையான அறிஞரைச் சரிவரப் பாராட்டாத இவ்வுலகை — உலக மக்களை — மகாகவி பாரதியார் இத்தகைய கடுமையான மொழிகளால் தாக்குவதில் வியப்பும் வேண்டுமோ?



எல். கிருஷ்ணசாமி பாரதி



# பிரகாசம்

**—அத்தகைய பரிசுத்தம் அளிப்பது விம் ஒன்றுதான்!**

ஒரு முறை விம் உபயோகித்துப் பாருங்கள்; முன்னமேயே ஏன் உபயோகிக்காமல் போனோம் என்று அதிசயிப்பீர்கள்! பீங்கான், கண்ணாடி சாமான்களுக்கு உகந்தது அதுவே. மினுமினுவென்று, மழமழப்போடு சுகாதார ரீதியான சுத்தம் அளிப்பது விம். விம் உபயோகித்தால் உணவுப் பசை இருந்த சுவடே தெரியாமல் நீங்கிவிடும்; கழுவி வைப்பதற்கும் இலகுவானது—ஆகவே பாத்திரங்களுக்கெல்லாம் நல்ல பாதுகாப்பு. விம் மழமழப்பு வாய்ந்தது, ஆயினும் வழுக்காது. மேலும், சமையல் பாத்திரங்கள், ஸ்நான அறை, பேஸின்கள், தரை எல்லாவற்றிற்கும் சுகாதாரப் பவுடராகிய விம் உபயோகியுங்கள். மங்களகரமான ஒளி மங்காமல் தங்குவதற்கு உங்கள் வீட்டிலிருக்கவேண்டியது விம்!




**உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்**

V. 55X50 TM　பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு



# பாவை விளக்கு



## அத்தியாயம் 32

## நம்பிக்கையா? துரோகமா?

உமாவைப் பார்த்து விட்டுத் திரும்பிய தணிகாசலம் பாகாய் உருகி அவள் நினைவில் கரைந்தான். 'இனி இந்தப் பிறப்பில் உமாவை அவள் பிடிவாதத்திலிருந்து மாற்ற முடியாது. அவள் பிடிவாதத்தை அசைக்கக் கூடிய ஒரே மனிதன் நான். என்னையே அசைத்து அவள் தன் பக்கம் சாய்த்து விட்டாள். அடுத்து ஒரு முறை அவளிடம் கல்யாணப் பேச்சை எடுத்தால் அவளை உயிருடன் காண முடியாது.'

சௌந்தரத்தம்மாளின் திடீர் முயற்சிகள் தணிகாசலத்திடம் கலவரத்தை எழுப்பின. உமாவுக்கே தெரியாமல் தில்லியிலிருந்து பேராசிரியரை மாப்பிள்ளை வீட்டுக்கு வரவழைத்திருக்கிறாள். அங்கே ஏதும் அவர்கள் ரகசியமாக ஒப்பந்தம் செய்து கொண்டு வந்திருப்பார்கள். இந்த வேளையில் பேராசிரியர் தம்முடைய மகள் மனத்தைக் கரைத்துக் கொண்டிருப்பார். உமாவின் மனம் மாறினால் நல்லதுதான். ஆனால் அது மாறாது.—இவர்கள் இருவரும் சேர்ந்து உமாவை வாழ வைக்கப் போகிறார்களா? அல்லது சாக வைக்கப் போகிறார்களா?

''வாருங்கள், சாப்பிடுவதற்கு; நீங்கள் வந்தால்தான் உங்கள் பிள்ளை சாப்பிடுவாளும்'' என்று தணிகாசலத்தை அழைத்தாள் கௌரி. சாப்பாடு நடந்தது. குழந்தை கல்யாணி சமையலறைக்குள் தளர்நடை போட்டுப் பாத்திரங்களை உருட்டிக் கொண்டிருந்தாள். வயதுக்கு அதிகமான வளர்ச்சி; வயதுக்கு அதிகமான துடுக்குத்தனம்; வயதுக்கு அதிகமான மூளை.

பரிமாறிக்கொண்டே, ''உங்களுக்கும் உமாவுக்கும் நடந்தசண்டை தீர்ந்து விட்டதா?'' என்றாள் கௌரி.

எல்லா விவரங்களையும் கூறி முடித்து, ''சண்டையில் நான் தோற்றுப் போனேன்; வெற்றி அவளுக்குத்தான்'' என்றான். ''அவள் கல்யாணப் பேச்சில் நான் தலையிடக் கூடாதென்று என்னைக் கையடித்துக் கொடுக்கச் சொன்னாள். வேறு வழியில்லாமல் நான் ஒப்புக் கொண்டு விட்டேன்.''

கௌரி சிரித்தாள். ''அவள் தன்னுடைய மனத்துக்குள் உங்களை வைத்துப் பூசை செய்து கொண்டிருக்கிறாள். இனி மேல் வேறு ஒருவருடன் எப்படி அவளால் வாழ முடியும்? அவள் தன்னையும் என்னையும் ஒன்றாகவே நினைத்துப் பேசுகிறாள்.''

''விளையாடாதே, கௌரி!''

''நான் விளையாடவில்லை. அவள் ஆசைகளுக்காக வருத்தப்படவுமில்லை. அவளும் பெண்; நானும் பெண். என்னிடம் அவள் மனம் திறந்து எதையும் சொல்லுகிறாள். உங்களைவிட எனக்குஅவளை நன்றாய்த் தெரியும்.''




அந்தப் பேச்சை வளர விடாமல் அத்துடன்நிறுத்திக்கொண்டான் தணிகாசலம். விரைவில் இரண்டு வாய் அள்ளிப் போட்



டுக் கொண்டு எழுந்தான். கைகழுவி விட்டுத்தன் அறைக்குள் குறுக்கும் நெடுக்கும் அவன் நடந்தான்.

கல்யாணத்தை வெறுக்கும் உமா ஏற்கனவே கல்யாணம் செய்து கொண்டவனை உத்தேசித்துக் கன்னியாக வாழ ஆசைப்படுகிறாள். இந்தச் செய்தியை கௌரி சிரித்துக் கொண்டே சொல்லுகிறாள்!— பெண்ணுக்குப் பெண் பொறாமை இருக்காதா? கௌரி என்ன அப்படி அசட்டுப் பெண்ணா? அல்லது கண்ணகியின் பரம்பரையில் வந்தவளா? படித்த பெண்ணுக்குள்ள சந்தேகம், பயம், பொறாமை படிக்காதவளுக்கில்லையா? அல்லது தன்னுடன் வாழ்ந்து பெற்ற இட நம்பிக்கை இப்படிப் பேசத் தூண்டுகிறதா?



“மிஸ்டர் தணிகாசலம்!” என்று அறைக்கு வெளியில் குரல் கேட்டது. அங்கு பேராசிரியர் சந்திரசேகரன் நின்று கொண்டிருந்தார்.

“வாருங்கள், வாருங்கள், எப்போது நீங்கள் வந்தீர்கள்? தில்லியில் அம்மா சுகமா? — ஏ, கௌரி! உமாவின் அப்பா வந்திருக்கிறார்!”

மாமியும் மருமகளும் வந்து பேராசிரியரை வரவேற்றார்கள். இரவுச் சாப்பாடு அவருக்குக் கீழே முடிந்து விட்டதால் பாலைக் கொண்டு வந்து கொடுத்தாள் கௌரி. கல்யாணி அம்மாள் சிறிது நேரம் அவரை விசாரித்து விட்டு, குழந்தைகளைக் கதை சொல்லித் தூங்க வைப்பதற்காகப் படுக்கைக்குச் சென்றாள். கௌரிக்கும் கைவேலைகள் நிறைய இருந்தன.

நாற்காலியில் உட்கார்ந்த பேராசிரியரின் முகத்தில் ஈ ஆடவில்லை. வழக்கமான உல்லாசம், குழந்தைத் தன்மை எதுவுமே அவரிடம் காணோம். மூக்குக் கண்ணாடியை இரண்டு முறை துடைத்து மாட்டிக் கொண்டு தணிகாசலத்தை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வைக்குள்ளே இருந்த உணர்ச்சிகளையெல்லாம் தணிகாசலம் தூண்டித் துருவிப் பார்த்தான். அவன் முடிவு, ‘சௌந்தரத்தம்மாள் இவருக்கு நன்றாக உரை ஏற்றி யிருக்கிறாள்; மாசற்ற அவர் மனத்தை மாசு படுத்தி யிருக்கிறாள்; உமாவிடம் போய் முட்டி மோதி விட்டு ஒன்றும் பலிக்காமல் வந்திருக்கிறார்’ என்று சொல்லியது.



"இப்படி யெல்லாம் நடக்குமென்று நான் நினைக்க வில்லை" என்று ஆரம்பித்தார் பேராசிரியர் சந்திரசேகரன்.

தணிகாசலம் கவனமாகக் கேட்டான்.

"சௌந்தரத்தின் கடிதத்தைப் பார்த்தவுடன் நான் புறப்பட்டு நேரில் மாப்பிள்ளை வீட்டுக்குச் சென்றேன். பையன் சீக்கிரம் லண்டனிலிருந்து திரும்பப் போகிறார். டில்லியில் ஏதாவது ஒரு மந்திரியின் கீழ் அவர் உத்தியோகம் பார்க்க வேண்டியிருக்கும். உமாவுக்கு வந்திருக்கும் அதிர்ஷ்டம் சாதாரணமானதல்ல. நீங்கள் தான் அதை எடுத்து அவளுக்குச் சொல்ல வேண்டும். சௌந்தரத்தை உமா அடியோடு வெறுக்கிறாள். என் பேச்சு அவளிடம் எடுபடவில்லை. உங்கள் ஒருவரைத் தவிர அவள் வேறு யாருக்கும் கட்டுப்பட மாட்டாள் போல் தெரிகிறது" என்றார் பேராசிரியர்.

தணிகாசலத்தின் பதிலை எதிர்பார்த்து அவன் முகத்தைக் கூர்ந்து நோக்கினார் பேராசிரியர்.

"என் பேச்சுக்கும் அவள் கட்டுப்பட மாட்டாள்; பல முறை அவளிடம் இதைச் சொல்லி வாயிழந்து விட்டேன்" என்றான் அவன்.

"தணிகாசலம்! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? நீங்கள் இப்படிப் பட்டுக் கொள்ளாமல் பேசினால் அதற்கு என்ன அர்த்தம்?" என்று சீறினார்.

"என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? இன்றைக்கு நேற்றல்ல; மூன்று வருஷங்களுக்கு முன்பே நான் ரவிக்காக அவளிடம் பேசியிருக்கிறேன். சௌந்தரத்தம்மாள் என்ன? தானே

இந்தப் பேச்செடுத்தால் என்னை அவள் சிறிதும் மதிப்பதில்லை. வெறுத்து ஒதுக்குகிறாள்'' என்றான் தணிகாசலம்.

பேராசிரியரின் முகம் சிவந்தது. நெற்றி நரம்புகள் புடைத்தெழுந்தன. மூக்குக் கண்ணாடியைக் கழற்றி ஓங்கி மேசையில் அடித்தார். அதன் கண்ணாடிகளில் ஒன்று கழன்று தரையில் சிதறியது.

''இது நியாயமில்லை; தர்மமில்லை; நல்லதில்லை! நீங்களே இப்படிப் புரண்டு பேசினால் அடுக்குமா? உங்களை யோக்கியர் என்று நம்பித்தானே என் பெண்ணை உங்களிடம் பழக விட்டேன்?—சௌந்தரம் என்னிடம் சொல்லியதெல்லாம் உண்மைதான்!''

''என்ன சொன்னார்கள்?''

''நீங்கள் சொல்லுங்கள்!'' என்று திடீரென்று அவன் மீது பாய்ந்து, தோளைப் பற்றிக் குலுக்கினார் பேராசிரியர்: ''உண்மையை ஒப்புக் கொள்ளுங்கள். நீங்கள் அந்தத் தாயில்லாப் பெண்ணின் மனத்தைக் கெடுத்து விட்டீர்கள். அவளுடைய நினைவில் நீங்கள் பிசாசுபோல் ஆட்சி செலுத்துகிறீர்கள். நீங்கள் எனக்குச் செய்திருப்பது நம்பிக்கைத் துரோகம்! நம்பிக்கைத் துரோகம்!'' என்று கத்தினார்.

'நம்பிக்கைத் துரோகம்!'—இந்தச் சொற்கள் தணிகாசலத்திடம் ஒரே சமயத்தில் அழுகையையும் சிரிப்பையும் தூண்டி விட்டன. சற்று நேரத்துக்கு முன்பு உமாவும் இதே சொற்களைக் கொண்டுதான் அவனை மடக்கினாள். 'நீங்கள் என் கல்யாண விஷயத்தில் தலையிடுவதில்லை என்று சத்தியம் செய்யா விட்டால் அது நம்பிக்கைத் துரோகம்! அந்தத் துரோகத்துக்குப் பலன் என் சாவு!' என்றாள்.

தணிகாசலத்தால் இந்தப் பழிச் சொல்லைத் தாங்க முடியவில்லை. உண்ட வீட்டுக்குத் துரோகம் செய்தவர்கள், அண்டை அயலாருக்குத் துரோகம் செய்தவர்கள், உற்றார்-உறவினர்-நண்பர்களுக்குத் துரோகம் செய்தவர்கள், சிலரைக் கண்டு அவன் முகம் களித்திருக்கிறான்—'என் மீதே இப்படி ஒரு பழி வந்து விட்டதே! உமாவுக்கு ஒரு புறம் நம்பிக்கைத் துரோகம்; பேராசிரியருக்கு மறு புறம் நம்பிக்கைத் துரோகம்; இனிமேல் கௌரிக்கும் நம்பிக்கைத் துரோகம்! இதில் நம்பிக்கை எது? துரோகம் எது?—தணிகாசலத்தின் தலை சுற்றியது.

''எனக்கு ஒன்றுமே புரியவில்லை!'' என்று சொல்லித் தலைக்குமேல் தொங்கிய மின்விளக்கை உற்றுப் பார்த்தான்.

''உங்களுக்கு எப்படி புரியாமல் போகும்? அவளை வாழ விடாமல் செய்வது நீங்கள்! நீங்கள் அவள் மனத்தைப் பாழாக்கி விட்டீர்கள்!''

# விளம்பிக் கன்னி!

தமிழ்முகன்

அசைந்தசைந்து வசந்ததோழி
அழைத்துவர, வருகிறாள்;—கொடி
பசந்தமுல்லை வசந்தவழ்ந்து
பனித்துளிமேல் வருகிறாள்!

சலசலக்கும் அலையருவி
ஜதிகள் போட வருகிறாள்;—கால்
கொலுசொளிர் அலைகள்நுரை
குலுங்கியாட வருகிறாள்!

காற்றல் தென்னங் கீற்றிலூசல்
கருதியாட வருகிறாள்;—அங்கு
வீற்றிருக்கும் கிளிபிடித்து
விளையாடவே வருகிறாள்!

அன்றலர்ந்த கொன்றை..மலர்
அள்ளிச்சூடி வருகிறாள்;—தமிழ்த்
தென்றல்தேரில் குன்றமெலாம்
தேடியோடி வருகிறாள்!

வாலைமங்கை கோலம் போடும்
வாசல்மீதே வருகிறாள்;—அந்தக்
கோலங்களைக் குடத்துக்குள்தான்
குதிக்கும்மீனாய் வருகிறாள்!

தரிசலோடு கரிசல்காடும்
தழைப்பதற்கே வருகிறாள்;—மர
வரிசை, யால வட்டமேந்தி
வரவேற்கத்தான் வருகிறாள்!

பருவம் என்ற உருவம் கொண்டு
பயன்தரவே வருகிறாள்;—எழில்
துருவம்மின்ற கருவம் கொண்டே
துலங்குமகள் வருகிறாள்!

புதியஆண்டின் உதயமாகப்
பொலியும்தேவி வருகிறாள்;—''இனி
விதியுமொன்று செய்க!'' என்றே
விளம்பிக்கன்னி வருகிறாள்!



# உயர்தரத்திற்கும் சிறப்பான த்வனிக்கும்

இணையற்ற இரு

## அற்புதமான நேஷனல்–எக்கோ ரேடியோ மாடல்கள்!




இதோ செவிக்கினிய விருந்தளிக்கும் இருநேர்த்தியான நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல்கள். உயர்தரம் வாய்ந்த இந்த ரேடியோக்களில் ஒலிபரப்புகளை அற்புதமாகக் கேட்கலாம்! இவைகள் 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டவை. மற்றும் ஒரு வருஷத்திற்கு உத்திரவாதம் கொண்டவை. உங்களுக்கு அருகாமையிலுள்ள நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடம் இவைகளை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!



மாடல் 717: தங்கவர்ண வேலைப்பாட்டுடன்கூடிய, மருன் நிற பிளாஸ்டிக் காபினெட். மாடல் U-717: 5 வால்வுகள்; 3 பாண்டுகள்; 230 வோல்ட் ஏஸி/டிஸி செட். மாடல் B-717: 4 வால்வுகள்; 3 பாண்டுகள்: டிரை பாட்டரிசெட். ரூ. 250/-

விலைகள் நெட்.
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 187: 6 வால்வுகள், 8 பாண்டுகள், அழகிய மர காபினெட். மாடல் A-187 ஏஸிசெட்: மாடல் U-187 ஏஸி/டிஸி செட். ரூ. 475/-

நேஷனல்–எக்கோ
ரேடியோக்கள் சிறந்தவை —
அவைகள்
மான்ஸூனைஸ்
செய்யப்பட்டவை






**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்**

ஆபேரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13 • 1/18 மௌண்ட் ரோடு, மதராஸ் • 36/79 ஸில்வர் ஜுபிலி பார்க் ரோடு, பங்களூர் • ஜோக்கியல காலனி, சாந்தினி சௌக், டில்லி

"என் கலை என்னைப் பாழாக்கி விட்டதென்று நீங்கள் நம்பினால், அதே கலை அவளையும் கலைத்து விட்டதென்று நினைத்துக் கொள்ளுங்கள். நானும் அவளும் கலை கொடுக்கும் துன்பத்தைப் பகிர்ந்து கொண்டு, அதை அனுபவிப்பவர்களுக்கு இன்பம் கொடுத்தோம். நகைச்சுவை நடிகன், வீட்டில் மனைவி செத்துக் கிடக்கும்போது, அரங்கில் ஏறிக் கூட்டத்தாருக்காகக் கோமாளித் தனம் செய்வதில்லையா?"

தணிகாசலம் மின்விளக்கைப் பார்த்துக் கொண்டே பேசினான். அந்த ஒளியால் அவன் கண்கள் கூசின. அதற்குள்ளே இருந்து மற்றொரு காட்சி தெரிந்தது. மின்விளக்கு அகல் விளக்காக மாறியது. கௌரியின் கரங்கள் அதைச் சுமந்து கொண்டிருந்தன. தணிகாசலம் திரியாக எரிந்து சின்னஞ்சிறு தாமரை மடலைப் போன்ற சிற்றொளி



பரப்பினான். உமா அந்தத் திரி எரிவதற்காகத் தன் கண்ணீராகிய நெய் வார்த்துக் கொண்டிருந்தாள்.

கண்களைக் கசக்கிக் கொண்டு மறுமுறை பார்ப்பதற்குள் அந்தக் காட்சி மறைந்து விட்டது.

"உங்கள் மகள் உமா ஒரு உத்தமி. அவள் எங்கே எப்படி வாழ்ந்தாலும் எனக்குக் கவலை யில்லை. ஆனால் நான் என் எழுத்தை மறக்கும்போதுதான் அவளையும் மறப்பேன்."

"உமா எங்கே வாழ்ந்தாலும் உங்களுக்குச் சம்மதம்தானே? அப்படியானால் நீங்களே அவளை ரவிக்குக் கல்யாணம் செய்து வையுங்கள். அவள் வாழ்வுக்குக் குறுக்கே நிற்காதீர்கள்; உங்கள் குடும்பத்தையும் நீங்கள் குலைத்துக் கொள்ளாதீர்கள்."

"நான் தடுக்கவில்லை."

"சரி, வாருங்கள்" என்று அவன் கரத்தைப் பற்றி உமாவின் அறைக்கு இழுத்தார் சந்திரசேகரன். "அங்கே வந்து என் எதிரில் அவளுக்குப் புத்திமதி சொல்லுங்கள். அப்போதுதான் உங்களை என்னால் நம்ப முடியும்."

தணிகாசலம் அதற்கு உடன்படவில்லை. தன் கையை உதறிக்கொண்டு சன்னலுக்குச் சென்று வேப்ப மரத்தை ஊடுருவினான். இலைகளை மூடியிருந்த இலைகளின் போர்வைக்குள் இருள் உறங்கிக் கொண்டிருந்தது. மனத்துக்குள் பின்னால் தெரிந்த வானத்தை நோக்கினான். அங்கேயும் இருள். அந்த இருள் அவனுக்குக் கடலின் ஆழத்தை அப்போது நினைவூட்டியது. தூரத்தில் மின்சார ரயில் காதுகளைத் துளைப்பதைக் கேட்டான்.

'புத்தி சொல்லப் போனால்...'

'இந்த வேப்ப மரத்தின் கிளையில் அவள் சுருக்கிட்டுக் கொண்டு தொங்குவாள். அல்லது ஆழ்கடலின் அடி வயிற்றில் பாய்ந்து மடிவாள். அல்லது.... நாவலாசிரியர் டால்ஸ்டாயின் கதாநாயகி அன்னா கரினினா போல், அதோ ஓடுகிறதே அந்த ரயிலடியில் அவள் தலையைக் கொடுத்து....'

தணிகாசலம் தன் தலையை உதறிக்கொண்டு, "நான் எதையும் இனிமேல் அவளிடம் வந்து சொல்ல மாட்டேன்" என்று கூறினான்.

"தெரிந்து விட்டதே! உங்கள் லட்சணம்!" என்று சிரித்தார் பேராசிரியர்.

அதன் பிறகு அவருக்குத் தணிகாசலத்தின் மீது ஆத்திரமும் கோபமும் பற்றிக் கொண்டு வந்தன.

உலகத்தில் அவர் படித்த அத்தனை கவிஞர்களையும், நாடக ஆசிரியர்களையும் எழுத்தாளர்களையும் திட்டினார். எல்லோரும் ஒழுக்கம் கெட்டவர்கள் என்றும், கலைகளின் அடித்தளத்திலேயே களங்கம் தேங்கியிருக்கிறது என்றும் தூற்றினார். தணிகாசலத்தை அவர் மனிதனாகவே மதிக்கவில்லை.

'அன்றைக்குத் தாஜ்மஹாலைப் பார்த்து விட்டுப் பாரதியின் வரிகளைப் பாடினாரே, அந்த மனிதரா இவர்? அவர் என்ன செய்வார்? பெற்றெடுத்த பாசம் அவரை ஆட்டிப் படைக்கிறது.'

"ஏமாற்றுக்காரன், வேஷதாரி, நயவஞ்சகன், கலைப் போர்வை போர்த்த கயவன்" என்றெல்லாம் அவனைத் தூற்றுகிற வரையில் தூற்றி விட்டு, "நான் வெளிப்படையாக உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன். நீங்கள் பதில் சொல்லுகிறீர்களா?" என்றார்.

'என்ன கேட்கப் போகிறாரோ?' என்று குழம்பிக்கொண்டே அறைக்கு வெளியே தெரிந்த கௌரியின் முகத்தைப் பார்த்

துத் திடுக்கிட்டான். இவ்வளவு திட்டுக்களையும் அவள் கேட்டுக்கொண்டா நிற்கிறாள்? நல்ல வேளை; கல்யாணி அம்மாள் இதற்குள் உறங்கி யிருப்பார்கள்.

தணிகாசலம் அவருடைய கேள்விக்குத் தயாரானான்.

"நீங்கள் உமாவைக் காதலிக்கிறீர்களா?" என்று கேட்டார்.

இதே கேள்வியை அவனும் பலமுறை தன்னிடமே கேட்டுக் கொண்டிருக்கிறான். அவனுக்குத் தெளிவான விடை இன்னும் கிடைக்கவில்லை. அவனுக்கே தெளிவாகாத ஒரு சிக்கலுக்கு எப்படி நேரடியாகப் பதில் சொல்வது?

பேராசிரியர் மீண்டும் கேட்டார்! "உங்களுக்கு மனைவி, குழந்தைகள், தாயார் ஒரு குறைவுமில்லை. உங்களை நல்லவர் என்று நினைத்துக் கொண்டு ஒரு கூட்டம் வேறு உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. இந்த நிலையில் நீங்கள் அவளைக் காதலிக்கிறீர்களா?"

அறைக் கதவு படாரென்று திறந்தது. பொறுமைக்கு அணிகலமான கௌரி பொறுமை யிழந்தாள். கண்ணீரும் கம்பலையுமாக, "எதற்காக நீங்கள் இவரைப் போட்டுத் துளைக்கிறீர்கள்? உங்கள் பெண்ணிடம் போய்க் கேளுங்களேன்!" என்றாள். புற்றில் பதுங்கிக் கிடந்த பாம்பைக் கோல் கொண்டு துன்புறுத்தினால் அது சீறாமல் என்ன செய்யும்? சந்திரசேகரனின் சொற்கள் அவள் இதயத்தை அவ்வளவு தூரம் தாக்கி விட்டன. இல்லாவிட்டால் அவர்கள் இருவருமே திகைப்புறும்படியாக அவர் மீது சீறி விழுந்திருப்பாளா? தன் கணவன் மீது வீண் பழி சுமத்திய பாண்டியன் முன்னால் சீறியெழுந்த கண்ணகியை அவள் நினைவு படுத்தினாள்.

பேராசிரியர் சந்திரசேகரன் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை; தணிகாசலமும் எதிர்பார்க்கவில்லை.

கௌரி தன் ஆத்திரத்தைக் கொட்டினாள். "காதலாம் கத்திரிக்காயாம்! இவருக்கு உமாவும் லட்சியமில்லை; நானும் லட்சியமில்லை. நெருப்போடு நெருப்பாய்க் கிடந்து குடும்பத்துக்குச் சோறு போடுவதற்கு உழைக்கிறார். மற்ற நேரத்தில் இவருக்கு எத்தனையோ வேலைகள். — எனக்கும் உமாவுக்கும் தெரியும் இவர் யாரென்று! சௌந்தரத் தம்மாளுக்கு என்ன தெரியும்? நீங்கள் சௌந்தரத்தம்மாள் பேச்சைக் கேட்டுக் கொண்டு இவரைக் கண்டபடி ஏசாதீர்கள். இவருடைய அருமையை எனக்குச் சொல்லிக் கொடுத்தவளே உமா தான். அவளுக்காக இத்தனை நேரம் நான் பொறுத்துப் பார்த்தேன்."

தணிகாசலம் கௌரியை அடக்கி உள்ளே அனுப்பினான். பேராசிரியர் சந்திரசேகரன் இருந்த நிலையில் அவரைத் திருப்திப்படுத்த முடியாதென்று அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அவன் மனம் கேட்கவில்லை.

"நீங்கள் இவ்வளவு நாள் என்னிடம் கொண்டிருந்த பிரியத்தை நான் மறக்க மாட்டேன். உமா எனக்கு உதவிகள் செய்திருந்தால் அவளை நான் ஆரம்பத்திலேயே தடுத்திருப்பேன். எனக்கு உதவி செய்யாத என் கலை உணர்வுக்கு அவள் நீர் வார்த்தாள். அதைத் தடுக்கும் மன வலிமை எனக்கு இல்லை. என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்."

"முடிவாக என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார் பேராசிரியர்.



"இதுதான் முடிவு. நாளையிலிருந்து நாங்கள் இந்த மாடியில் குடியிருக்கப் போவதில்லை. நானாக விரும்பி வந்து அவளைச் சந்திக்க மாட்டேன். அந்த வரையில் நான் உங்களுக்கு உதவி செய்ய முடியும். அவள் எங்களைச் சந்திக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு.— ராமாயணத்தில் வாலியின் கதை கேட்டிருக்கிறீர்களா? எதிரியின் பலத்தில் பாதி அவனுக்கு வந்து விடுமாம். தானாக உமா என்னிடம் வந்து கதறினால் அவளை என்னால் உதைத்துத் தள்ள முடியாது. என் பலத்தின் ஒரு பகுதி எப்படியோ அவளிடம் போய் விடுகிறது. இதுதான் உண்மை."

# புகழ் விளம்பி வருக!

தமிழ் விளம்பி

இந்தி மொழி ஆட்சிதனை எதிர்த்து விளம்பி
விளம்பி இல்லை இது என விளம்பி
இந்தியத்தாய் மடிமீது ஆங்கிலத் தொடு
ஏற்ற பத்து. ஊன் மொழியும் வாழ்வே தன்றி

சந்தியெலாம் சிரிக்குமிந்தி மட்டும் வாழ
சதி செய்வார் மதியீனம் தனை விளம்பி
மந்திரிமார் மனம்மாற அறம் விளம்பி
மன்னு தமிழ்ப் புத்தாண்டே! விளம்பி, வருக!

செந்தமிழின் ஆட்சியதின் சீர் விளம்பி
செகத்துக்கே தமிழ் நாட்டின் பேர் விளம்பி
நந்தமிழன் அஞ்சாத நற்பண் பாட்டு
நக்கீரன் என்பதனை நன்கு விளம்பி

எந்தமிழர் ராஜராஜ இயம்பு மெல்லாம்
இறவாத புகழுடைய அறமாம் என்று
பந்தமிலாப் பைந்தமிழால் பாரில் விளம்பிப்
புத்தாண்டே வருக! புகழ் விளம்பி வருக!!

'கெஞ்சினால் மிஞ்சுவார்; மிஞ்சினால் கெஞ்சுவார்' என்பார்களே அந்தக் கதியை அடைந்திருந்தார் பேராசிரியர்.

"தணிகாசலம்!" என்று மீண்டும் கெஞ்சினார் சந்திரசேகரன். "நீங்கள் வீட்டை விட்டுப் போக வேண்டாம். உங்களுக்கு இந்த வீட்டையே எழுதித் தருகிறேன். அவளிடம் வந்து ஒரு வார்த்தை சொல்லுங்கள்."

'முடியாது' என்று உறுதியுடன் தலையசைத்தான் தணிகாசலம்.

"கௌரிக்காகவாவது நீங்கள் இதைச் செய்ய வேண்டும்" என்றார் அவர்.

வேதனையுடன் அவன் சிரித்தான். "கௌரியிடம் இல்லாத அழகை, கிடைக்காத சுகத்தை, தேடாத இன்பத்தை நான் உமாவிடம் தேடவில்லை. மன நிறைவோடு நாங்கள் எளிய வாழ்வு வாழ்கிறோம். என்னிடம் ஏதாவது குறை இருக்குமானால், அது என்னிடம் அன்பு செலுத்தும் அவளை வெறுக்கத் தெரியாத ஒரே ஒரு குறைதான்."

"ஒரே ஒரு வார்த்தை நீங்கள் சொல்ல மாட்டீர்களா?" என்றார். அத்தனை பெரிய மனிதர் பல வழிகளில் அவனைக் கெஞ்சி உமாவின் மனத்தைத் திருப்பும்படி கேட்டுக் கொண்டார். ஆனால் அது தணிகாசலத்திடம் பலிக்கவில்லை.

"வீணாக அவள் செத்துப் போவாள். அந்தப் பாவத்துக்கு நான் ஒரு நாளும் ஆளாக முடியாது."

சந்திரசேகரனுக்குக் கோபம் வந்துவிட்டது. தற்கொலை செய்து கொள்ள விரும்புகிற கோழைகள் உடனடியாக அப்படிச் செய்து கொள்ள வேண்டும் என்று கருதினார். உமா செத்துப் போனால் நமக்கு நஷ்டமில்லை என்றார். "சீரழிந்து போவதைவிட அவள் செத்துப் போவது தேவலாம்" என்று சொன்னார்.

"அதனால் உங்களுக்கு நஷ்டமில்லை; எனக்கு நஷ்டம். அந்தப் பாவம் உங்களைச் சுற்றாது; என்னைச் சுற்றும். அதிலும் நான் மற்றவர்களை விடச் சீரழிக்கப்பட்ட மனிதர்களின் அருமையை அதிகமாக உணர்ந்தவன். கிழிந்த சட்டையைத் தூக்கி எறியலாம். உபயோகமில்லாத மனிதர்கள் என்று நம்பப்படுகிறவர்களைச் சாகஅடிப்பது சரியல்ல" என்றான்.

நீண்ட நேரம் இருவரும் அமைதியில் கழித்தார்கள். பேராசிரியரின் துன்பம் ஒரு புறமும், உமாவின் துன்பம் மறுபுறமும் அவனை வாட்டி வதைத்தன. அவன் அப்போது இருதலைக் கொள்ளி எறும்பு. 'எல்லோருடைய துன்பங்களுக்கும் நானே காரணம்!' என்று அவன் நினைத்த போது அவனால் பொறுக்க முடியவில்லை. 'எது நம்பிக்கை? எது துரோகம்?' என்று பல முறை தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

பேராசிரியர் மெல்ல எழுந்து தள்ளாடிக் கொண்டே வெளியில் சென்றார்.

"இல்லிக்குத்திரும்புவதற்குள் எப்போதாவது என்னிடம் வாருங்கள்; நீங்கள் விரும்பினால் எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன்" என்றான்.

அவர் எதையும் காதுகளில் போட்டுக் கொள்ளவில்லை. உடைந்து போன மூக்குக் கண்ணாடியை அங்கேயே போட்டு விட்டு, மாடிப் படிகளில் தடவிக் கொண்டே இறங்கிச் சென்றார். தணிகாசலம் கீழே குனிந்து சிதறிப் போன கண்ணாடிச் சில்களை நிதானமாய்ப் பொறுக்கினான். (தொடரும்)

# அடிக்கடி
# சிறுநீர்
# போதல்

அடிக்கடி சர்க்கரையுடனோ அல்லது சர்க்கரை இல்லாமலோ சிறுநீர் போவதானது அபாயகரமான வியாதியாகும். அதனுல் ஆரோக்கியம் வெகுவாக சீரழிந்து போவதுடன் அந்த நோய் கண்டவர்களை நாளுக்கு நாள் சாவுக்கு அருகாமையில் இழுத்து விடுகிறது. வியாதியின் ஆரம்பக் காலத்தில் உடலும், மூளையும் வேலை செய்ய மறுக்கும். இடுப்பு வலி, மந்தப் பார்வை, தொடைகளில் உணர்ச்சியின்மை, பலஹீனம் ஏற்படும். இந்த வியாதி ஏற்பட்டவுடன் சிகிச்சை செய்யாவிட்டால் கட்டிகள், ரணப் பிளவை சாலேஸ்வரம், உடல் முழுவதும் வலி, முடக்கு வாதம் க்ஷயம், எடைக் குறைதல் சோகை, கால்களில் வீக்கம், அசாதாரணமான தாகம், பசி, இத்துடன் வாய் வறட்சி, தொண்டை வறட்சி முதலியனவும் இதர கடுமையான வலிமிகுந்த வேதனைகளும் ஏற்படும். பழங்கால யூனானி முறைப்படி அபூர்வ மூலிகைகள், தாவரச் சத்துக்களுடனும் இயற்கை கால்ஷியங்களுடனும் விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்டது. ''வீனஸ் சார்ம்'' வில்லைகள், ஆயிரக்கணக்கான நோயாளிகள் இதை உபயோகித்து குணம் கண்டு மரணத்தினின்றும் தப்பியிருக்கிறார்கள். இந்த வைத்தியத்தை ஆரம்பித்த 2வது அல்லது 3வது தினத்திலிருந்தே சிறுநீரில் இருக்கும் சர்க்கரையும் அடிக்கடி போகும் சிறுநீரும் குறைந்து விடுவதுடன் ஒரு சில தினங்களுக்குள் உங்கள் வியாதி பாதிக்கு மேல் குறைந்திருப்பதை உணர்வீர்கள்

''வீனஸ் சார்ம்'' சிக்கனமானது. பத்திரமானது. உட்கொள்ள சுலபமானது. கடும் பத்தியங்கள் கிடையாது. அல்லது பட்டினி கிடக்க அவசியமில்லை. நோயாளிகள் போஷாக்குறைவை நிவர்த்திக்க பலரகமான உணவுப் பண்டங்களை சாப்பிடலாம். ஆங்கிலத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் விவரங்கள் தேவையுள்ளோருக்கு இலவசமாக அனுப்பப்படும்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை ரூ. 6-75 n.p**

(பாக்கிங் தபால் செலவு இலவசம்)



கிடைக்கும் இடம்:

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (I. M.)**

தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா

# பாங்க் ஆப் மதுரை
## லிமிடெட்

(தோற்றம்: 1943)

மதுரை



கிளைகள்:

கோயமுத்தூர், சேலம், புதுக்கோட்டை ராயவரம், கீரனூர், கண்டனூர் அறந்தாங்கி, பொன்னமராவதி தேவகோட்டை. திருப்பத்தூர் (வட-ஆற்காடு மாவட்டம்) தர்மபுரி, ஆத்தூர் எடப்பாடி (சேலம் மாவட்டம்)

எல்லா முக்கிய நகரங்களிலும் வியாபார தலங்களிலும் ஏஜென்ஸிகள் உண்டு.



இயக்குநர்:

ஸ்ரீ கருமுத்து தியாகராஜன்—தலைவர்
ஸ்ரீ வ. ராம. வள்ளியப்ப செட்டியார்
ஸ்ரீ நா. அ. அண்ணாமலை செட்டியார்
ஸ்ரீ உ. ராம. மெ. சுப. சேவு. அ. அண்ணாமலை செட்டியார்

கவர்ச்சிகரமான விகிதத்தில் பலவித டிபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன

சேவிங்ஸ் டிபாசிட்டுகள் 3%
கரண்ட் டிபாசிட்டுகள் ½%

பிக்சட் டிபாசிட்டுகள் 3, 6, 12, 24 மாதங்களுக்கு ஏற்கப்படும்

வட்டி விகிதங்கள் விண்ணப்பத்தின் மேல்

எல்லாவிதமான வங்கி அலுவல்களும் கவனிக்கப்படும்

**பி. எஸ். விஸ்வநாதன்**
காரியதரிசி



# செம்பியன்

ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குமுன் மதுரை மாநகரில் ஒரு இரவு. கோச்சடையன் இரணதீரனின் ஆட்சியில் எல்லா நலங்களும் பெற்றிருக்கும் அந்த நகரம் இரவின் அமைதியில், நிலா ஒளியில் தனி அழகுடன் தென்பட்டது. ஆலயங்களின் கோபுரங்களும், அரண்மனை மேல்மாடங்களும், மாளிகைகளுமாக விண்ணை எட்டிப் பிடிப்பது போல் தோற்றமளித்தன.

தெருவுக்குத் தெரு அறக் கோட்டங்கள், மூலைக்கு மூலை தண்ணீர்ப்பந்தல்கள், வீதிக்கு வீதி சத்திரம், சாவடிகள் எல்லாம் அந்த நகரத்தில் நிறைந்திருப்பதாகப் பேசிக்கொண்டார்கள். அதையெல்லாம் சோழ நாட்டிலிருந்து வந்த அந்த இளைஞன் கேள்விப்பட்டிருந்தான். மதுரை நகரத்தின் சிறப்புக்களைப்பற்றிக் கூறும் பாடல்களில் படித்திருந்தான். ஆனால் ஒரு குவளைத் தண்ணீருக்காக அந்த நடு இரவில் அனாதை போல் ஊரைச் சுற்றி வந்து கொண்டிருந்தான் அவன்.

அது நல்ல கடுங் கோடைக் காலம். சித்திரை மாதம் மதுரையிலே நடக்கும் இந்திர விழாவைப் பார்க்க வேண்டுமென்று அந்தச் சோழநாட்டு இளைஞனுக்கு ஆசை. அதற்காகப் பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு முன்பாகவே புறப்பட்டு மதுரைக்கு வந்திருந்தான். தன் சொந்த நாடாகிய சோழ நாட்டுக் காவிரிப்பூம் பட்டினத்துக் கடற்கரையில் பிரதானமான முறையில் நிகழ்ந்த எத்தனையோ இந்திர விழாக்களை அவன் பார்த்து மகிழ்ந்திருக்கிறான். ஆனாலும் தமிழ்ப்பெருமை வாய்ந்த மதுரை நகரத்தில் நடக்கும் இந்திர விழாவைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலை அவனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை! மதுரை நகருக்கு நீரூட்டி வளர்க்கும் வைகை என்னும் பொய்யாக்குலக் கொடி அந்த ஆண்டில் மட்டும் பொய்த்து விட்டாள் என்பதை அவன் கண்டானா, என்ன? அதற்கு முன்பு எந்த ஆண்டிலும் இந்திர விழாவின்போது அவ்வளவு தண்ணீர்ப் பஞ்சம் மதுரையில் ஏற்பட்டதில்லை.

நாவறட்சி தாங்க முடியவில்லை. நெஞ்சுக் குழி வெடித்து விடுவதுபோல் விக்கல்கள் கிளம்பின. விக்கி, விக்கி அவன் தொண்டை ஒய்ந்து தேய்ந்து விட்டது. நடந்து நடந்து அவன் ஏறி வந்த குதிரையின் கால் குளம்புகளும் தேய்ந்து ஒய்ந்து விட்டன. கம்பீரமும் அழகும் பொருந்திய அவன் முகம் வாடியிருந்தது. உடல் துவண்டு போய் மிடுக்கில்லாமல் குதிரை மேல் உட்கார்ந்திருந்தது. அவனும் மூலை முடுக்குகளில் எல்லாம் குதிரையைச் செலுத்திக் கொண்டு போய்ப் பார்த்தான் எங்காவது ஒரு மூலையில், ஏதாவது ஒரு வீட்டில் சிறிது விளக்கு வெளிச்சம் தெரிந்தாலும் கதவைத் தட்டி உள்ளிருப்பவர்களை எழுப்பித் தண்ணீர் கேட்கலாமென்று அலைந்தான். முடியவில்லை. சோதனைபோல் இருந்தது. இன்னும் ஒரிரு நாழிகைகளில் குடிக்க ஒரு வேளைத்தண்ணீர் கிடைக்கவில்லையானால், 'அவன் உயிர் அவனிடம் தங்குமா?' அவனுக்குப் பயம் உண்டாகிவிட்டது.

அவனும் அவன் குதிரையும் சோர்ந்து போய் ஒரு பெரிய மருத மரத்தடியில் வந்து நின்றனர். வடக்குக் கோபுர வாசலுக்கு நேர் எதிர்ப்புறத்தில் கூப்பிடு தூரத்தில் அந்த மருதமரம் இருந்தது. தண்ணீர் வேட்கையின் வேதனை தாங்க முடியாமல் குதிரையிலிருந்து இறங்கி மரத்தின் அடியில் சுருண்டு விழுந்து கிடந்தான் அவன்.



சோர்ந்து துவண்டு விழுந்து கிடந்தாலும் அவன் மற்றிலும் பிரக்ஞை இழந்து விடவில்லை. கண்களுக்குப் பார்க்கும் சக்தி இருந்தது. செவிகளுக்குக் கேட்கும் சக்தி இருந்தது.

திடீரென்று அவன் செவிகள் எதையோ கூர்ந்து கேட்டன. ஒருக[illegible]த்தாற்போல எழுந்திருந்து எதையோ கண்களால் பார்க்க

# கிணறு

நா. பார்த்தசாரதி

முயன்றான் அவன். கோவிலின் வடபுறத்து மதிற்சுவரை ஒட்டி யாரோ ஒரு ஆண்மகனும் வயதில் அவனுக்கு மகளைப்போல் தோன்றிய பெண் ஒருத்தியும் நடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

ஆ! அந்தப் பெண்ணின் கையில் ஏந்திக் கொண்டு செல்வதென்ன? சோர்ந்து கிடந்த இளைஞனின் முகம் மலர்ந்தது. நிலா ஒளியில் அவன் நன்றாகப் பார்த்தான். அவன் கண்கள் அவனை ஏமாற்றவில்லை! உண்மையாகவே அந்தப் பெண்ணின் கையில் பொன் நிறச் செம்பு ஒன்று இலங்கியது. தண்ணீரோ, பாலோ, மோரோ ஏதோ? அவனுக்கு வேண்டியது தொண்டைக் குழியை நனைத்துக் கொள்ள ஒரு குவளைத் தண்ணீர் தானே?

அவள் கையிலிருந்த செம்பைப் பிடுங்குவதற்காகப் பாய்ந்தான். அந்த வயதான மனிதர் கை நீட்டி அவனைத் தடுத்து மறித்தார். அவ்வளவுதான்! இருபத்தைந்து வயது நிரம்பாத அந்தச் சோழ நாட்டு இளைஞனின் உடலில் எங்கிருந்து தான் அவ்வளவு தைரியம் வந்ததோ, தெரியவில்லை. அவர் முகத்தை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் அவரைக் காலால் இடறிக் கீழே தள்ளினான். தலைகுப்புறக் கீழே விழுந்தார் அவர்.

"ஐயோ, அப்பா!" என்று அலறிக் கொண்டே அவரைத் தூக்குவதற்காக முன்வந்தாள் அந்தப்பெண். குபீரென்று அவள் மேல் பாய்ந்து அவள் கையிலிருந்த செம்பைப் பிடுங்கினான் அவன். 'அதில் இருப்பது என்ன? அதைக் குடிக்கலாமா?' என்ற சிந்தனைக்கோ, தயக்கத்துக்கோ, அப்போது அவன் மனத்தில் இடமே இல்லை. அவசரமாக அந்தச் செம்பின் மூடியைத் திறந்து பார்த்தான்.

பச்சைக் கர்ப்பூரம், ஏலம், சாதிக்காய் — இட்டுக் காய்ச்சிய பசும்பால் செம்பு நிறைய இருந்தது. பாலின் நறுமணம் அவனுக்குப் போதை ஊட்டியது. அமுதத்தைக் கண்டாற்போன்ற மகிழ்ச்சியோடு செம்பைத் தூக்கி வாயருகே குடிப்பதற்காக எடுத்துக் கொண்டு போனான்.

ஒரு மடக்குப் பால் செம்பிலிருந்து அவன் தொண்டையில்கூட இறங்கி விட்டது. அந்தச் சமயத்தில் செம்பைத் தாங்கிக் கொண்டிருந்த அவன் வலது கையை வன்மை வாய்ந்த முரட்டுக் கரம் ஒன்று இறுக்கி இழுத்துப் பிடித்தது. அவனுக்கு எப்படி இருக்கும்? பாவம்! திரும்பிப் பார்த்தான். கீழே விழுந்திருந்த அந்தப் பெண்ணின் தந்தைதான் அவனைத் தாக்குவதற்குத் தயாராக அப்படிப் பிடித்துக் கொண்டு நின்றார். அவரோடு தாக்குவதற்கோ, போரிடுவதற்கோ அவன் சிறிதும் பயப்படவில்லை. கைக்கெட்டிய பால் முழுவதும் வாய்க்கெட்டாமல் போய்விடுகிறதே என்றுதான் அவன் வருந்தினான். நெஞ்சைக் கீறிக் கொண்டு வெளி வருவதைப் போல ஒரு பெரிய விக்கல்



அவன் தொண்டையிலிருந்து வெளி வந்தது. அந்தக் கிழட்டு மனிதரின் பிசாசுப் பிடி வேறு அவன் கையை இறுக்கிக் கொண்டிருந்தது. அப்பப்பா! அந்தக் கிழட்டுக் கைகளுக்கு அவ்வளவு வலிமை இருக்கிறதா, என்ன? பரிதாபமும், ஏக்கமும் தேங்கிய விழிகளால் தன் எதிரே நின்று கொண்டிருந்த பெண்ணை ஏறிட்டுப் பார்த்தான் அந்த இளைஞன். நெஞ்சைத் துழாவிக் கெஞ்சுகிற பார்வை அது. நீண்டு பிறழும் கெண்டை மீன்களைப் போன்ற அந்தப் பெண்ணின் விழிகளும் அவனைப் பார்த்தன. அடாடா! வெறும் விழிகளா அவை? அழகு எனும் எல்லையிலாப் பெரும் பொருளைக் கொள்ளையிட்டு வைத்திருந்த அந்தப் புருவங்களை அகல விரித்து அவள் அவனைப் பார்த்த பார்வையில் என்ன தான் தெரிந்து கொண்டாளோ? தென்றலில் அசையும் ரோஜா மொட்டுக்களைப் போல அவள் இதழ்களில் ஒரே ஒரு கணம் ஒரு சிறிய நெகிழ்ச்சி தென்பட்டது. மறுகணம் அவளுடைய முகத்தில், கண்களில், பார்வையில், எங்கும் கேலி கலந்த ஒரு வகை மிடுக்கின் சாயை பரவியது.

"பாவம், அப்பா! மனிதர் விக்கிச் செத்து விடுவார் போலிருக்கிறது. போனால் போகிறது:



செம்பிலுள்ள குறைப் பாலையும் அவர் குடித்துக் கொள்ளட்டும். அப்புறம் நீங்கள் செய்ய வேண்டிய 'மரியாதை'யை யெல்லாம் செய்யலாம்" என்றாள் அவள், கலகலவென்று நகைத்துக் கொண்டே.

"நீ சும்மா இரு, அம்மா! திருட்டுப் பயலுக்குச் சரியான பூசைக்காப்பு கொடுக்க வேண்டும்! என்ன துணிவு இவனுக்கு? நான் ஒருவன் கூடவரும்போதே இப்படி உன் மேல் பாய்ந்து பொற்செம்பைக் கொள்ளையடித்துக் கொண்டு போக முயல்கிறானே? 'பாண்டியன் இரண தீரனின் ஆட்சியில் நடு யாமத்தில் பெண்கள் தனியாகச் சென்றாலும் திருட்டுப் பயம் இல்லை என்ற புகழ்மொழியை இவன் பொய்யாக்கி விட்டானே!" என்று சொல்லிக் கொண்டே ஆத்திரத்தோடு அவனை அடிப்பதற்காகக் கையை ஓங்கினார் அவர்.

"ஐயோ, அப்பா! இப்போ இவருக்கு இருக்கிற தண்ணீர்த் தாகத்தில் நீங்கள் ஒரு அடி அடித்தாலும் தாங்க முடியாமல் சுருண்டு விழுந்து விடுவார். உயிரே போனாலும் போய் விடும். வீணாக ஒரு கொலையைச் செய்த பாவத்துக்கு ஆளாகாதீர்கள்" என்று மீண்டும் கைகளை நீட்டித் தந்தையை வழி மறித்தாள் அவள். அப்படி அவளுடைய கைகள் நீண்டபோதெல்லாம் கலீர், கலீரென்று ஒலித்த வளையலின் ஒலி, 'நான் உனக்காகப் பரிந்து பேசுகிறேன்' என்று தன்னுடைய குரலில் அந்த இளைஞனுக்கு மட்டும் சொல்வது போலிருந்தது.

தகப்பனும், மகளும் போராடிக் கொண்டிருந்த அந்தச் சிறிது நேர அவகாசத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒரே மூச்சாகச் செம்பிலிருந்த பால் முழுவதையும் குடித்து விட்டுச் செம்பைக் கீழே வீசி எறிந்தான் அந்த இளைஞன். வற்றக் காய்ச்சிய அரைப் படி பாலைக் குடித்து முடித்த தெம்பும், மதமதப்பும் அவன் உடலில் ஊறின. சுறுசுறுப்பு உண்டாகி விட்டது.

"ஐயா, பெரியவரே! வாரும், இப்படி! சும்மா உம்முடைய பெண்ணிடமே உமது கைவரிசையைக் காட்டாதீர்" என்று சொல்லிக்கொண்டே மறைத்து வைத்திருந்த உடைவாளை உருவி வெளியிலெடுத்தான் அவன்.

பெரியவரின் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது. மீசை கிளர்ந்தது.

"அடே! வழிப்பறி செய்யும் கயவனே! நெருப்பிடமா விளையாடுகிறாய்? என்னை யார் என்று நினைத்துக் கொண்டாய்? அதிசயமாக உன்னிடந்தான் உடை வாள் இருக்கிறதோ? இதோ, பார்!" — என்று இரைந்து கத்திக் கொண்டு அவரும் உடைமறைவிலிருந்து ஒரு நீண்ட வாளை வெளியே உருவி எடுத்தார்.

அடுத்த விநாடி இருவருடைய வாள் நுனிகளும் மோதத் தொடங்கி விட்டன. இரவின் அமைதியில் நிலவொளி பரந்த வானத்தின் கீழ், கோவில் மதிலோரத்திலே கடுமையான வாட்போர் நடந்தது. கீழே விழுந்து கிடந்த பொற் செம்பை எடுத்துக் கொண்டு நின்ற அந்தப் பெண் இருதலைக் கொள்ளி எறும்பு போல் தவித்தாள். அவள் முகம் வேதனையைக் காட்டியது. மரியாதைக்குரிய தந்தை, மனத்தைக் கவர்ந்து கொண்ட அழகிய வாலிபன் இருவருக்கும் இடையே வாட்போர் நடக்கிறது. யாரைத் தடுப்பது? எப்படித் தடுப்பது? ஒன்றும் தோன்றாமல் மலைத்துப் போய் நின்றாள் அவள்.

கால் நாழிகைக்குள் பெரியவருடைய கையில் சுழன்ற வாளைக் கீழே தரையில் தள்ளிக் காலால் மிதித்துக் கொண்டு நின்றான் அவன். தந்தையின் தோல்விக்காக அவமானப்பட்டுத் தலைகுனிவதற்குப் பதிலாக அவனுடைய வெற்றியை எண்ணிப் பூரித்தது அவள் உள்ளம். அவளது உள்ளத்தை அந்த இளைஞனின் எழில் முகம் என்னதான் மாய மந்திரம் செய்து வசியப்படுத்தியதோ?

தோல்வியடைந்த ஆத்திரத்தில் மறுவிநாடி அவள் தந்தை செய்த காரியத்தைப் பார்த்த போது அவளுக்குப் பகீரென்றது. இரண்டு கைகளையும் ஓங்கித் தட்டி, "யாரங்கே? ஓடி வாருங்கள்!" என்று அவர் போட்ட கூப்பாடு இரவின் மோனத்தில் பயங்கரமாக எதிரொலித்தது. அந்த ஒலியின் எதிரொலி அடங்கி முடிவதற்குள் மதிலோரத்திலிருந்து தட தட வென்று கூட்டமாக ஆட்கள் ஓடி வரும் காலடியோசை கேட்டது.



## பிறந்து 6 மாதங்கள்கூட ஆகவில்லை—

# அவன் உட்கார ஆரம்பித்துவிட்டான்!

அவன் தாயார் அவனுக்கு

**டுமெக்ஸ்** பேபி புட் புகட்டுகிறாள்

என்பதைச் சொல்லவும் வேண்டுமா!

DX, 6238

டுமெக்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1



அடுத்த கணம் வேலேந்திய முரட்டு வீரர்கள் பலருக்கு நடுவே சிறைப்பட்டு நின்றான் அந்த இளைஞன். அப்போதுதான் அந்தச் சோழ நாட்டு இளைஞன் தனக்கு முன் நிற்பவர்கள் யார் என்று அறிந்து கொண்டான். தான் அதுவரை போராடிக் கொண்டிருந்தது எவனோ ஒரு முரட்டுக் கிழவனோடு அல்ல; தன் அருமைப் புதல்வியோடு நகர் பரிசோதனைக்காக மாறு வேடத்தில் வந்திருந்த பாண்டியனோடு என்பதைக் கண்டபோது அவனுக்கு வியப்புத் தாங்கவில்லை.

"கொண்டு போய்ப் பாதாளச் சிறையில் தள்ளுங்கள் இந்த முரடனை" —பாண்டியன் இரணதீரன் கடுமையான குரலில் தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டான்.

முரட்டு வீரர்கள் அவனை இழுத்துக் கொண்டு சென்றனர். போகும்போது பாண்டிய குமாரியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் அவன். ஏக்கம் நிறைந்த அவள் தடங்கண்களின் ஓரங்களில் தனக்காக இரண்டு துளி கண்ணீர் திரண்டிருப்பதை அவன் கண்டான். அந்த இரண்டு துளி கண்ணீருக்காக இருபது தடவைகூடப் பாதாளச் சிறைக்குப் போகலாம் போல் தோன்றியது அவனுக்கு!

* * *

அந்தச் சோழ நாட்டு இளைஞன் பாண்டிய நாட்டின் தலைநகரமான மதுரைக்கு எந்தப் போதாத வேளையில் புறப்பட்டிருந்தானோ? மதுரைமா நகரத்தில் பாண்டிய மன்னனின் அரண்மனையில் காற்றுப் புக முடியாத பாதாளச் சிறையில் வலிமையான இரும்புச் சங்கிலியால் கைகள் பிணைக்கப் பட்டுக் கிடந்தான். ஒரே கும்மிருட்டு. நிதானமாகத் தன் நிலையைச் சிந்தித்துப் பார்த்தான் அவன். "தண்ணீர் தாகத்திலும், இளமைக் கொழுப்பினாலும் எவ்வளவு பெரிய குற்றத்தைச் செய்து விட்டேன்? ஐயோ! நாளைக்கு என்னைச் சபை நடுவே கொண்டு போய் நிறுத்தி விசாரணை செய்வார்களே! அப்போது என்னைப் பற்றிய விவரங்களையெல்லாம் கேட்பார்களே. ஊர், பெயர், உறவு முறைகளை நான் சொல்லித் தானே ஆக வேண்டும்? என்னால் என் குலத்துக்கும், நாட்டுக்குமே களங்கத்தைத் தேடிக் கொடுக்கப் போகிறேனே!"

அவன் தவித்தான்! ஒன்று விசாரணைக்காகத் தன்னை அங்கிருந்து சபைக்கு அழைத்துச் செல்வதற்கு முன் தான் அங்கேயே இறந்து விடவேண்டும்; அல்லது பாதாளச் சிறையிலிருந்து தப்பிப் பாண்டிய நாட்டு எல்லையிலிருந்தே ஓடி விடவேண்டும். இந்த இரண்டில் ஏதாவதொன்று நடந்தாலொழிய தான் பகிரங்க விசாரணைக்கு ஆளாகாமல் தப்ப வழியில்லை என்பதை அவன் உணர்ந்தான்.

"விதியே! என்னிடம் நீ ஏன் இப்படிச் சதி செய்கிறாய்? மதுரை இந்திர விழாவைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையை என் மனத்தில் ஏன்தான் உண்டாக்கினாயோ? இப்படிப் பாதாளச் சிறையில் அடைத்து மானத்தை வாங்குவதற்காகவா அப்படிச் செய்தாய்?" என்று எண்ணியவாறே இருளில் விழுந்து கிடந்தான் அந்த இளைஞன்.

சிறிது நேரத்தில் தன்னை மறந்து சோர்வின் வயப்பட்டான் அவன். விழிகளின் சோர்வில் உறக்கம் மெல்லத் தழுவியது. அந்தச் சமயத்தில் பாதாளச் சிறையில் யாரோ மெதுவாக நடந்து படிகளில் இறங்கி வரும் ஒலி கேட்டது. சிறிய தீபத்தின் மங்கிய ஒளி இருளை விலக்கிக் கொண்டு அவன் இமைகளில் உறுத்தியது. கண்களைத் திறந்தான். அவன் எதிரே பாண்டிய குமாரி மோகினிபோல் சிரித்துக் கொண்டு நின்றாள். அந்தச் சிரிப்பு, அந்த முகம், அந்தக் கண்கள், அந்தப் பார்வை, எல்லாவற்றிலும் குறும்புத்தனம் கொப்புளித்தது.

"ஐயா! வாள் வீச்சு வீரரே! இன்னும் ஒரு செம்பு பால் கொண்டு வந்திருக்கிறேன். குடித்துவிட்டு மறுபடியும் வாள் சண்டை போடுகிறீரா?"

அவளுடைய 'கேலிப் பேச்சையும்' சிரிப்பையும் கேட்டு அவனுக்கு எரிச்சலாயிருந்தது.

"நீ ஏன் கேலி செய்யமாட்டாய்? நான் கிடக்கிறேன் சாகமாட்டாமல். ஒரு செம்புப் பாலை அவசியத்துக்காகக் குடித்ததற்கே இத்தனை சங்கிலிகளைப் போட்டுக் கட்டியிருக்கிறார்கள். இன்னொரு செம்புப் பாலையும் குடிக்கச் செய்து ஆளையே கொன்றுவிடுவதற்கு ஏற்பாடு செய்யலாமென்பது உன் எண்ணம் போலிருக்கிறது!"

"ஐயையோ! அப்படியெல்லாம் இல்லை. உண்மையாகவே நீங்கள் பசியாயிருப்பதைத் தெரிந்து கொண்டுதான் கொண்டு வந்திருக்கிறேன். இதோ, இப்படிக் கொஞ்சம் பாருங்கள்."

அவன் நிமிர்ந்து அவளருகே பார்த்தான். ஒரு பெரிய பொன் தட்டு நிறையப் பழங்கள், நெய் அதிரசங்கள், பால் செம்பு எல்லாம் கீழே வைக்கப்பட்டிருந்தன. அவன் வியப்பும், திகைப்பும் ஒருங்கே அடைந்தான். மரியாதையும், அன்பும் பொங்கும் விழிகளால்

பாண்டிய குமாரியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அவளுடைய முகத்தில் அவனுடைய கண்கள் எந்த ஒரு விலைமதிப்பற்ற உணர்ச்சியின் சாயையை ஆவலோடு தேடினவோ, அது குறைவில்லாமல் நிறைந்திருந்தது. சற்று முன் துணிவாகக் குறும்பு பேசிய அவள் இப்போது அந்த இளைஞனின் கூரிய பார்வையைத் தாங்க முடியாமல் நாணித் தலை கவிழ்ந்தாள். கன்னங்களில் குங்குமச் சிவப்பு மெருகேறியது.

இன்பமயமான அந்த அமைதியைக் கலைத்துப் பேச்சை முதலில் தொடங்கியவன் அவன்தான்.

''கைகால்களைச் சங்கிலியால் இறுக்கிக் கட்டிப் போட்டு விட்டுச் சாப்பிடச் சொல்லி உபசரிப்பது பாண்டிய நாட்டில் விருந்தோம்பல் முறையோ?''

அவள் சிரித்துக் கொண்டே சங்கிலிகளை அவிழ்த்து விடுவதற்காக அவன் அருகே வந்து குனிந்து உட்கார்ந்தாள்.

சங்கிலிகள் ஒவ்வொன்றாக அவிழ்ந்து விழுந்தன. அவனுடைய பொன்னிற மேனியில் சங்கிலிகள் பிணைத்திருந்த இடமெல்லாம் தடிப்புத் தடிப்பாகத் தடம் விழுந்து வீங்கியிருந்தன. பசி தீரப் பழங்களைச் சாப்பிட்டு விட்டுப் பாலைப் பருகினான் அவன்.

''அன்பரே! இனிமேலும் நீங்கள் இங்கே தாமதிப்பது ஆபத்தைத் தரும். உடனே புறப்பட்டுச் சென்று விடுங்கள். இந்தப் பாதாளச் சிறைக்கூடத்திலிருந்து கோட்டையை விட்டு வெளியேறுவதற்கு இரகசியமான சுரங்க வழி இருக்கிறது. அதை உங்களுக்குக் காட்டுகிறேன். அதன் வழியாகச் சென்றால் வடக்குக் கோபுர வாசலில் மதிலோரமாகக் கொண்டு போய் விடும். பொழுது விடிவதற்குள் நீங்கள் இந்த நாட்டு எல்லையைக் கடந்துவிட வேண்டும்.'' அவள் குரலில் பரபரப்புத் தொனித்தது.

''முன்பின் அறிமுகமில்லாத எவனோ ஒரு இளைஞனுக்காக இவ்வளவு உதவியைச் செய்கிறாய்! உனக்கு நன்றி சொல்லக்கூட அவகாசம் கொடுக்காமல் என்னைத் துரத்துகிறாயே?''—உருக்கமான குரலில் அவன் இப்படிக் கேட்டதும் பாண்டிய குமாரியின் கருநெடுங் கண்களில் ஈரம் கசிந்து விட்டது.

'' நீங்கள் யாரோ, உங்கள் பெயர் என்னவோ? உங்களுக்கு எந்த நாடோ? எதுவும் எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்றே ஒன்று மட்டும் எனக்கு நன்றாகத் தெரியும். இங்கிருந்து நீங்கள் கிளம்பிப் போகும் போது நீங்கள் மட்டும் தனியாகப் போகவில்லை. ஒரு பேதைப் பெண்ணின் உள்ளத்தையும் உங்களோடு கொண்டு போகிறீர்கள்.''

இந்தச் சொற்களைக் கேட்டதும் அந்த இளைஞனின் உடல் சிலிர்த்தது. இனம் விளங்காத பூரிப்பு அவனுக்கு ஏற்பட்டது.

''நேரமாகிறது. காலம் கூட்டி வைத்தால் மீண்டும் சந்திப்போம். 'இப்போது நீங்கள் புறப்படுங்கள்.'' குரல் தழுதழுக்க அவனைக் கெஞ்சினாள் அவள்.

'' அன்பே! நான் யார்? எந்த நாட்டைச் சேர்ந்தவன்? என் பெயர் என்ன? இவற்றில் எதையுமே இப்போது உன்னிடம் தெரிவிக்கக் கூடிய நிலையில் நான் இல்லை. இந்தச் சந்தர்ப்பம் அப்படி அமைந்து விட்டது. அதற்காக என்னை நீ மன்னித்து விடு. ஆனால் ஒன்று மட்டும் சொல்கிறேன். விரைவில் உன்னை என்னுடையவளாக்கிக் கொள்ள ஏற்பாடு செய்வேன். அது வரை இந்த மோதிரம் என் நினைவாக உன்னிடம் இருக்கட்டும்'' என்று சொல்லிக் கொண்டே தன் கையிலிருந்து ஒரு மோதிரத்தைக் கழற்றி அவள் கைவிரலில் அணிந்தான். தீபத்தின் மங்கிய ஒளியில் அப்போது அவள் அந்த மோதிரத்தைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. மோதிரத்தை அவள் விரலில் நுழைத்துக் கொண்டிருந்த போது அவளுடைய புறங் கையில் சூடாக இரண்டு கண்ணீர்த் துளிகள் விழுந்து தெறித்தன. ஒரு விநாடி இருவரும் ஒருவர் முகத்தை மற்றொருவர் இமையா விழியால் பார்த்துக் கொண்டு நின்றனர்.

திடீரென்று அவள் தன் கைகளை அவனுடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு சுரங்கப் பாதை தொடங்கும் வழியைத் திறந்தாள்.

''இந்தாருங்கள் விளக்கு! வழி இருட்டாக இருக்கும். நீங்கள் புறப்படலாம்.''

''இங்கேயிருந்து விளக்கில்லாமல் நீ எப்படித் திரும்பிப் போவாய்?''

''பரவாயில்லை. எனக்கு வழி பழக்கமானதுதான். நான் போய்க்கொள்வேன்.''

''நான் போய் வரட்டுமா?''

'' நல்லது! இந்தப் பேதையை மறந்து விடாதீர்கள்.''

இருண்டு கிடந்த சுரங்க வழியில் அவன் வேகமாக நடந்தான். வழியின் திருப்பத்தில் அவன் உருவம் மறைகிற வரை நின்று பார்த்துக் கொண்டிருந்த பாண்டிய குமாரி, கண்களைத் துடைத்துக் கொண்டு திரும்பினாள். உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன் போய் விட்டான். கொள்ளை கொடுத்தவள் இருளில் தட்டுத்தடுமாறிக் கன்னிமாடத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள்.

கன்னி மாடத்தை அடைந்ததும் முதல் வேலையாக அவள் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி விளக்கொளியில் கொண்டு போய்ப் பார்த்தாள். மேலும் கீழுமாக அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டு வந்தவள் முத்து முத்தாகச் சிறிய எழுத்துக்களில் அதில் செதுக்கியிருந்த 'செம்பியன்' என்னும் பெயரைப் பார்த்தாள். அவள் முகம் வியப்பால் மலர்ந்தது. அந்தப் பெயரின் இருபுறமும் சோழப் பேரரசின் சின்னமாகிய புலி இலச்சினை பொறித்திருப்பதைப் பார்த்த போது அவள் முகம் பின்னும் மிகுதியாக மலர்ந்தது. அந்த இரண்டு அடையாளங்களையும் கொண்டு வந்தது யார் என்று அனுமானித்துப் பார்த்தபோது அவளுக்குப் பெருமை பிடிபடவில்லை.

அவன் சொல்ல மறுத்ததை, சொல்ல விரும்பாததை அந்த மோதிரம் காட்டிக் கொடுத்து விட்டது. அவள் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டு போன அவன் வேறுயாருமில்லை! சோழநாட்டு இளவரசன் செம்பியன்! ஆம், அவனேதான்! அந்தப் பெயரும், அதிலிருந்த புலி முத்திரையும் சோழ சாம்ராஜ்யத்தினுடைய அவனுக்கே உரியவை.

இவ்வாறு பாண்டியகுமாரி கன்னிமாடத்து விளக்கொளியில் அந்த மோதிரத்தைக் கையில் வைத்துக் கொண்டு இன்பகரமான நினைவில் மூழ்கியிருந்த போது, அந்த மோதிரத்துக்கும் நினைவுகளுக்கும் உரியவனான செம்பியன் வையையாற்றின் வடகரையைக் கடந்து வேகமாகத் தன் குதிரையில் போய்க் கொண்டிருந்தான். பாண்டிய குமாரி அவனுக்கு இட்டிருந்த அன்பின் ஆணைப்படி பொழுது விடிவதற்குள் அவன் அந்த நாட்டு எல்லையைக் கடந்திருக்க வேண்டுமே! இந்திர விழாவைப் பார்க்க இரகசியமாக வந்த செம்பியன், இந்திரவிழா ஆரம்பமாவதற்கு முன்பே மதுரையிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தான். உள்ளத்தில் புதிய இனிய நினைவு ஒன்றைச் சுமந்துதிரும்பிக் கொண்டிருந்தான்.



* * *

மறுநாள் காலையில் சிறையில் அடைத்திருந்த இளைஞனைக் காணவில்லை என்ற செய்தி பாண்டிய மன்னனுக்குப் பாதாளச் சிறையின் காவலர்களால் அறிவிக்கப்பட்டது. 'காற்றும் நுழைய முடியாத பாதாளச் சிறையிலிருந்து அவன் எப்படித் தப்பியிருக்க முடியும்?' என்று பாண்டியன் திகைத்தான். அவனுக்குப் பலவிதமான சந்தேகங்கள் ஏற்பட்டன. தன் சந்தேகங்களை மனத்துக்குள்ளேயே அடக்கிக் கொண்டு அவனைத் தேடிப்பிடித்துக் கொண்டு வர நாலா பக்கமும் ஆட்களை அனுப்பினான்.

உள்ளூற அவனுக்குத் தன் பெண்ணின் மேலேயே சந்தேகம் இருந்தது. முதல் நாளிரவு அவள் அந்த இளைஞனிடம் அனுதாபம் காட்டிப் பேசியது நினைவு வந்தது.

அந்தரங்கமாகப் பாண்டிய குமாரியை அழைத்து விசாரித்தான். சரியாகப் பதில் சொல்லாமல் மென்று விழுங்கினாள் அவள். பாண்டியன் அரட்டி மிரட்டிப் பயமுறுத்தினான். பாண்டிய குமாரி நடந்ததை நடந்தபடியே சொல்லி விட்டாள். மோதிரத்தைக் காட்டி, வந்த இளைஞன் யார் என்பதையும் விளக்கியபோது பாண்டியனுக்கே ஆச்சரியமாயிருந்தது. பழம் நழுவிப் பாலில் விழுந்தாற்போல் இருந்தது. வந்தவன் சோழ நாட்டு இளவரசன் செம்பியனாக இருப்பானென்று அவன் கனவில்கூட நினைத்திருக்கவில்லை. தன் மகளின் அன்பு, பொருத்தமான இடத்தில்தான் சேர்ந்திருக்கிறது என்று அறிந்தபோது பாண்டியன் கோபப்படுவதற்குப் பதிலாக மகிழ்ச்சி அடைந்தான்.

நினைத்துப் பார்த்தால் பாண்டியனுக்கே வேடிக்கையாக இருந்தது. "சோழ நாட்டு இளவரசன் பரிவாரங்களின் வரவேற்பையும், இராஜோபசாரங்களையும் பெற்று இந்நகருக்குள் வரவேண்டியதிருக்க, அனாதைப் பிள்ளை போல் குடிக்கத் தண்ணீருமின்றிச் சுற்றி விட்டு என்னோடு சண்டையும் போட்டுக் கொண்டு போய் விட்டானே?" — இதை நினைக்கும் போது அவனுக்குச் சிரிப்பாக வந்தது. "பெண்ணே! நீ சாமர்த்தியசாலி; என் வாளால் நான் அடக்க முடியாத சோழ இளவரசன் செம்பியனை உன் வாள் விழிகளால் வசப்படுத்திக் கொண்டு விட்டாய். உங்களுடைய இந்த அன்பின் இணைப்பு, பாண்டிய சாம்ராஜ்யத்தின் மகோன்னதமான எதிர் காலத்துக்கு அடிகோலப் போகிறது. உங்கள் இருவருக்கும் திருமணம் நடப்பதற்கான ஏற்பாடுகளை இன்றே செய்யத் தொடங்குகிறேன். இந்த மகிழ்ச்சிகரமானநேரத்தில் உனக்கு ஏதாவதொரு பரிசு தர வேண்டுமென்று நினைக்கிறேன். உனக்கு எது விருப்பமோ, அதைக் கேள்" என்றான்.

"அப்பா! அந்த இடத்தில் வடக்குக் கோபுரவாசலில் ஒரு பெரிய கிணறு வெட்டச் செய்ய வேண்டும். அவருக்குத் தண்ணீர்த்தாகம் ஏற்பட்டு அந்த மருத மரத்தடியில் விழுந்து கிடந்ததனால் தானே நாம் அவரைச் சந்திக்க முடிந்தது? நம்முடைய நினைவின் பசுமையான அடையாளமாக அந்தக் கிணறு நிலைத்து நிற்க வேண்டும். தண்ணீர் வேட்கையுற்று அந்த வழியாக வருகிறவர்களெல்லாம் அந்தக் கிணற்றில் நீர்பருகி மகிழவேண்டும்."

"குமாரி! உன்னுடைய ஆசைகள், அபிப்பிராயங்கள் விநோதமாகவே இருக்கின்றன."

"என் விருப்பம் உங்களுக்குப் பிடிக்கவில்லையா, அப்பா?"

"பிடிக்காமலென்ன? கட்டாயம் உன் விருப்பப்படியே செய்கிறேன். நாளைக்கே அந்த இடத்தில் கிணறு வெட்டுவதற்கு ஆட்களை அனுப்புகிறேன்."

பாண்டியன், மறுநாள் சொன்னபடியே கிணறு வெட்டுவதற்கு ஆட்களை அனுப்பி விட்டான். சோழநாட்டுக்குத் திருமண விஷயமாகத் தூதனுப்புவதற்குப் பாண்டியன் சிந்தித்துக் கொண்டிருந்தபோதே இன்னொரு ஆச்சரியம் நடந்தது. சோழ மன்னனே அதற்குள் தானாக முந்திக் கொண்டு ஒரு தூதுவனை அனுப்பி விட்டான். "என் குமாரன் சோழ நாட்டு இளவரசன் செம்பியனுக்கு உங்கள் குமாரியை மணம் செய்து கொடுக்கச் சம்மதமா?" என்று கேட்டு அனுப்பியிருந்தான் சோழன்.

"பூரண சம்மதம். உங்களை முந்திக் கொண்டு நானே ஓலை எழுதிக் கொடுத்து என் சார்பில் தூதனுப்ப எண்ணியிருந்தேன். அதற்குள் நீங்களே முந்திக் கொண்டு விட்டீர்கள்" என்று தொடங்கி மதுரை நகரத்

தில் நடு இரவில் சோழநாட்டு இளவரசன் செய்த திருவிளையாடல்களையும், புதிய உறவு காரணமாகத் தங்கள் இருவருக்கும் ஏற்பட இருக்கின்ற அரசியல் அனுகூலங்களையும் விவரித்துத் தானும் பதில் ஓலை எழுதிக் கொடுத்து அனுப்பிவிட்டான் பாண்டியன்.

* * *

மதுரைமா நகரில் பாண்டியகுமாரியின் திருமணத்துக்கான ஏற்பாடுகள் கோலாகலமாக நடந்து கொண்டிருந்தன.

இன்னொருபுறம் வடக்குக் கோபுரவாசலில் மருத மரத்தடியில் கிணறு தோண்டும் வேலையும் வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த இடம் சிறிது மேட்டுப் பாங்கான இடமாகையினால் மண்ணைத் தோண்டத் தோண்டக் கீழே போய்க் கொண்டிருந்ததே ஒழியத் தண்ணீர் வருவதற்கு அறிகுறியான ஈரக் கசிவே தென்படவில்லை. பாண்டிய குமாரியின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகப் பொறுமையிழந்து விடாமல் வேலை செய்து கொண்டிருந்தார்கள். எவ்வளவு ஆழம் தோண்டினாலும் சரி; தண்ணீரை வரவழைத்து விட வேண்டுமென்பது அவர்கள் இலட்சியமாக இருந்தது. பாண்டிய மன்னனும் அவனுடைய அருமைப் புதல்வியும் தினம் ஒரு தடவை ஆவலோடு கிணறு தோண்டப்பட்டுக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து பார்த்து விட்டுப் போனார்கள். திருமண நாளும் நெருங்கிக் கொண்டிருந்தது.

இந்த நிலையில் திடீரென்று வடதிசைச் சாளுக்கியர்கள் வேறு படையெடுத்து வந்து விட்டனர். பாண்டியன் திகைத்தான். புதல்வியின் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்த சமயத்தில் இப்படித் திடீரென்று பகைவன் படையெடுத்து விட்டானே என்று மலைப்பாக இருந்தது அவனுக்கு. "அஞ்ச வேண்டாம்! நாங்கள் இருக்கிறோம்" என்று பெரும் படைகளைத் திரட்டிக் கொண்டு பாண்டியனுக்கு உதவ முன் வந்தனர் சோழனும், அவன் மகன் செம்பியனும். 'போர் முடிந்ததும் திருமண ஏற்பாடுகளைக் கவனிக்கலாம்' என்று தீர்மானித்தான் பாண்டியன். சோழர் பெரும் படையும், பாண்டியர் பெரும் படையும் ஒன்றுபட்டுக் கடல் கிளர்ந்து பாய்வது போல் வடதிசை நோக்கிப் பாய்ந்தன.

எல்லோரும் போருக்குப் புறப்பட்டுப் போய் விட்டதனால் கிணறு தோண்டும் வேலை அப்படியே அரைகுறையாகப் பாதியில் நின்று போயிற்று. மதுரை நகரம் வெறிச்சோடிப் போயிருந்தது. அத்தனை பெரிய அரண்மனையில் அவ்வளவு தோழிகள் நிறைந்த கன்னிமாடத்தில் பாண்டிய குமாரிக்குப் பொழுதே போகவில்லை.

எனவே, அவள் தனியாகப் பல்லக்கில் ஏறிப் போய் அந்த நீர் ஊறாத கிணற்றைச் சுற்றிப் பார்த்து விட்டு வருவாள். ஒவ்வொரு நாளும் போர்க்களத்திலிருந்து அரண்மனைக்குச் செய்திகள் வரும். செம்பியன் செய்த வீரச் செயல்களைப் பற்றிக் கேட்கும்போதெல்லாம் அவள் சிறு குழந்தை போல் கைகொட்டிச் சிரித்தாள். அவனது வெற்றிகள், பகைவர்களிடையே அவன் செய்த சாகசச் செயல்கள்—இவற்றைப் பற்றியெல்லாம் கேள்விப்படும்போது அவள் கொள்ளும் மகிழ்ச்சியைப் பார்க்கவேண்டுமே!

போர் தொடங்கிப் பதினைந்தாவது நாள். மாலை நேரம். அரண்மனை மேன்மாடத்திலிருந்து போர்க்களத்துச் செய்திகளைக் கொண்டு வரும் தூதுவன் வருகிற திசையை ஆவலோடு நோக்கிக் கொண்டிருந்தாள் பாண்டிய குமாரி. நேரம் ஆகிக் கொண்டே இருந்தது. வழக்கமாகத் தூதுவன் வரும் நேரம் கடந்து விட்டது. அவள் மனம் பதைத்தது.

"நான் வடக்குக் கோபுரவாசல் பக்கமாகப் போகிறேன். போர்க்களத்திலிருந்து செய்தி கொண்டுவரும் தூதுவன் வந்தால் நேரே அங்கே அனுப்புங்கள்" என்று உடனிருந்த தோழிகளிடம் சொல்லிவிட்டுப் பல்லக்கு கொண்டுவரச்சொல்லிப் புறப்பட்டாள். பல்லக்கில் ஏறும்போது மேல் சட்டத்தில் தலை 'விண்' என்று இடித்தது. ஒரு கணம் பொறி கலங்கிவிட்டாள். தலை சுற்றியது. இலேசாக இரத்தம் கூடக் கசிந்துவிட்டது.

"அபசகுனம் மாதிரி இடிக்கிறது. போக வேண்டாம்" என்று தோழிகள் ஓடிவந்து கெஞ்சினர். அவள் கேட்கவில்லை. போய்த்தான் தீரவேண்டுமென்று கண்டிப்பாகக் கிளம்பிவிட்டாள் பாண்டிய குமாரி.

பாண்டிய குமாரியின் பல்லக்கு செம்பியன் கிணற்றருகே வந்து நின்றது. அவள் கீழே இறங்கினாள். கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தவளுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அத்தனை நாளாக வறண்டு கிடந்த மண்ணுக்கிடையே ஒரு சிறிய ஊற்றுக் கண் திறந்து நீர் வடிந்து கொண்டிருந்தது. இந்த விந்தைக் காட்சியை அவளுடைய கண்கள் பார்த்துக் கொண்டிருந்தபோது பின்னால் குதிரைக் குளம்பின் ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தாள். போர்க்களத்துத் தூதன் வந்து கொண்டிருந்தான். "நல்ல செய்திதானே?" என்று முகம் மலரச் சிரித்தவாறு கேட்டுக்கொண்டே அவனை நோக்கி ஓடினாள்.

அந்தத் தூதன் பதிலுக்குச் சிரிக்கவில்லை. குதிரையிலிருந்து கீழே இறங்கினான். பாண்டியகுமாரியை வணங்கினான். என்ன பேசுவதென்று தெரியாமல் ஒரு கணம் தொண்டையடைக்க, நாத்தழுதழுக்கத் தயங்கி நின்றான். "இளவரசி! என்னை மன்னிக்க வேண்டும்! இன்றைக்கு உங்களுக்கு நான் நல்ல செய்தி கொண்டு வரவில்லை! இன்று காலையில் நடந்த போரில் சோழ நாட்டு இளவரசர் செம்பியன் அமரபதவி அடைந்துவிட்டார்."—தட்டுத்தடுமாறி வார்த்தைகளை வெளியிட்ட பின் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு 'கோ' என்று கதறி அழுது விட்டான் அவன்.

பாண்டிய குமாரி கிணற்றின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அங்கே ஊறிக் கொண்டிருந்த ஊற்று நீரில் செம்பியனின் கம்பீரமான முகத்தைக் கண்டாள். அவளுடைய கண்களும் ஊற்றாக மாறின. மேல்வானத்து வான வில்லின் செம்மை, கிணற்றில் ஊறிய நீர், எல்லாம் இறந்துபோன செம்பியனின் இரத்தமாகத் தோன்றின அவள் கண்களுக்கு!

# என் மனைவி மிக

திவ்யமாகச்
சமைக்கிறாள்

# துஷார்

வைடமின் நிறைந்த வனஸ்பதி

துஷார் வனஸ்பதி சமையலுக்கு ஏற்ற சாதனம் மட்டுமல்ல. இதில் ஏ, டி. வைடமின் சத்துக்கள் நிறைந்து, சமையலின் ருசியையும் வாசனையை ஊட்டமளிக்கும் சக்தியையும் அதிகரிக்கச் செய்கின்றன.



துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்,
கர்நூல்



சூரிய வேலுக்கும், கொடூர வாளுக்கும் இல்லாத சக்தி ஒரு பெண்ணின் நாவுக்கு இருந்ததை அன்றுதான் அவ்வரண்மனை கண்டறிந்தது!

எதிரெதிரே நின்ற அவ்விளம் உள்ளங்கள் இரண்டும், இரு வேறுலகமும், இரு துருவங்களுமாக வேற்றுமை கொண்டிருந்தன. கடமை உள்ளத்துக்கும் குரோத புத்திக்கும் இடையே விளைந்த ஊடலில் வைராக்கியம் தெறித்தது! அவதூறைப் பொறுக்க மாட்டாது அவன் அவளெதிரில் குமுறினான்:

"அம்மா! சிறிது காலமாகத் தங்களது மறைமுகமான தீஞ்சொற்களும் நடவடிக்கைகளும் என் உடலைக் கோரத் தீயாகப் பொசுக்கி வந்தன. அவற்றைச் சிறிதும் பாராட்டாமல் இருந்தேன். இன்று நேருக்கு நேராகவே தங்கள் நாவினால் சுட்ட வடு என் இதயத்தை விட்டு மாறாது. தங்கள் கருத்துக்கெதிராக நான் இவ்வரண்மனையில், ஏன்

# முடிதந்த மன்னன்

துரோணன்

இம்மத்தியபதியின் எல்லையிலேயேகூட ஒரு கணமும் இரேன். ஆனால் இம்மைந்தன் கடமையில் தவறாத உண்மை வீரன் என்பதை ஒரு நாள் உணர்ந்து வருந்துவீர்கள்."

இவ்வார்த்தைகளைக்குரல் தழுதழுக்கக் கூறிவிட்டுச் சரேலென்று வெளியேறினான் வீராதி வீரனான சந்திரசிம்மன்.

அவன் எதிரே நின்ற பெண் பாவை அவனது திசை நோக்கியபடியே ஒரு பெருமூச்சின் மூலம் அவற்றைச் சமாளித்தாள். இருபத்து நான்கு வயதே நிரம்பிய அம்மாதரசி முப்பத்திரண்டு வயதான அவனது மாற்றாந் தாயின் முறையிலுள்ளவள். சித்தூர் நாட்டின் அரசியும், ராணா லட்சசிம்மனின் பத்தினியுமான அவள்தான் ராணி ஊர்மிளாபாய்.

மதி நுட்பமும், விவேகமும் நிறைந்த ராணா லட்சசிம்மனின் வாழ்வில் ராணி ஊர்மிளாபாய் குறுக்கிட்ட சம்பவம், விதியின் விளையாட்டேயன்றி வேறில்லை.

வளத்திலும், எழுச்சியிலும் மார்வார் நாடு சித்தூர் நாட்டுடன் ஒப்பிடும்பொழுது கீழ்ப்பட்டேயிருந்தது. அதை ஆண்டு வந்த ராவ் ரணமல்லனின் உள்ளத்தில் பொன் கொழித்த சித்தூர்க் கோட்டையின் சிறப்பும், வானளாவி நின்ற கூட கோபுரங்களின் எழில் தோற்றமும், முடிவில்லா ஆசைக் கனவுகளை ஏற்படுத்தியிருந்தன. குறுநில மன்னனாகவே ரணமல்லனின் வாழ்வு கழிந்து கொண்டிருந்தது. முடிவாக, மார்வார் மன்னன், சித்தூர் ராஜபுத்திர வமிசத்தில் உறவுகொள்ள பத்தனித்தான் இதன் மூலமாகத் தனது கனவுகள் பிற்காலத்திலேனும் பயன் பெறக் கூடும் என்ற ஆசை உந்தியது. ஆகவே லட்சசிம்மனின் முதல் புதல்வனான சந்திரசிம்மனுக்குத் தன் புதல்வியான ஊர்மிளா பாவைக் கொடுத்து உறவைப் பெற விரும்பினான்.

வசந்த காலம் தொடங்கியது. ராஜபுத்திரர்கள் வழக்கம்போல் கூட்டமாக வேட்டைக்குச் சென்றனர். இளவரசன் சந்திரசிம்மனும் அவர்களுடன் காட்டுப்புறம் சென்று மூன்று தினங்களாகி யிருந்தன.

அன்று அரச சபையிலிருந்த ராணா லட்சசிம்மன் குதூகலத்துடன் இருந்தான். விதூஷகர்களின் சாதுரியமான பேச்சுக்களால் அவன் அன்று மனம் விட்டு உரையாடினான். அச்சமயம்தான் மார்வார் நாட்டின் அரச தூதுவர்கள் இருவர் நற்செய்தியுடன் அங்கே வந்து சேர்ந்தனர். மலர் மாலை, பழம் தாம்பூலங்களுடன் திருமணப் பரிசவோலை தாங்கி வந்த தூதுவர்களை மன்னன் மிக்க மரியாதையுடன் வரவேற்றான். மார்வார் மன்னன் சித்தூர் அரச பரம்பரையைப் பிரமாதமாகச் சிலாகித்தும், அத்தகைய வமிசத்தினருடன் தான் உறவு கொள்ளும் பாக்கியம் வேண்டுமெனவும், தாம்பூலத்தை ஏற்றுக் கொள்ளும்படியும் நிருபத்தில் வரைந்திருந்தான். ஆனால் அவ்வோலைச் செய்தியிலிருந்து ஒரு பிழை ராணா லட்சசிம்மனைப் பரிகசித்து நகைக்கும் வண்ணம் செய்து விட்டது. சித்தூர்வமிசத்தினருடன்தான் உறவுகொள்ள ஆசைப்படும் செய்தி மட்டும் இருந்ததே அன்றி, யாரைக் குறிப்பிட்டு என்பது பற்றிய விளக்கமேயில்லை!

ஆகவே, தூதுவர்களிடம் அவன், "உங்கள் மன்னர் நாற்பத்தைந்து வயது வாலிபரான

எனக்குப் பெண் கொடுக்க இசைந்துள்ளார் என்று தோன்றுகிறது. மிகவும் சந்தோஷம்'' என்று கூறிக் கலகலவென்று நகைத்தான். அதைத் தொடர்ந்து சபையினரும், தூது வரும்கூட இலேசாக நகைத்தனர். ஆனால் அப்போதுதான் விதி குறுக்கிட்டது!

வேட்டைக்குச் சென்றிருந்த சந்திரசிம்மன் திடீரென்று அங்கு தோன்றினான். தந்தை கூறிய செய்தியின் பிற்பகுதி மட்டும் அவனது செவிகளில் ஆழ்ந்த கருத்தாகப் பதிவுபெற்று விட்டது. அடுத்தகணமே அவன் சபையினுள் வந்து தந்தையின் ஆவலை நியாயமென விளக்கத் தொடங்கி விட்டான்! அரசனும் சபையோரும் திடுக்குற்றனர். பிறகு நடந்தவைகளை லட்சசிம்மன் புதல்வனிடம் எடுத்துக் கூறியும், ஓலையைக் காண்பித்தும் விளக்கம் கூறினான். ஆனால் முடிவாகத் தந்தை விரும்பும் கன்னிப் பெண் தனக்குத் தாயின் முறையாவதாகக் கூறி மறுத்ததோடு மட்டும் அல்ல; ''தந்தையே! தாங்கள் அறிந்தோ, அறியாமலோ இந்த ராஜபுத்திர மகனுக்குப் பெரும் பாக்கியத்தை அளித்து விட்டீர்கள்! வதுவில் வரவிருக்கும் திருமகள் தேவியை ஏன் மறுத்துக் கூற வேண்டும்? இப்போதே மார்வார் மன்னருக்குத் தக்க மரியாதைகளுடன் செய்தியனுப்புங்கள்! அம்மார்வார் மங்கையை என் தாயாகக் கொள்ளும் பாக்கியம் பெற்று விட்டேன். அவர்கள் மூலம் பிறக்கும் புதல்வனும் அவனது வழித்தோன்றல்களுமே இச்சித்தூர் நாட்டின் அரச பீடத்தில் இருப்பார்களென்று ஆணையிடுகின்றேன்! அதன்றியும், எனது திருமணம் மூலம் அரசுரிமைக்குத் தடங்கல்கள் ஏற்படாவண்ணம் நான் என் ஆயுட்காலம் முழுவதையும் பிரம்மச்சரிய மார்க்கத்தின் மூலமே கழிப்பேன். என் பிரதிக்ஞைகளை, அன்னை பவானி தேவியின் திருப்பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன்!'' என்றான் கம்பீரத்துடன்.

சபையில் 'ஆஹா'காரம் எழுந்தது! அன்றொரு காலத்தில்—பாரத வம்சத்துக்கு மூதவோனாக இருந்த பீஷ்மன், தன் தந்தையின் பொருட்டுச் செய்த அதே பிரதிக்ஞை, பதினைன்காம் நூற்றாண்டில், இரண்டாம் முறையாக ராஜபுத்திர சரித்திரத்தில் இடம் பற்றிக் கொண்டது!

சில நாட்களுக்குப் பின்னர், மார்வார் மன்னனின் புதல்வியான ஊர்மிளா பாயைச் சம்பிரதாய முறைகளின்படி மணந்தான் ராணா லட்சசிம்மன்.

ஓராண்டு கழிந்தது. மகாராணி ஊர்மிளா பாயின் மூலம் பிறந்த ஆண் சிசுவைக் கண்டு தந்தையான லட்சசிம்மனும், தமையனான சந்திரசிம்மனும் உள்ளம் பூரித்தனர். அக் குழந்தை, மோகலன் என்ற பெயருடன் ஐந்தாண்டுகள் வளர்ந்தான். அக்காலத்தில் தான், இந்துக்களின் புண்ணிய பூமியாக



விளங்கிவந்த கயாநகரம் முகம்மதியர்களின் மதவெறித் தாக்குதல்களுக்கு உள்ளான செய்திகள் வந்து கொண்டிருந்தன. ராணா லட்சசிம்மன் அவசரமாகச் சபையைக் கூட்டி, தான் கயாநகரத்தைக் கைப்பற்றும் முயற்சியில் ஈடுபடப் போவதாகச் சொன்னான். சந்திரசிம்மன் அப்போருக்கு, தான் செல்லுவதாகத் தந்தையிடம் கட்டளை கோரித் துடித்தான். ஆனால், மூப்பையடைந்த தந்தையின் சமாதானங்களை அவன் ஒப்புக் கொள்ளும்படி நேரிட்டது. அதன்படி, மோகலனுக்குத் தக்க வயது வரும் வரையில், அவனையும், சித்தூர் நாட்டையும் பாதுகாத்து



வரும் பொறுப்பையேற்றுக் கொண்டான் சந்திரசிம்மன். அன்றே, ஐந்து வயதுப் பாலகனாக இருந்த மோகலன் சித்தூர் நாட்டின் பேரரசனாக முடிசூட்டப் பெற்றான்.

இக்காலத்தில்தான், அம் மார்வார் மங்கையின் இயற்கையான குண விசேஷங்கள் வெளியாயின. பிறர் புகழைக் கண்டு, கேட்டுச் சகியாத ராஜபுத்திர ராணிக்கு, சந்திரசிம்மனின் மீது அருவை மிகுந்தது. அவனது புதல்வனை மோகலனின் பெயரில், அவனே அரசை நடத்தி வருவதாகவும், நாளடைவில், அவ்வரசை அவனே கைப்பற்றிக் கொள்ள நினைத்துள்ளதாகவும் அவன் பழி சாற்றினான். இந்தப் பழிச் சொல்லை ஏற்க முடியாமல் சந்திரசிம்மன் ராஜ்யத்தை விட்டே வெளியேறினான்.

சந்திரசிம்மனின் மறைவால் மந்தியபதியின் சரிதையில் புதுமை யேற்பட்டது. ராணி ஹர்மினாபாய் தன் மனத்தையே மந்திரியாக்கிக் கொண்டு ஏதேச்சாதிகாரத்தைத் துவக்கினாள். ஆறுமாத காலத்துக்குள் அநேகம் அவசரச் சட்டங்கள் பிறந்து விட்டன. வெகு காலமாகக் கோழிக் கனவுகள் கண்டு கொண்டிருந்த மார்வார் வேந்தன் ரணமல்லனுக்கும் சரியான வாய்ப்புக் கிடைத்தது! உறவுமுறைகூறிக்கொண்டே, தன் புதல்வனுடன் சித்தூர்க் கோட்டைக்குள் வந்து சேர்ந்தான்.

ராணி ஹர்மினாபாய், தந்தையின் கைப்பொம்மையானாள். அவளது உரிமைகள் அனைத்தும் பறி போயின. அவள் அருமையாகப் பெற்ற மகன்—அநாதைத்தாய் வளர்க்கும் அவலமான சேய் போலானான். அவன்மீது நம்பிக்கையும், விசுவாசமும் கொண்டிருந்த சிலரும் கூட, அருவருப்பும், அலட்சியமும் கொண்டு விட்டனர். ஆயினும், அவள்—மகாராணா லட்சசிம்மனின் பத்தினியென்பதற்காகவும், சந்திரசிம்மனின் தாய் என்பதற்காகவும் மதிப்பு வைத்து, ராஜபுத்திர மக்கள் உள்நாட்டில் கொந்தளிப்பை விளைவிக்காமல் இருந்தனர்.

வெளிப்புறத்தே—கடல் புரண்டு வருவது போன்ற ஆரவாரம்! புழுதி மண் பறக்கவரும் பெரும் படை கண்டு, கொத்தளக் காவலர் மணியையடித்து முழக்கம் விடுத்தனர். "பட்டாணியப்படை வந்து விட்டது! ஆபத்து வந்துவிட்டது! ஆபத்து வந்து விட்டது!" என்ற ஒலங்கள் எண் திக்கிலும் எதிரொலி செய்தன.

அப்போது—அந்தப்புரத்தின் தனி வழியில், மதிற் சுவர்களின் உட்புறத்தில் ஒரு பரிதாபமான நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

"குழந்தாய்! இனி நாம் பேசிக் கொண்டிருக்கச் சமயமில்லை. என்னுடன் சர்ச்சை இடாதே. நான் சொல்வதைக் கேட்பது தான்உனது கடமை! வா, சீக்கிரம் பல்லக்கில் வந்து ஏறு. பட்டாணிய வெறியர்கள் வந்து விட்டார்கள்!" என்றாள் படபடப்பும் பீதியும் நிறைந்த குரலில் ராணி ஹர்மினா.

அவள் எதிரே நின்ற எட்டு வயதுச் சிறுவனை மோகலன் தலையசைத்தவாறே மறுதளித்துக் கொண்டிருந்தான். "அம்மா! நீ வேண்டுமானால் தாத்தாவின் யோசனைப்படி மதுர துர்க்கத்துக்குச் செல். நான் இப்போது உன்னுடன் வர மாட்டேன்! நானும் பட்டாணியர்களை இந்தக் கத்தியினால் வெட்டி வெட்டிப் போடுவேன்!"—இவ்வாறு கூறிக் கொண்டே தம் கரத்திலிருந்த கத்தியை ஆட்டிக் காண்பித்தான் அவன்.

அவனது முரண்பாட்டினால் அந்தத் தாயுள்ளத்துக்குச் சிறிதே மகிழ்ச்சி விருப்பினும், கோபமே அவளை மூத்திக் கொண்டது. அவள் தாவி வந்து அவனது கையிலிருந்த உடைவாளைப் பறித்துக் கொண்டு, அவனையும்

அநாயாசமாகத் தூக்கினான். அதே கணம், மதில் சுவரின் மறுபுறமிருந்த வீரர்கள் குதித்து ராணியின் எதிரே ஓடி வந்தனர்.

ராணிவீறிட்டுக் கதறி விட்டாள். "ஐயோ! பட்டாணியரா?" என்ற பதற்றம் கலந்த வார்த்தைகள் அவளிடமிருந்து வெளியாயின.

வீரர்படை நெருங்கிச் சூழ்ந்து விட்டது. "அம்மா! ஏன் இப்படி நடுங்குகிறீர்கள்? உண்மையான ராஜபுத்திர வீரருக்குப் பட்டமகிஷியாகி, ராஜபுத்திரனுக்குத் தாயுமாகி விட்டபின், தாங்கள் அஞ்சி ஓடவேண்டிய அவசியமே யில்லை! அறத்துக்காக அங்கத்தையும், கற்புக்காகக் கழுத்தையுமிழந்த வீர வனிதைகளின் அடிச்சுவடுகளைக் கொண்டது இச்சித்தூர் நகரம்! தாங்கள் நினைப்பதுபோல் நான் பட்டாணியனுமில்லை. தங்களது அபாக்யைப் புதல்வனான சந்திரசிம்மனேதான்!" இவ்வாறு கூறிக்கொண்டே தன் கையிலிருந்த உடைவாளை அவளது பாதத்தருகே கொண்டு வைத்து நின்றான், அம் முன்னணியிலிருந்த வீரன். அவனது முகம் கறுத்தும், அடர்ந்த உரோமங்கள் நிறைந்தும் மாறுதலடைந்திருந்தது. ஆனால், அக்கூரிய விழிகளின் ஒளியும், குரலொலியின் கம்பீரமும் அவனை மெய்ப்பித்தன.

அடுத்த இமைப் பொழுதிலேயே ராணி ஆவேசம் கொண்டு விட்டவள் போன்று, தம் கரங்களிலிருந்த சிறுவனை இறக்கிவிட்டு, "சந்திரசிம்மா! என்னை மன்னித்துவிடு!" என்று கதறி விட்டாள்.

அந்த ராஜபுத்திரனின் விழிகள் நிறைக் குற்றன. "அம்மா, அபசாரம்! அபசாரம்! தங்கள் நாவினால் எனது மன்னிப்பைக் கோராதீர்கள்-நான் உங்கள் மைந்தன். அம்மா! நடந்ததையெண்ணி வருந்தாதீர்கள். மத்தியபதியின் மறு எல்லையான மாந்தையம்பதியிலேயே தங்கி, எனது நேசப்படைகளுடன் இந்நாட்டைக் கண்காணித்து வந்தேன். இரண்டாண்டுகளுக்குள்ளாக இந்நாட்டின் விபரீத நிலை என் இதயத்தைக் குமுறச் செய்து விட்டது. துராசையின் காரணமாகத் தங்கள் தந்தையார்–தாம் பெற்ற மகளுக்கும், உற்ற பேரனுக்கும் துரோகம் செய்ய முற்பட்டது கண்டு மனம் புழுங்கினேன். இச்சித்தூர்க் கோட்டையின் பொக்கிஷங்களைத் தும் மார்வார் நாட்டுக்குப் பறி போய்க் கொண்டிருந்த நிலைகள் என் பொறுமையின் வரம்பைத் தகர்த்து விட்டன. அதே சமயம், சுயாப்போரின் வெற்றியால் செருக்குண்ட பட்டாணியப்படை மார்வார் நாட்டைக் குறி கொண்டு வந்து சேர்ந்தது. நான் எனது படையுடன் சென்று பட்டாணியரைச் சிதற அடித்தேன். அப்போது அங்கு இந்நாட்டின் உயரிய பொக்கிஷங்களையும், கடத்திவரப்பட்ட பளிங்குக் கற்களின் குவியல்களையும் கண்டதுதான் என் இரத்த ஓட்டத்தில் பைசாச உணர்ச்சியை யேற்படுத்தி விட்டது." சந்திரசிம்மன் தன் வார்த்தைகளை நிறுத்திக் கொண்டு தம் வீரர்களை உற்று நோக்கினான்.

கூட்டம் சலசலத்தது. மதிலின் வெளிப்புறமிருந்து, கைகளைச் சங்கிலியால் பிணைத்துக் கட்டப்பட்டிருந்த கைதியை நான்கு வீரர்கள் தள்ளிக் கொண்டு வந்து நிறுத்தினர். அக் கைதி தலைகுனிந்து நின்றான். அவன்தான்—மார்வார் நாட்டின் இளவரசனான ஜோதன்!

சந்திரசிம்மன் தொடர்ந்தான்: "அம்மா! இதோ தங்களெதிரில் திருட்டு வெளியான குற்றவாளி போல் நிற்கும் கைதி—தங்கள் தமையனார்! இம் மத்தியபதியின் இரண்டாம் எதிரியான இவ்வீரரைப் பட்டாணியரின் பட்டாக் கத்திகளினின்றும் பாதுகாத்தவன் இச்சந்திரசிம்மன்! மத்தியபதியின் முதல் எதிரியாக மாறிய தங்கள் தந்தையார், பட்டாணியர் படையின் வருகையால் சிறிதும் கவலையுறவில்லை. சிறப்பு மிக்க சித்தூர்க் கோட்டை அவ்வன்னியரின் வசமானாலும், அதற்காக அவர் வருந்தப் போவதுமில்லை. ஆனால் மகாராணா லட்சசிம்மரின் மைந்தனான இச்சந்திரசிம்மனின் வருகையே அவர் நிலையைக் குலைத்துவிட்டது. அதன் விளைவாகவே, தங்களையும் குழந்தை மோகலனையும் வேறிடத்துக்கு மாற்றி வைக்கும் தந்திர முறையைக் கையாண்டார். சூழ்நிலையின் வேகம் அவரது சூழ்ச்சியைக் காட்டிக் கொடுத்து விட்டது! இத்தகைய முதல் எதிரியை—அதோ அந்தத் தனிமையான ரதத்தில் தகுந்த பாதுகாப்புகளுடன் அமர்த்தியிருக்கின்றேன். அதன் காரணம், அவர் தங்களைப் பெற்ற தந்தையென்ற ஒரே மரியாதையினால் தான். இப்போது இவ்விரு எதிரிகளையும், தக்க ராஜ மரியாதைகளுடன் மார்வார் நாட்டுக்கு அனுப்பிவிடுவதையே என் கடமையாகக் கொண்டுள்ளேன், தாயே!"

ராணி ஹம்ஸர்மிளா பெரும் பரபரப்பு கொண்டாள்: "அப்பா, சந்திரசிம்மா! உண்மையில் உன்னைப் போன்ற ஒரு உத்தமப் புதல்வனால்தான் இந்த ஹிந்துஸ்தானமே தலை நிமிர்ந்து நிற்கிறது. இன்னல் சூழ்ந்த இந்நாட்டின் நிர்வாகத்தை நீயே ஏற்றுக் கொள், அப்பா. உன் தம்பி அறியாச் சிறுவன்!"

"அம்மா! தங்கள் ஏவலில் இவ்வொன்றை மட்டிலும் நான் மறுப்பதற்கு மன்னியுங்கள். மகாராணா லட்சசிம்மரின் கனவுகளை நனவாக்க வேண்டிய கடமைக்குட்பட்டவனே இப்புதல்வன். இன்றுமுதல் நான் இச்சித்தூர்க் கோட்டையின் உயரே கருடனும்கூட அனுமதியின்றிப் பறக்க முடியாத காவலனாகப் பணிபுரிவேன். ஆனால் மத்தியபதியின் மயிலாசனத்தில் மகாராணாவாகத் திகழ வேண்டியவன் எனது தம்பியான மோகலனே!"—என்றான் சந்திரசிம்மன்.

வீரர்களும் உடைவாளை உயர்த்திப் பிடித்தவாறு, "மத்தியபதியின் மகாராணா மோகலசிம்மர் வாழ்க!" என்ற கோஷங்களை ஐந்து தடவைகள் முழக்கினர்.

அவள் அவனை நெருங்கி வந்து, "சந்திரசிம்மா! உன் உறுதியின்படியே, உன் தம்பி மோகலன் இந் நாட்டின் முடி சூடிய மன்னனாகவே யிருக்கட்டும். ஆனால், மத்தியபதியின் மானத்தையும், மங்காப் புகழையும் நிலை நிறுத்திய சந்திரசிம்மனைச் சரித்திரம் மறந்து விடாது! உன் ஆயுட்காலம் வரையில், இம் மத்தியபதியின் மாண்பு மிக்க முடி சூடா மன்னன் நீதான்!' என்றாள்.

ராணி ஹம்ஸர்மிளாபாயின் விழிகளினின்றும் 'கரகர' வென்று ஆனந்த பாஷ்பம் சுரந்தது.

---

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Pub'ication Private Limited
Managing Editor : T. Sadasivam

# போர்ஹான்ஸ்

## டூத்பேஸ்ட்டை

## எண்ணற்ற ஜனங்கள் ஏன் விரும்புகிறார்கள் என்பதற்கான சில

# முக்கிய காரணங்கள்

**1 ஈறுகளின் ஆரோக்கியம்:** ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாகத் தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப் படுத்திய பல் நோய்களிலிருந்து விசேஷ பாதுகாபபு அளிக்கும் துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

**2 ஆரோக்கியமான பற்கள்:** விசேஷ துவர்ப்புப் பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், முற்றிலும் திடமாயும், ஆரோக்கியமாயும் பற்களுள்ள 15-லிருந்து [illegible]-வயதிற்குட்பட்டவர்களும் கலந்து கொண்டனர், தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட உபயோகித்து வருவதே காரணமென அவர்கள் யாவரும் கூறினர்.

**3 வாய்க்கு நறுமணம்:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி, உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய் நாற்றத்தை அகற்ற உங்கள் நாக்கும், மேல் வாயும்கூட சுத்தமாக இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின்மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்டை வைத்து, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத் துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4 ஒளிவீசும் புன்னகை:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் பற்களின் எனாமல் சிதையவிடாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பது போல், சுத்திகரிக்கும் குணம்வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தைத் தவறாமல் பேணிவருவதன்மூலம் உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை தவறாமல் உபயோகியுங்கள்.

ஒரு பல் வைத்தியரால்
தயாரிக்கப்பட்டது




GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon





